பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்

# தியாகச் செம்மல்

# இமாம் ஹுஸைன் (ரலி)

## பீடிகை

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மூதாதை அப்துல் முனாபின் புத்திரர் அறுவரில் மூத்தவர் அப்துஷ்ஷம்ஸும், இரண்டாமவர் ஹாஷிமும் ஆவர். அப்து முனாப் தம் தந்தை குஸையுடைய ஜீவித காலத்திலேயே தம்முடைய மூதாதையரின் கைங்கரியமான கஃபாவின் பராமரிப்பு, மக்காவுக்கு வரும் யாத்ரீகர்களுக்குத் தண்ணீர் வழங்குதல், உபசரித்து உணவளித்தல் முதலிய திருப்பணிகளைக் கவனித்து வந்தார். குஸை தமது அந்திய காலத்தில் தமக்குப்பின் இத்திருப்பணிகளைத் தம் மூத்த மகன் அப்துத்தார் செய்து வரவேண்டும் என விரும்பினார். எனவே, குஸை தமது மரணத்தின்போது, தமக்குப் பின் இப்பணிகளை அப்துத்தார் மேற்கொள்ள வேண்டுமெனக் கூறிச் சென்றார். அப்து முனாபும் தம் தந்தையின் எண்ணப்படி அவற்றை அப்துத்தாரிடம் ஒப்படைத்துவிட்டார்.

அப்து முனாபுக்குப்பின் அவர் மக்கள் அப்துத்தாரின் மக்களிடம் வாதாடியதில், மக்காவின் கோத்திரத் தலைவர்கள் தாருன்நத்வாவில் கூடிப் பஞ்சாயத்துப் பண்ணி, கஃபாவின் பாதுகாப்பும் திறவுகோலும், கொடியும், தாருன் நத்வாவின் நிர்வாகமும் அப்துத்தாரின் மக்களிடம் இருந்து வருவதென்றும், மக்களுக்குத் தண்ணீர் வழங்குவதும், யாத்திரிகர்களை உபசரித்தலும், அவை சார்பான திருப்பணிகளையும் அப்து முனாபுடைய மக்கள் கவனித்து வருவதென்றும் பகிர்ந்தளித்துவிட்டார்கள். அதன்பின் அப்து முனாபுடைய புத்திரர்கள் அப்துஷ்ஷம்ஸும் ஹாஷிமும் மற்றவர்களும் தங்களுக்குள் திருவுளச் சீட்டுப்போட்டுக் குலுக்கியதில் இத்திருப்பணிப் பாக்கியம் ஹாஷிமுக்குக் கிடைத்

றது. அவரது காலத்திற்குப்பின் இக்கடமைகளை அவரது ஏகபுத்திரர் அப்துல் முத்தலிப் ஏற்றுச் சிறப்பாக நடத்தி வந்தார்.

அப்போது ஹாஷிமுடைய மூத்த சகோதரர், அப்துஷ் ஷம்ஸின் புதல்வர் உமய்யா என்பார் அப்துல் முத்தலிபின் பெருமதிப்பிற்குரிய இத்திருப்பணிகளை அபகரிக்க எண்ணங்கொண்டு வழக்காடினார். ஆனால், குறைஷிகள் அனைவரும் மீண்டும் தாருன் நத்வாவில் கூடிப் பேசி அத்திருப்பணிகளை அப்துல் முத்தலிபே தொடர்ந்து நடத்திவருமாறு சமரசஞ் செய்வித்தனர். எனினும், உமய்யாக்களுக்கு ஹாஷிமிகளின் மீது அழுக்காறு இருந்து கொண்டே வந்தது.

பெருமானார் (ஸல்) அவர்களின் மக்காநகர் வெற்றியின்போது அப்துத்தாரின் வழித்தோன்றலான உதுமான் பின் தல்ஹாவிடமிருந்து கஃபாவின் சாவியைப் பெற்று அதைத் திறந்து உள்ளே சென்று தொழுதபின் வெளியே வந்து தங்கள் திருக்கரத்தால் பூட்டிவிட்டு, திரும்பவும் அச்சாவியை உத்மானிடமே ஒப்படைத்தவர்களாய், "இறைவனின் கட்டளைப்படி இது ஊழிக்கால மட்டும் உம்மிடமும், உம் சந்ததியினரிடமுமே இருந்து வரட்டும்", எனக்கூறி ஒப்படைத்தார்கள். அத்திறவுகோல் அவ்வாறே இன்றுவரை அவர்களிடமே இருந்து வருகிறது. அவ்வாறே இனி என்றும் இருந்து வரும்.

இச்சந்தர்ப்பத்தில் ஹலரத் அலீ (ரலி) அவர்கள் கஃபாவின் திறவுகோலைத் தங்களிடம் ஒப்படைக்குமாறு விண்ணப்பம் செய்தார்கள். அதற்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள், "உமக்குப் பாத்தியப்பட்ட இழந்த ஒன்றை நீர் கோரும், தருகிறேன். மற்றவர்களின் உரிமையைப் பிடுங்கித்தந்து அவர்களை இழப்பாளராக்க உமக்கு நான் துணைநிற்க முடியாது." எனப் பதில் கூறி விட்டார்கள்.

இதே நேரத்தில் யாத்ரீகர்களுக்குத் தண்ணீர் வழங்கும் திருப்பணியையும், ஜம் ஜம் கிணற்றின் பரா

மரீப்புப் பொறுப்பையும் அந்த இணற்றைக் கண்டு பிடித்துத் தோண்டிப் புதுப்பித்த பெருமானார் (ஸல்) அவர்களின் பாட்டனார் அப்துல் முத்தலிபின் புதல்வரும் தங்களின் சிறிய தந்தையுமான அப்பாஸ் (ரலி) அவர் களிடம் ஒப்படைத்தார்கள்; இன்றளவும், இன்ஷா அல்லாஹ் இதுபோல் என்றும், அது அப்பாஸ் (ரலி) அவர்களின் சந்ததியாரிடமே இருந்து வரும்.



## ஹலரத் உதுமான் (ரலி)

உமையாவின் மகன் ஹரீப், அவரின் மகன் அபூசுப் யான், அவரின் மகன் முஆவியா, அவரின் மகன் யஜீத்; உமையாவின் மற்ெருரு மகன் அபுல்ஆஸ், அவரின் மகன் அஃப்பான், அவரின் மகன் உதுமான் (ரலி) அவர்கள்; இவர்கள் குலபாயெ ராஷிதீன்களில் மூன்ரும் கலீபா; பெருமானார் (ஸல்) அவர்களின் திருப்புதல்வியர் ருக்கையா, உம்முகுல்தூம் இருவரையும் ஒருவருக்குப் பின் ஒருவராகத் திருமணம் செய்திருந்தவர்கள்.

மேலே விவரித்தவற்றிலிருந்து ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள் உமய்யா குடும்பத்தைச் சார்ந்தவர் களாக இருந்தார்கள் என்பதை நாம் விளங்கிக் கொள் கிரேம்; இவர்கள் கலீபாவாகிப் பத்து நாட்கள் குறையப் பன்னிரண்டு ஆண்டுகள் ஆட்சி புரிந்துள்ள னர். இதில் முதல் ஆறு ஆண்டுகள் வரை இவர்கள் மீது எவ்விதக் குறையும் கூறப்படவில்லை. பிந்திய ஆறு ஆண்டு ஆட்சியைப் பற்றித்தான் இவர்கள்மீது குறைகள் கூறப்பட்டன. அவை:—

(1) ஆளுநர்களை நியமிப்பதில் இவர்கள் தம் உறவினர்களுக்குச் சாதகம் செய்கிருர்கள்;

(2) இவர்கள் தம் உறவினர்களுக்கு அரசாங்கப் பணத்தை அள்ளிக் கொடுத்தார்கள்;

# பொருளடக்கம்

(3) பெருமானாரின் பிராட்டியாரும் ஹலரத் உமர் (ரலி) அவர்கள் மகளுமான ஹஃப்ஸா பிராட்டியாரிடம் ஹலரத் அபூபக்கர் (ரலி), உமர் (ரலி) இருவரும் சேகரித்து ஒப்படைத்திருந்த திருகுர்ஆன் மூலப் பிரதியே சரியானதென்றும், மற்றவை அப்படி அல்ல என்றும் அறிஞர்கள் முடிவு செய்தபின் இவர்கள் அந்த மற்றப் பிரதிகளை எல்லாம் எரித்துவிட ஏற்பாடு செய்தார்கள்;

(4) இவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் நின்று சொற்பொழிவாற்றிய மிம்பர் படிமீது நின்று சொற்பொழிவாற்றியது. (முந்திய இரண்டு கலீபாக்களும் அவ்வாறு நில்லாது கீழ்ப்படியில் நின்றே குத்பா ஓதினார்கள்.) ஆகியவையாகும்.

உண்மையில் இக்குற்றச்சாட்டுகளெல்லாம் போலித்தன்மை வாய்ந்தவை, கற்பனையானவை; எவ்வாறெனில்:—

(1) உயர் பதவிகளில் நியமிக்கப்பட்ட சிலர் தங்கள் தகுதிக்கேற்பவே நியமிக்கப்பட்டனர்; ஆனால், அவர்கள் உறவினர்களாக அமைந்துவிட்டனர்; தகுதி மட்டுமின்றி அவர்கள் தம் கையை வலுப்படுத்துபவர்களாக இருக்கவேண்டுமென்பதை ஆட்சியாளர் விரும்புவது இயல்புதானே! பிற்காலத்தில் ஹலரத் அலி (ரலி) அவர்கள்கூட இவ்விதம் செய்தார்கள்; எனவே, இதைப் பாரபட்சம் என்று கூறுவது தவறாகும்;

(2) இஸ்லாத்திற்காகத் தங்களின் சொந்தப் பணத்தை வாரி, வாரி வழங்கிய வள்ளல், மக்களின் வரிப்பணத்தை இவ்வாறு விரயம் செய்யத் துணிவாரா? ஒருக்காலுமில்லை; தம் உறவினரான மர்வானுக்குப் பெருந்தொகை அன்பளிப்புச் செய்தார்கள் தாம்; ஆனால், அது தம் சொந்தப் பணத்திலிருந்தே யல்லாது பொதுப் பணத்திலிருந்து கொடுத்ததல்ல.

(3) திருகுர்ஆனை மூலப் பிரதியிலிருந்து பெயர்த்தெழுதிப் பிரதிகள் செய்து இஸ்லாமிய சாம்ராஜ்யத்

தின் முக்கிய நகரங்களுக்கு ஆதாரபூர்வமானவையாக அனுப்பிவரும்பொழுது, மற்ற நிராகரிக்கப்பட்டவை அழிக்கப்பட வேண்டியவைதானே! அவற்றை மக்களிடையே நடமாடவிட்டால் அவை குழப்பத்தை யல்லவா உண்டாக்கிவிடும்!

(4) தாழ்மையின் திரு உருவமாகிய ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள் தங்களை மற்றிரண்டு கலீபாக்களுக்கும் தாழ்மையாக எண்ணும்பொழுது, தரையில் நின்றுதான் குத்பா ஓதவேண்டியதேற்படுகிறது; தரையில் நிற்பது மிம்பரில் நிற்பதற்கீடாகாதல்லவா? அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்குத் தாம் ஈடில்லை என்பதை மக்கள் அறிவார்கள் என்ற உணர்வினுல்தான் அவர்கள் நின்ற படியில் நின்று குத்பா ஓதிவந்தார்கள். அன்றியும் மிஹ்ராபில் பெருமானாரின் இடத்தில் நின்று தொழுகை நடத்தியதைச் சகித்துக் கொண்டவர்கள் மிம்பரில் ஏறிப் பெருமானார் நின்ற படியில் நிற்பதைச் சகிக்க முடியாதது விந்தையே ஆகும்!

## இப்னு ஸபா

அப்துல்லாஹ் பின் ஸபா என்பவனுடைய பூர்வப் பெயர் இப்னுல் ஸவதா என்பதாகும். இவன் யமன் பிரதேசத்திலுள்ள ஸன்ஆ என்னும் இடத்தைச் சேர்ந்தவன். இவன் ஒரு யூதன். முஸ்லிம்களுக்கிடையில் ஒற்றுமை வளர்வதையும், ஹலரத் உதுமான் காலத்திலும் அதற்கு முன்னரும் முஸ்லிம்களுக்கு வெற்றிகளும் செல்வங்களும் பெருகி வருவதையும் இப்பாதகன் கண்டான்; காழ்ப்புக் கொண்டான்; மதீனு நகருக்குச் சென்றான்; வெளிப்படையில் இஸ்லாத்தை ஒப்புக்கொண்டவனுய் முஸ்லிம்களுடன் சேர்ந்து முஸ்லிமைப் போல் வாழ்ந்தான்; முஸ்லிம்களிடம் காணப்படும் குறைகளைத் துருவிக் கண்டுபிடித்து, அவற்றைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்தி இஸ்லாத்தை உலகில் இல்லாமலே அழித்துவிடத் திட்டம் தீட்டினுன்.

இது சமயம் இராக் நாட்டிலே பஸ்ரா நகரில் கொள்ளையடிப்பதையே தொழிலாகக் கொண்ட

ஹக்கீம் பின் ஜப்லா என்பவன் ஒருவன் இருந்தான். வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் முஸ்லிம் சேனையில் சேர்ந்து கொண்டு கொள்ளையடிப்பான். இந்த ஹகீம் பின் ஜப்லாவிடம் அப்துல்லாஹ் பின் ஸபா வந்து சேர்ந்தான். அவனையும் அவன் கூட்டாளிகளையும் தன் நண்பர்களாக மாற்றினான். ''இஸ்லாத்தையும், முஸ்லிம்களின் முன்னேற்றத்தையும் நபி பெருமானார் (ஸல்) அவர்களின் குடும்பத்தினர்களையும் நேசிக்கிறேன்'' என்பது இவனுடைய தாரக மந்திரமாக இருந்தது. படிப்படியாக பஸ்ராவில் முஸ்லிம்களுடைய அன்பையும் அனுதாபத்தையும் பெற்றுக் கொண்டான். அவர்களும் இவன் சொல்வதையெல்லாம் நம்ப ஆரம்பித்துவிட்டார்கள். மக்களிடையே அராஜகத்தைப் பிரச்சாரம் செய்தான். பெருமானாரவர்களின் சட்டபூர்வமான கலீபா (பிரதிநிதி) ஹலரத் அலீ அவர்களே எனவும், அவரை நிராகரித்து மற்றவர்களைத் தேர்ந்தெடுத்தது மக்கள் செய்த மாபெரும் தவறு எனவும், ஹலரத் உதுமானைக் கொலை செய்ய மக்கள் தனக்கு உதவி செய்ய வேண்டும் எனவும் கேட்டுக் கொள்வான். இத்திட்டம் அவன் மதீனாவில் இருக்கும் பொழுதே தீட்டப்பட்டதாகும். நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக அவன் இப்பிரச்சாரத்தை அவசரப்படாமல் செய்து வந்தான்.

இரகசியம் வெளியாகிவிட்டது. பஸ்ராவின் கவர்னர் அப்துல்லாஹ் பின் ஆமிர் இவனை அழைத்து எச்சரித்தார். இனிமேல் பஸ்ராவில் இருந்தால் ஆபத்து என்பதை உணர்ந்து, தன் தோழர்களிடம் அங்கிருந்து கொண்டு அவர்கள் செய்து வரவேண்டிய விஷமங்களுக்கு வழிவகுத்துக் கொடுத்துவிட்டு, இராணுவத் தளமான கூஃபாவுக்குச் சென்றான். அங்கு ஹலரத் உதுமானை விரும்பாத அவர்களைக் குறைகூறும் கட்சியொன்று இருந்தது. இது இப்னு ஸபாவுக்குச் சாதகமாக அமைந்தது. அவனது வெளி வேஷ பக்தியையும், இஸ்லாமியப் போலிப்பற்றையும் உண்மையென நம்பிய கூபா வாசிகள் அவனை நேசிக்கத் தொடங்கினர். மரியாதை

காண்பித்தனர்; போற்றினர்; புகழ்ந்தனர். அவனுடைய கொள்கை காட்டுத் தீ போல் பரவியது.

இவ்விஷயங்கள் கவர்னர் ஸயீத் பின் ஆஸுக்கு எட்டியது. அவர் இப்னு ஸபாவை அழைத்துக் கண்டித்தார். கூஃபாவிலுள்ள பெரியார்கள் பலரும் அவனைச் சந்தேகித்தனர். இனி அங்கிருப்பதும் ஆபத்து என அவன் தன் தோழர்களுக்கு வேலைத் திட்டம் அமைத்துக் கொடுத்துவிட்டு உயிர் தப்பி திமிஷ்க் போய்ச் சேர்ந்தான். ஆனால் இங்கு, முஆவியாவின் தலைநகரில், அவனுக்கு வெற்றி வாய்ப்புக்கிட்டவில்லை. இஸ்லாமியத் தலைநகரங்களிலிருந்து துரத்தப்பட்டது அவனுக்கு எரியும் நெருப்பில் எண்ணெய் வார்ப்பதாயிருந்தது. இஸ்லாத்தின் மீதும், ஹலரத் உதுமான் மீதும் அவன் கொண்டிருந்த காழ்ப்புணர்ச்சி பன்மடங்கு அதிகமாயிற்று.

இறுதியாக அப்துல்லாஹ் இப்னு ஸபா எகிப்து நாடு வந்து சேர்ந்தான். அவன் ஏற்கனவே அந்த நாட்டில் வசித்தவனாதலால் அதன் ஒவ்வொரு பகுதியும் அவனுக்கு நன்றாகத் தெரியும். அவனது அனுபவம் அவனுக்குக் கைகொடுத்தது. வெகு கவனமாக வேலையை ஆரம்பித்தான். ஓர் இரகசியக் குழுவைத் துவக்கி தனது தலைமையில் சிறந்த முறையில் பணியாற்றப் பழக்கினான். நபி பெருமானாரவர்களுடைய குடும்பத்தாரை (அஹ்லுல் பைத்) நேசிக்க வேண்டுமென்பதும், ஹலரத் அலியின் சில உரிமைகளைப் பாதுகாக்க வேண்டுமென்பதும் அவன் மக்களைத் தன்பால் ஈர்க்கக் கையாண்ட இரு செப்பிடி வித்தைகளாகும்.

எகிப்து நாட்டில் அச்சமயம் கவர்னராக இருந்த அப்துல்லாஹ் பின் ஸஅதுக்கு எதிர்ப்பான அரசியல் தலைவர்கள் சிலர் அங்கிருந்தனர். இவர்களும் அப்துல்லாஹ் பின் ஸபாவுடன் சேர்ந்துகொள்வதற்கு வாய்ப்பு ஏற்பட்டது. அப்பொழுது எகிப்துக்கு மேற்கிலும் தெற்கிலும் ஏற்பட்ட அச்சுறுத்தல்களையும், இஸ்தம்பூலிலிருந்து கடல்மார்க்கமாக ஏற்பட்ட எதிர்ப்பையும்

தடுக்கவேண்டிய அவசியம் கவர்னருக்கு ஏற்பட்டது. எனவே, உள்நாட்டு விஷயங்களில் ஆழ்ந்து கவனம் செலுத்தும் அவகாசம் அவருக்குக் கிடைக்கவில்லை! இதனால் இப்னுஸபா தனது குறிக்கோள் நிறைவேறுவதற்குரிய திட்டத்தைத் தயாரிப்பதற்கு நல்லதொரு வாய்ப்புக் கிடைத்துவிட்டது.

அப்பாதகன் ஒழுங்காக வேலையை ஆரம்பித்தான். கூஃபா, பஸ்ரா, திமிஷ்க், எகிப்து இந்த நான்கு பிரதேசங்களிலுமுள்ள அவனுடைய பிரதிநிதிகள், தங்கள், தங்கள் கவர்னர்களுடைய குறைகளையும் கற்பனையான அநியாயங்களையும் வர்ணித்து, மெருகிட்டு, மிகைப்படுத்தி, இதர மாகாணங்களுக்கு எழுதியனுப்புவார்கள். ஆனால், இந்தச் செய்தி கவர்னர்களுக்குத் தெரியாது. எனவே, ஒரு மாகாணத்திலுள்ள மக்கள் மற்ற மாகாணங்களின் கவர்னர்களைக் கொடுங்கோலர்களாகவும், தங்கள் மாகாண கவர்னர் நல்லவர் எனவும் நினைத்துக் கொண்டனர். இம்மாதிரியான கடிதங்கள் மதீனாவிலிருந்த ஸபாயிகளுக்கும் அனுப்பப்பட்டன.

இதன் விளைவாக, ஹலரத் உதுமானால் நியமிக்கப்பட்ட கவர்னர்கள் அனைவரும் கொடுங்கோலர்கள் எனவும், முஸ்லிம்களை இரக்கமின்றிக் கொடுமைப்படுத்துவோர் எனவும் மக்கள் எண்ணத் தலைப்பட்டனர். இதனால் எங்கும் அமைதியின்மையும் பரபரப்பும் ஏற்பட்டது. அப்பொழுதிருந்த கவர்னர்களை எல்லாம் நீக்கிவிட வேண்டுமென்று ஹலரத் உதுமானிடம் வேண்டுகோள் விடுக்கப்பட்டது. அமைதியின்மையின் காரணத்தை நேரில் தெரிந்துவரக் கலீபா அப்பிரதேசங்களுக்குத் தம் சொந்தப் பிரதிநிதிகளை அனுப்பி வைத்தார். அமைதியின்மையின் காரணத்தைக் கண்டுபிடித்து அதற்குத் தகுந்த பரிகாரம் செய்ய வேண்டுமென்று கலீபா விரும்பினார். ஹிஜ்ரி 34-ல் ஹஜ்ஜு முடிந்ததும் கவர்னர்கள் அனைவரையும், மதீனாவின் சில அறிஞர்களையும் ஒன்றுகூட்டி ஆலோசித்தார். சதிக் குழுவினர்களை வரம்பு கடந்து தண்டிக்க

ஹலரத் உதுமான் விரும்பவில்லை; இறுதித் தீர்மானம் எதுவும் காணுமல் கூட்டம் கலைந்துவிட்டது.

ஒரு சமயம் ஒரு முக்கியமான ஆலோசனையின் போது, ஹலரத் அலி அவர்களிடம் :

ஹலரத் உதுமான் :— ‘‘இப்பொழுது நாட்டிலே குழப்பங்கள் தலைதூக்குவதற்கு உண்மையான காரணங்கள் என்ன? அவற்றை எவ்வாறு அகற்ற முடியும்?’’

ஹலரத் அலி :— ‘‘இப்பொழுது நடக்கும் குழப்பங்களுக்கும் கலகங்களுக்கும் உங்களுடைய ஆமில்கள் என்னும் கவர்னர்களுடைய ஒழுங்கீனங்களே காரணமாகும்.’’

ஹலரத் உதுமான் :— ‘‘ஹலரத் உமர் எத்தகைய பண்புகள் உள்ளோரை மாகாண அதிபதிகளாக நியமனம் செய்தாரோ அதே பண்புகள் உள்ளோரையே நானும் நியமிக்கிறேன். அப்படியிருந்தும் பொது மக்கள் ஏன் அதிருப்தி அடைகிருர்கள்?’’

ஹலரத் அலி :— ‘‘ஆம்! நீங்கள் சொல்வது உண்மைதான்; என்ருலும், ஹலரத் உமர் எல்லாக் கடிவாளக் கயிறுகளையும் தமது கையிலே வைத்திருந்தார்; அவருடைய மேற்பார்வை மிகக் கடினமானது; ஆனால் நீங்களோ இதற்கு மாருக நடக்கிறீர்கள்; அவசியத்திற்கு அதிகமாக இரக்கங் காட்டுகிறீர்கள்; உங்களுடைய கவர்னர்கள், இந்த மெல்லினத் தனத்தை அவர்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்கிருர்கள்; அவர்களுடைய நேர்மையற்ற செயல்கள் உங்கள் காதுகளுக்கு எட்டுவதில்லை; ஆனாலும் இந்த நேர்மையற்ற செயல்களெல்லாம் உங்களுடைய நேரடியான கட்டளைகளால் செய்யப்படுவதாகக் குடிமக்கள் நினைக்கிருர்கள். இவ்வாருக, கவர்னர்களுடைய அநியாயச் செயல்களுக்கு நீங்களே பொறுப்பாளியாகிவிடுகின்றீர்கள்’’ என்று வெளியிட்டுக் காட்டினுர்கள்.

மதீனுவில் ஒரு புதிய கட்சி தோன்றியது; கலீபாவுக்கு விரோதமாக, அவர் நிர்வாகத் திறமை

இல்லாதவர், ஆகையால், அவரைப் பதவிநீக்கம் செய்ய வேண்டும்! எனப் பிரச்சாரம் செய்யப்பட்டது. இந்த வகையில் இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் எல்லா முக்கிய தலைநகரங்களிலும் ஸபாயீ கட்சியினர் தங்கள் வேலையைத் தங்கள் தலைவனின் திட்டப்படி ஒழுங்குடன் நிறைவேற்றி வந்தனர் என்பதை நாம் அறிந்து கொள்கிறோம்.

ஹிஜ்ரி 35-ஆம் ஆண்டு ஹஜ்ஜுக்குச் செல்வதாகக் கூறிக் கொண்டு எகிப்திலிருந்து 1000 பேரும், பஸ்ராவிலிருந்து 1000 பேரும், கூஃபாவிலிருந்து 1000 பேருமாக 3000 பேர் ஹலரத் உதுமானைக் கொலை செய்யும் திட்டத்தோடு புறப்பட்டு வந்தனர். இவர்கள் ஓரிடத்தில் சந்தித்து ஒன்று சேர்ந்து மதீனாவை நோக்கி வந்தனர். ஆனால், மதீனாவுக்கு மூன்று மன்ஸில் (முப்பது மைல்) தூரத்தில் அவர்கள் கலந்துபேசித் திட்டம் வகுத்துக்கொண்டு மறுபடியும் மூன்று பிரிவுகளாகப் பிரிந்துவிட்டனர். இவர்களில் கூஃபா வாசிகள் ஹலரத் ஜுபைரையும், பஸ்ரா வாசிகள் ஹலரத் தல்ஹாவையும், எகிப்து நாட்டினர் ஹலரத் அலியையும் கலீபாவாக்க வந்திருப்பதாகக் கூறிக்கொண்டு தனித் தனிக் குழுவாகச் சென்று தங்கினர். பின்னர் அவற்றின் தலைவர் ஒவ்வொருவரும் அவரவரின் அபேட்சகரிடமும் சென்று தங்கள் நோக்கத்தைக் கூறிக் காட்டியபோது, அம்மூன்று பெரியார்களும், பெருமானாரின் பிராட்டியரும் அவர்களின் வேண்டுகோள்களை நிராகரித்துவிட்டார்கள்.

பின்னர் கலீபா அவர்கள், தலைநகரில் கலகக்காரர்கள் வந்திருப்பதை அறிந்து, ஹலரத் அலி அவர்களை அழைத்து சாந்தப்படுத்துமாறு கேட்டுக் கொண்டார்கள். கலகக்காரர்களின் கோரிக்கைப்படி எகிப்தின் ஆளுநரை நீக்கிவிட்டு, அப்பதவியில் முஹம்மது இப்னு அபூபக்கரை நியமனம் செய்து உத்திரவு பெற்றுக் கொடுத்தனுப்பினார்கள் ஹலரத் அலி. கலகக்காரர்கள் பாதி வழி சென்று தாங்கள் கோரி வந்த காரியம் நிறைவேறவில்லை என்பதற்காக சதித்திட்டமொன்று

தீட்டி, தங்களுக்குப் பின்னே, தாங்கள் எகிப்துத் தலைநகரை அடைந்ததும் தங்களைக் கொன்றுவிடுமாறு கவர்னருக்குக் கலீபா கடிதம் அனுப்பியிருப்பதாகப் போலிக்கடிதம் ஒன்றைத் தயாரித்து, அதில் போலி முத்திரையிட்டு, மதீனா திரும்பி வந்து, அதனை ஹலரத் அலி (ரலி) அவர்களிடம் கொண்டு வந்து காண்பித்தனர். ஹலரத் அலி அவர்கள் ஆச்சரியமடைந்தவர்களாக அதனைக் கலீபா அவர்களிடம் கொண்டு சென்று காண்பித்தார்கள், கலீபா பார்த்துவிட்டு இவ்விதக் கடிதம் தாம் அனுப்பவேயில்லை என மறுத்தார்கள். எனினும் கலகக்காரர்கள் தங்கள் காரியத்தை நிறைவேற்றத் திடங் கொண்டனர்.

## முற்றுகை

திடீரென்று ஒரு நாள் அதிகாலை மதீனா நகரின் தெருக்கள் தக்பீர் முழக்கத்தாலும், குதிரைகளின் குளம்போசையாலும் எதிரொலித்தன. மக்களும் நாயகத் தோழர்களும் திடுக்கிட்டெழுந்து வெளியே வந்து பார்த்தார்கள். கலகக்காரர்கள் மறுபடியும் மதீனாவில் நுழைந்துவிட்டார்கள். "பழி வாங்குவோம்! வஞ்சந் தீர்ப்போம்!" என்று அவர்கள் கூக்குரலிட்டார்கள். கலீபாவின் வீட்டைச் சென்று முற்றுகையிட்டனர். முற்றுகை 40 நாட்கள் நீடித்தது. உணவும் தண்ணீரும் உள்ளே செல்லாமல் தடுத்தனர். ஹலரத் அலி (ரலி) அவர்களின் தலையீடு ஏற்பட்டுவிடாமலும் கண்காணித்தனர். எனினும் ஹலரத் அலி (ரலி) அவர்கள் தங்களின் கண்மணிகளான ஹஸன் (ரலி), ஹுஸைன் (ரலி) ஆகிய இரு காளையர்களையும் வாட்களுடன் கலீபாவின் வீட்டுத் தலைவாயிலில் நிறுத்தி வைத்துவிட்டுக் கலகக்காரர்களை அணுகி, "நீங்கள் அனுசரிக்கும் முற்றுகையானது இஸ்லாத்திற்கு விரோதமானது, மனிதத் தன்மைக்கும் மாறுபட்டது. காபிர்கள் முஸ்லிம்களைக் கைது செய்தாலும் அன்னம் தண்ணீர் கொடாமல் தடுக்கமாட்டார்கள். கலீபா உங்களுக்குஎன்ன கேடு செய்தார்? ஏன் அவரை இவ்வாறு

துன்புறுத்துகிறீர்கள்?'' என்று கேட்டார்கள். ஆனாலும், கலகக்காரர்கள் செவிசாய்க்கவில்லை.

## மூர்க்கருக்குப் புத்திமதி :

கலகக்காரர்களின் முற்றுகையின்போது ஒரு நாள் ஹஸரத் உதுமான் (ரலி) அவர்கள் தமது வீட்டின் மேல் தளத்தின்மீது வந்து நின்றுகொண்டு, கல் நெஞ்சர்களான அவர்களை விளித்து,

''நபிகள் நாதர் (ஸல்) மதீனாவுக்கு வந்த நாட்களில் இந்த மஸ்ஜிதுன் நபவி பள்ளிவாசல் மிகவும் சிறியதாய் இருந்தது உங்களுக்குத் தெரியுமே! 'அதை விரிவுபடுத்துவதற்கான நிலத்தை வாங்கி அதை யார் தர்மமாகக் கொடுப்பார்? இதற்கு நற்பிரதியாக அவருக்கு இதைவிட நல்ல நிலம் சுவர்க்கத்தில் கிடைக்கும்,' என்று அண்ணலார் கேட்டார்கள். அப்பொழுது அவர்களுடைய அன்புக் கட்டளைக்கு நான் கீழ்ப்படிந்தேன். ஆனால் இப்பொழுது இந்தப் பள்ளிவாசலுக்குச் சென்று நான் தொழுவதை நீங்கள் தடுகிறீர்கள்!

''ஆண்டவன்மீது ஆணையிட்டுக் கேட்கிறேன், பதில் சொல்லுங்கள்! பெருமானாரவர்கள் மதீனா வந்தபொழுது, 'பீர் ருமா' கிணற்றைத் தவிர வேறு நல்ல தண்ணீருள்ள கிணறே கிடையாது என்பது உங்களுக்குத் தெரியாதா? ''இதை விலைக்கு வாங்கி முஸ்லிம் பொது மக்களுக்குத் தர்மமாகக் கொடுத்து, அதைவிடச் சிறந்ததைச் சுவர்க்கத்தில் பெற்றுக் கொள்வோர் எவருமுண்டா?'' என்று பெருமானார் (ஸல்) வினவிய சமயத்திலே, நான் அவர்களுடைய கனிவுக் கட்டளைக்குக் கீழ்ப்படிந்தேன். பல்லாயிரம் திர்ஹங்கள் கொடுத்து அக்கிணற்றை வாங்கி முஸ்லிம்களுக்கு வக்பு செய்தேன். இப்பொழுது நீங்கள் இந்தக் கிணற்றின் தண்ணீரைக் குடிப்பதினின்றும் என்னைத் தடுக்கிறீர்கள்!

"கஷ்ட காலத்தில் நடந்த தபூக் போருக்காக இஸ்லாமிய சேனைக்கு வேண்டிய தளவாடங்களும் பணமும் நான் கொடுத்து உதவவில்லையா?"

"ஆண்டவனே! இவையெல்லாம் உண்மையே!" என்று மறுமொழி கூறினர் அங்கு கூடி நின்ற ஜனங்கள். ஆனால், அந்தக் குழப்பக்காரர்களின் கல்நெஞ்சம் உருகவில்லை.

மறுபடியும் ஹலரத் உதுமான் (ரலி) தம் பேச்சைத் தொடர்ந்தார்கள் :

"சத்தியமாகச் சொல்லுங்கள்! ஒரு சமயம் எம்பிரான் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அபூபக்கரையும் என்னையும் உடன்கூட்டி ஹிரா மலை மீது ஏறியபொழுது அது அதிர்ந்தது; எம்பிரான் (ஸல்) மலையைக் காலால் இடறி, 'ஹிரா மலையே! அமைதியாயிரு; உன் முதுகில் இப்பொழுது ஒரு நபி, ஒரு சித்தீக், ஒரு ஷஹீன் இருக்கிறார்கள்', என்றதும் அம்மலை அசைவற்று நின்றது. அப்பொழுது நானும் பெருமானார் (ஸல்) அவர்களுடன் இருந்தேன் என்பதும் உங்களில் எவருக்காயினும் நினைவிருக்கிறதா?" என்று வினவியபொழுது அங்கிருந்தவர்கள், "ஆம்! நினைவிருக்கிறது" என்றார்கள்.

மேலும் தொடர்ந்து "ஆண்டவனுக்குக் கூறுங்கள்! ஹுதைபிய்யாவிலே என்னை நபிகள் பிரான் மக்காவுக்குத் தூது அனுப்பியபொழுது, என்னைக் குறைஷிகள் கொன்று விட்டதாகக் கேள்வியுற்று அவர்கள் மீது போர் தொடுக்க வாக்குறுதிப் பிரமாணம் பெற்ற பொழுது எனக்காக அவர்களின் வலது கைமீது இடது கையை அடித்து அதை எனது கையாகப் பாவிக்கவில்லையா?" என்று கேட்டபொழுது அங்கிருந்தோர் "ஆம்! உண்மைதான்!" என்றார்கள்.

இதற்கிடையில் கலகக்காரர்கள் கலக்கமடைந்தார்கள். ஹஜ்ஜுக்குச் சென்ற மக்கள் மதீனா திரும்பி விட்டால் தங்களுடைய திட்டங்கள் தவிடு பொடியாகி

விடுமே என்று பயந்தார்கள்: எனவே துரிதமாக ஹலரத் உதுமானைக் கொலை செய்ய வேண்டுமென்று சதி செய்தார்கள்: இவ்விஷயம் ஹலரத் உதுமான் அவர்களுக்குத் தெரிந்தவுடன், மக்களை நோக்கி,

"மக்களே! நான் என்ன குற்றம் செய்தேனென்று என்னைக் கொலை செய்யத் தயாராகுகிறீர்கள்? இஸ்லாமிய ஷரீ அத்திலே கொலைக்கு மூன்றே காரணங்கள் இருக்கின்றன. முதலாவது, விபச்சாரம் செய்தோனைக் கல்லெறிந்து கொல்ல வேண்டும். இரண்டாவது, எவராவது வேண்டுமென்று எவரையேனும் கொலை செய்து விட்டால், அந்தக் கொலைக்காக அவனைக் கொன்று விடவேண்டும்; மூன்றாவது, மதம் மாறிப் போய் விட்டால் கொலை செய்யப்படவேண்டும்: நான் முஸ்லிமாவதற்கு முன்னே, அதற்குப்பிறகோ விபச்சாரம் செய்யவே இல்லை; நான் ஒருவரையும் கொலை செய்ய வில்லை; இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட பிறகு மதம் மாறவில்லை. இப்பொழுதும் அல்லாஹ் ஒருவன் என்றும் முஹம்மது (ஸல்) அவனது அடியாரும் தூதரு மாவார் என்றும் சாட்சி சொல்லுகிறேன்" என்று கூறினார்கள்.

புரட்சிக்காரருக்குக் காதிருந்தும் கேட்க மறுத்து விட்டார்கள். கண் இருந்தும் பார்க்கப் பிரியப்பட வில்லை: அவர்களுடைய விடாப்பிடியான மூர்க்கத் தனத்தைக் கண்டு முகைரா பின் ஷுஃபாவும் மற்றும் சில தியாகிகளும் கலகக்காரருடன் போரிடலாமென் றும், அல்லது வீட்டின் பின்புறச் சுவற்றில் துவார மிட்டு அதன் வழியே வெளியேறி மக்காவுக்குச் சென்று விடலாமென்றும் அல்லது சிரியாவுக்கு முஆவியா விடம் சென்று விடலாமென்றும் ஆலோசனை கூறி அனுமதி கோரினர்.

சாந்தமூர்த்தியும் எஃகுநிகர் உள்ளமும் படைத்த ஹலரத் உதுமான் அவர்கள், "தனியொரு முஸ்லிமும் வாள் ஏந்தக் கூடாது; இரத்தம் சிந்தக்கூடாது; அவரே என்னுடைய மேலான உதவியாளர்; நான்

எம்பெருமானாரவர்கள் இருக்கும் மதீனாவிலேயே இருப்பேன்'' என உறுதியாகக் கூறிவிட்டார்கள். கலகக்காரர்கள் முன் வாயிலின் வழியே உள்ளே நுழைய முயன்றார்கள். ஹஸனும், ஹுஸைனும் அவர்களைத் தடுத்து நிறுத்திவிட்டார்கள். இதற்கான கைகலப்பில் ஹஸன் (ரலி) அவர்களின் உடம்பில் பல காயங்களேற்பட்டுச் சட்டை செந்நிறமாகிவிட்டது. எனவே, கலகக்காரர்கள் பின்புறமாக அண்டை வீட்டின் சுவற்றிலேறிக் கலீபாவின் வீட்டிற்குள் குதித்தார்கள். அப்பொழுது ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள் தம் கண்முன் திரு குர்ஆனை வைத்து ஓதிக்கொண்டிருந்தார்கள். அந்தப் பிரதி இரத்தக் கறையுடன் இன்றும் உஸ்பெக்கிஸ்தானிலுள்ள பொருட்காட்சி சாலையில் இருந்து வருகிறது. கலீபாவுடன் மனைவியார் நாயிலாவும், குடும்பத்தினரும் அங்கிருந்தனர். கணவரைக் காக்க முயன்றதில் கொடும்பாவிகளான கலகக்காரரின் கட்டி நாயிலாவின் கையைக் காயப்படுத்திவிட்டது; அடிமையும் கொல்லப்பட்டார். கலீபாவை முதலில் தாக்கியவன் காஃபகீ என்பவன்; அவர்களின் உயிரைக் குடித்தவன் கினானா பின் பஷர் என்பவன். கலீபா தமது 82-ம் வயதில் வீரமரணம் எய்தினர். அன்று ஹிஜ்ரி 35 துல்ஹஜ் 18-ம் நாள் (கி.பி. 656 ஜூலை 10) வெள்ளிக் கிழமையாக இருந்தது.

இக்கோர நிகழ்ச்சியை ஹலரத் அலி அவர்கள் அறிந்தவுடன் திக்பிரமையடைந்தவர்களாகத் துடிதுடித்துக் கொண்டு கொலை நடந்த இடத்திற்கு விரைந்தோடி வந்தார்கள். பாதுகாப்பிற்காகப் போதிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்ததால் கலக்க்காரர்கள் சில தினங்களில் முற்றுகையை நீக்கிக் கொண்டு எகிப்துக்குத் திரும்பிவிடுவர் என ஹலரத் அலி (ரலி) அவர்கள் இலேசாக எண்ணினார்கள். ஆனால் விஷயம் கலீபாவின் கொலையில் வந்து முடிந்துவிட்டது. ஸ்தலத்துக்கு வந்த ஹலரத் அலி (ரலி) அவர்கள் பாதுகாப்புப் பணியிலிருந்த முஹம்மத் பின் தல்ஹா, அப்துல்லாஹ் பின் ஜுபைர், தம் மக்களான ஹஸன், ஹுஸைன்,

ஆகியோரையும் மற்றவர்களையும் மிகவும் கடுமையாக ஏசியதுடன் தம் மக்களையும் கன்னங்களில் அறைந்து, "நீங்களெல்லாம் இருந்தும் இக்கொடுஞ் செயல் ஏன் நடந்தது? எவ்வாறு நடந்தது?" என வினவினார்கள். ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள் வீர மரணம் அடையுமட்டும் ஹலரத் அலி (ரலி) அவர்கள் தங்கள் அன்பையும், விசுவாசத்தையும், கடமையையும் அப்பழுக்கின்றி நிதர்சித்துக் காட்டியுள்ளார்கள் என்பது மேற்காணும் விபரங்களிலிருந்து நன்கு புலனாகும்.

## ஹலரத் அலீ (ரலி)

ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள் மரணமடைந்ததும் கிலாபத் பதவி (முஸ்லிம்களின் தலைமைப்பீடம்) காலியாகிவிட்டது. மக்களும் முக்கியஸ்தர்களும் ஹலரத் அலி (ரலி) அவர்களைக் கலீபாவாகப் பதவி ஏற்குமாறு வற்புறுத்தலாயினர். ஆனால், அவர்கள் இப்பெருஞ் சுமையைத் தம்மால் ஏற்க இயலாதெனத் தட்டிக் கழித்து வந்தார்கள். தனயர் இமாம் ஹஸன் அவர்களும் நிலைமை குழப்பமாக இருப்பதாகவும், மதீனாவிலுள்ளவர்கள் கூறுவதை மட்டிலும் பக்க பலமாகக் கருதிக் கொண்டு இதர பாகங்களிலுள்ள முஸ்லிம்களின் கருத்துக்களைத் தெரிந்து கொள்ளாமலும் சம்மதங்களைப் பெறாமலும் கிலாபத்தை ஏற்றுக் கொள்ள வேண்டாம் என் தந்தைக்கு ஆலோசனை கூறினார். இறுதியாக முஹாஜிர்களும் (மக்காவிலிருந்து மதீனாவுக்கு வந்து குடியேறியவர்கள்) அன்ஸாரிகளும் (மதீனாவாசிகள்) வந்து வற்புறுத்தவே, கலீபாவைத் தேர்ந்தெடுப்பது இவர்களின் உரிமையாயிருப்பதாலும், மற்றவர்கள் இவர்களின் முடிவை ஏற்க வேண்டுமென்பது சம்பிரதாயமாக இருந்தாலும், மற்றப்பகுதிகளிலுள்ள முஸ்லிம்களிடம் வாக்குப் பிரமாணம் பெறுவது அவசர, அவசிய தேவையில்லாததாயிருந்ததாலும் ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள் இறந்த மூன்றாம் நாள் திங்கள்கிழமை

மஸ்ஜிதே நபவியில் பைஅத் (விசுவாசப் பிரமாணங்கள்) பெற்று ஹலரத் அலி (ரலி) அவர்கள் குலபாயெ ராஷிதீன்கள் வரிசையில் நான்காவது கலீபாவாகப் பதவி ஏற்றார்கள். சிலர் ஹிஜ்ரி 35 துல்ஹஜ் பிறை 25 வெள்ளியன்று எனக் கூறுவர்.

நபித்தோழர்களான தல்ஹாவும், ஜுபைரும் ஹலரத் உதுமான் (ரலி) அவர்களைக் கொலை செய்தவர்களைக் கண்டுபிடித்து தக்க தண்டனை விதிக்கவேண்டும் என்ற நிபந்தனையின்மீது பைஅத் செய்தார்கள். சஹாபி ஸஅத் பின் அபீவக்காஸ், மற்றவர்கள் எல்லாரும் பைஅத் செய்தபின் தாம் செய்வதாகக் கூறினார். அப்துல்லாஹ் பின் உமர் பைஅத் செய்யத் தயங்கியவராக மக்காவுக்குப் புறப்பட்டுவிட்டார். மற்றும் முஹம்மது பின் மஸ்லமா, உஸாமா பின் ஜைத், ஹஸன் பின் தாபித், கஅப் பின் மாலிக், அபூஸயீத் பின் கித்ரீ, நுஃமான் பின் பஷீர், ஜைத் பின் தாபித், முகைரா பின் ஷுஃபா, அப்துல்லாஹ் பின் ஸலாம் ஆகியோரெல்லாம் ஏது காரணத்தாலோ பைஅத் செய்து தரவில்லை. இவர்களில் பெரும்பாலோர் ஸிரியாவுக்கும், சிலர் மக்காவுக்கும் சென்றுவிட்டார்கள்; சிலர் மதீனாவிலிருந்து கொண்டே பைஅத் செய்யாமல் மௌனித்து இருந்தார்கள். இத்தகையோரைக் கலீபா அழைத்து விளக்கம் கேட்டபோது, நாட்டில் இன்னும் குழப்பம் ஒடுக்கப்படவில்லை; ஆதலால், பைஅத் செய்யவில்லை எனவும், மேலும் தாங்கள் எந்தக் கட்சியிலும் சேராமல் தனியாக ஒதுங்கியிருக்கப் போவதாகவும் கூறினார்கள்.

இந்த நிலைமையில் ஹலரத் தல்ஹா, ஜுபைர் இருவரும் மறுபடியும் ஹலரத் அலி (ரலி) அவர்களிடம் வந்து ஹலரத் உதுமான் (ரலி) அவர்களுடைய கொலைக்குப் பழிக்குப்பழி வாங்குவது பற்றி வற்புறுத்தினார்கள். அப்போது கலீபா அவர்கள், "எனது அதிகாரம் வலுவடைந்ததன் பிறகே குற்றவாளிகளைக்

கண்டுபிடித்து நியாயமான தீர்ப்பளிக்க என்னால் ஆன மட்டும் நான் முயற்சி செய்வேன்; அதை நான் இப் பொழுதே செய்துவிட முடியாது; ஏனென்றால், மதீனா வில் இன்னும் சதிகாரர்கள் பலத்துடனேயே இருந்து கொண்டிருக்கிறார்கள்,'' என்று பதில் கூறினார்கள். இது அவ்விருவருக்கும் திருப்தி அளிக்கவில்லை. அத்துடன் ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள்மீது அதிக அனுதாபங் கொண்டவர்கள், ''இந்தக் கொலை சம்பந்தமாகக் கலீபா அக்கறை காட்டி நடவடிக்கை எடுத்துக் கொள்ளமாட்டார்; கொலையாளிகள் தப்பித்துக் கொள்வார்கள்'' என எண்ணினார்கள். பொது மக்களிட மும் இத்தகைய சந்தேகம் பரவ ஆரம்பித்தது. அபிப் பிராய வேறுபாடுகளும் கருத்து மோதல்களும் தலை தூக்கின.

ஹலரத் அலி (ரலி) அவர்கள் கலீபாவாக அமர்ந்த மூன்றாம் நாள் மதீனாவுக்குள் புகுந்திருக்கும் வெளியூர் சதிகாரக் கும்பலை அகற்றக் கருதி, ''வெளியூர்களி லிருந்து வந்து மதீனா நகரில் வசிக்கும் அனைவரும் அதைக் காலி செய்து கொண்டு தங்கள் சொந்த ஊர் களுக்குத் திரும்பிவிட வேண்டும்.'' எனக் கட்டளை பிறப் பித்தார்கள். ஆனால், புரட்சிக்காரர்கள் கட்டளைக்கு மாற்றமாக மதீனாவிலேயே தங்கிக் கொண்டனர்.

## தொல்லைக்குக் காரணம் :

மேலும், ஹலரத் தல்ஹாவும், ஜுபைரும் கலீபா விடம் வந்து ஒருவர் பஸ்ராவுக்கும் மற்றவர் கூபாவுக் கும் செல்ல அனுமதி வேண்டுமென்றும், அவ்விடங் களில் தங்களுக்குச் செல்வாக்கிருப்பதால் அங்குள்ள வர்களை ஹலரத் அலி (ரலி) அவர்களின் கிலாபத்தை ஏற்றுக் கொள்ள முயற்சிப்பதாகவும் கூறினர். ஆனால், கலீபா அவர்கள் இவ்விருவரும் மதீனாவை விட்டும் வெளியேறினால் எங்கே குழப்பம் அதிகரித்துவிடுமோ என்ற ஐயத்தினால் இவர்களின் கோரிக்கையை நிராகரித்துவிட்டார்கள்.

இதையறிந்த அறிஞரும் அரசியல் நிபுணருமான முகைரா பின் ஷுஃபா என்பவர் கலீபாவிடம் வந்து, இவ்விரு பெரியார்களையும் வெளிச் செல்ல அனுமதியாததும், ஹலரத் உதுமான் காலத்திய கவர்னர்களை நீக்க உத்தேசிப்பதும் தவறு என எடுத்துக் காட்டினார்; இவரைப் போன்றே அப்துல்லாஹ் பின் அப்பாஸ் அவர்களும் எடுத்துக் கூறினார்கள்; எனினும் கலீபா தமது கருத்தை மாற்றிக் கொள்ளவில்லை.

இதைத் தொடர்ந்து, ஹலரத் உதுமான் (ரலி) காலத்தில் இஸ்லாமியக் குடியரசில் குழப்பங்கள் நேர்ந்தமைக்கு கவர்னர்களே காரணமாவர் எனக் கலீபா கருதினார்கள். எனவே, அக்காலத்திய கவர்னர்கள் அனைவரையும் நீக்கிவிட்டதாகக் கட்டளை பிறப்பித்து வேறு கவர்னர்களை நியமித்து அனுப்பி வைத்தார்கள்.

அப்துல்லாஹ்வும், முகைரா (ரலி)யும், "நீங்கள் உங்களின் திட்டத்தைக் கைவிட முடியாவிட்டாலும் முஆவியாவை மட்டும் கை வைக்காதீர்கள். அவர் சிரியாவில் மெத்த அதிகாரமும், மிக்க செல்வாக்கும் பெற்றுத் திகழ்கிறார். மேலும் அபூபக்கர் (ரலி) காலத்திலிருந்தே அவர் அங்கு ஆளுநராக இருந்து வருகிறார்; அவர் அங்கு இருந்து வருவதினால் உங்களுக்குக் குறை ஏதும் ஏற்பட்டுவிடாது" எனக் கூறினர். ஹலரத் அலி (ரலி) அவர்கள் இவ்விருவரின் விவாதங்களையும் ஒதுக்கித் தள்ளிவிட்டு, "அல்லாஹ்வின்மீது ஆணையாக! நான் முஆவியாவை இரண்டு தினங்களுக்குக் கூடப் பதவியில் நீடித்திருக்க விடமாட்டேன்" என்று கூறிவிட்டார்கள். ஆனால் அலி (ரலி) அவர்கள் அவரைப் பதவியில் நீடிக்கவிட்டிருந்தால் முஆவியா [ரலி] அவருக்கு விசுவாசப் பிரமாணம் செய்தே தீரவேண்டியதேற்பட்டிருக்கும்.

ஹலரத் அலி (ரலி) அவர்கள் உண்மையான இஸ்லாமியத்தில் மிகுந்த பற்றுள்ளவர்கள், உறுதியுள்ளவர்கள்; அவர்களின் வாழ்க்கையே அவற்றின்படி

உருவாக்கப்பட்டதாகும். அவர்கள் கலீபா பதவியை ஏற்றதுமே முழு சமூக அமைப்பையும் இஸ்லாத்தின் அடிப்படையில் மாற்றியமைக்க முற்பட்டார்கள். அவர்களுக்கு முன் ஹலரத் அபூபக்கர் (ரலி), உமர் (ரலி) இருவரும் இம்முறையைக் கையாண்டே ஒப்பற்ற வெற்றி கண்டார்கள். அதுபோன்றே அலி (ரலி) அவர்களும் வெற்றி காண வேண்டுமென எண்ணங் கொண்டார்கள்.

ஆனால் இவர்கள் கிலாபத் பதவிக்கு வந்த காலத்தில் வாழ்ந்த மக்கள் அவர்களின் காலத்தில் வாழ்ந்த மக்களைப் போன்ற எளிமையும், பாலைவன வாழ்க்கையும், நாகரிகமில்லாத சஞ்சாரப் போக்கும் உடையவர்களல்ல. மாறாக, ஏராளமான செல்வத்திலும், பாரசீக, பைஸாந்திய நாகரிகங்களைக் கடன் வாங்கிய சுகபோகிகளாயும் வாழ்ந்தார்கள். அதிலும் உதுமான் (ரலி) அவர்களின் தாராளக் கை அன்னவர்களின் ஆடம்பர வாழ்க்கையின் கயிற்றை அதிகமாக நீளவிட்டிருந்தது. கலீபா உதுமான் (ரலி) அவர்களின் பிந்திய கால ஆட்சியில் சட்டத்தை மதியாத, அதைப் புறக்கணித்து நடக்கும் ஒரு துச்சநிலை எங்கும் பரவி நிலவி நின்றது. இவ்விதமான சமூகப் பொருளாதாரத் தீமைகளின், பின்னணியில்தான் அலீ (ரலி) அவர்களின் செப்பனிட்டுச் சீர்திருத்தும் பணிகள் போராட வேண்டியதிருந்தன.

இந்த விதமான எல்லாக் கெட்ட செயல்களை, மற்றவர்களின் எச்சரிக்கைகளைக் கவனத்தில் கொள்ளாது, தைரியத்துடன் எதிர்த்துத் தாக்குவதில் துணிச்சல்கொண்டார்கள். அவர்கள் கொண்ட மன உறுதி அவர்கள் எடுக்கும் நடவடிக்கைகளின் விளைவுகளைப் பற்றி எண்ணிப் பார்க்க இடங் கொடுக்கவில்லை.

## முஆவியாவின் நீலிக்கண்ணீர்

சிரியாவுக்கு கவர்னராக அனுப்பப்பட்ட ஸஹல் பின் ஹனீஃப் மதீனாவிலிருந்து புறப்பட்டு தபூக்

என்னும் இடத்தை அடைந்ததும் முஆவியாவின் காவல் படை அவரைத் தடுத்து நிறுத்தி தலைநகர் திமிஷ்குக்குச் செல்ல விடாமல் மதீனாவுக்கே திருப்பி அனுப்பி விட்டனர். இதனை அறிந்த கலீபா அவர்கள் முஆவியாவுக்குக் கடிதம் ஒன்று எழுதினார்கள். அதில், "முஹாஜிரீன்களும் அன்ஸாரிகளும் ஏகமனதாக என்னைக் கலீபாவாக ஒப்புக்கொண்டு எனக்கு பைஅத் (விசுவாசப் பிரமாணம்) செய்திருக்கிறார்கள். ஆகையால் நீர் எமக்குக் கீழ்படிந்து நடந்துகொள்ள வேண்டும். இன்றேல், போர் தவிர்க்க முடியாததாகி விடும்," எனக் குறிப்பிட்டிருந்தார்கள். இந்தக் கடிதத்தை ஜரீர் அப்துல்லாஹ் பஜலி எடுத்துச் சென்று அமீர் முஆவியாவிடம் சேர்ப்பித்தார். அவரிடம் உடனடியாக பதில் எழுதிக் கொடாமல் சிரியாவில் தாமதிக்கச் செய்துவிட்டுத் தம் சொந்தத் தூதர் கபீஸா என்பவரிடம் பதில் கடிதத்தைக் கொடுத்துச் சில இரகசியச் செய்திகளையும் சொல்லியனுப்பினார் அமீர் முஆவியா. கபீஸா திறமை வாய்ந்தவர். இவர் மதீனா வந்ததும் ஜனங்கள் அதிகமாக நடமாடும் கடைத் தெருவில் நின்று கொண்டு, "தோழர்களே! சிரியா நாட்டிலே ஐம்பதாயிரம் பெரியவர்கள், ஹலரத் உதுமானுடைய இரத்தம் தோய்ந்த அங்கியைப் பார்த்துக் கண்ணீர் வடித்துக் கொண்டிருக்கிறார்கள். அநியாயமான இந்தக் கொலைக்குப் பழி வாங்கப்படாத வரையில் அவர்களுடைய வாள் மீண்டும் உறைக்குள் புக மாட்டாது" என்று பெரியதொரு புரளை உணர்ச்சி ததும்ப அவிழ்த்து விட்டார். உண்மையில் சிரியா வாசிகள் அந்த அங்கியைக் கண்ணால் பார்த்ததேயில்லை.

இதை அங்கு நின்று கேட்டுக் கொண்டிருந்த கலீபாவின் ஆதரவாளர்களில் ஒருவர், "முஹாஜிரீன்களையும் அன்ஸாரிகளையும் பயமுறுத்துகிறீரா? ஹலரத் உதுமானுடைய அங்கி ஹலரத் யூசுஃப் நபியுடைய அங்கி இல்லையே! ஹலரத் யஃகூபைப் போன்று அமீர் முஆவியாவுக்கு அவ்விதமான ஆழ்ந்த துக்கமும் இல்லையே!" என்று கூறினார்.

உண்மையில் முஆவியா (ரலி) முஸ்லிம் உலகின் கலீபாவான பின்னருங்கூட உதுமான் (ரலி) அவர்களின் கொலையாளிகளைக் கண்டுபிடித்துத் தண்டிப்பதற்கு எவ்விதப் பிரயத்தனமும் மேற்கொள்ளவில்லை. மாறாக, அவர்களைக் கொன்றவர்களெனக் கருதப்பட்ட இராக் மக்களுக்குப் பொது மன்னிப்பு வழங்கிவிட்டார் முஆவியா (ரலி);

ஹலரத் அலி (ரலி) அவர்களுக்கு சிரியா மாகாண கவர்னராயிருந்த அமீர் முஆவியா ஒருவரே விசுவாசப் பிரமாணம் செய்து கொடுக்காமல் இருந்து வந்தார்; ஹலரத் அலி (ரலி) அவர்களின் கிலாபத்தை ஏற்க மறுத்தார். அவர் அம்மாகாணத்தில் ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் கிலாபத் கால முதல் தொடர்ந்து இருபத்திரண்டு ஆண்டுகளாகக் கவர்னர் பதவியிலிருந்து வருகிறார்; இந்த நீண்ட கால ஆட்சியானது அவரது உள்ளத்திலே நிரந்தரமான சுயேச்சையுடன் இருக்க வேண்டுமென்ற பேராசையை உண்டாக்கிவிட்டது;

இவரின் மூத்த சகோதரர் யஜீதை திமிஷ்கைக் கைப்பற்றுவதற்காக கலீபா அபூபக்கர் (ரலி) அவர்கள் அனுப்பியபொழுது அப்படையெடுப்பில் அவரும் கலந்து கொண்டார். யஜீது திமிஷ்கைக் கைப்பற்றி அதன் முதல் ஆளுநராக நியமிக்கப்பட்டிருந்தார்; அவர் இறந்தபொழுது முஆவியா (ரலி) திமிஷ்கின் கவர்னராக நியமிக்கப்பட்டார்; இவர் அசாத்தியத் திறமையும், தூரநோக்கும் கொண்டுள்ளவர் என்பதைக் கண்டறிந்த கலீபா உமர் (ரலி) அவர்கள் இவரைச் சிரியா தேசம் முழுமைக்கும் ஆளுநராக நியமித்தனர்;

உதுமான் (ரலி) அவர்களின் கிலாபத்தில் முஆவியா (ரலி) அவர்களின் செல்வாக்கும் அதிகாரமும் மேலும் அதிகமாகியது. சிரியாவைத் தவிர இராக்கின் வடபகுதி, அர்மீனியா ஆகியவையும் இவரது ஆட்சியின் கீழ் ஒப்படைக்கப்பட்டன. மற்ற ஆளுநர்கள் தங்களின் ஒவ்வொரு நடவடிக்கைக்கும் மதீனாவிலுள்ள

கலீபாவின் அனுமதியைப் பெற வேண்டியதிருந்த நிலையில் முஆவியா (ரலி) தன்னிச்சையாகக் காரியங்களாற்ற அனுமதிக்கப்பட்டிருந்தார். இதன் காரணமாக இவர் தம்முடையவும் உமையாக்களுடையவும் பலத்தை நன்கு உருவாக்கிக் கொண்டார். முன்னையோ பின்னையோ எந்த நேரத்திலாகிலும் தாம் தூக்கி எறியப்படலாம் என்பதை யூகித்தறிந்த இவர், அவ்வபாயத்தைச் சமாளிப்பதற்கான ஏற்பாடுகளை முற்கூட்டியே செய்து கொள்ள ஆயத்தமானார். தம்மைச் சுற்றிலும் நெருங்கிய உறவினர்களையும் நண்பர்களையும் சேகரம் செய்து வைத்துக் கொண்டு அவர்களுக்குப் பதவிகளும் பணங்களும் மானியங்களும் அளித்து நப்பாசைப் படுத்தி வைத்துக் கொண்டார். தன்னை மேலும் பலப்படுத்திக் கொள்ளும் வகையில் சிரியாவில் செல்வாக்கு மிக்க பனூ கலப் வர்க்கத்தின் பெண் ஒருவளையும் திருமணம் புரிந்து கொண்டார். இவ்விதமான நடவடிக்கைகளால் சிரியா, உமையாக்களின் கேந்திரமாகவும், முஆவியாவைத் தூக்கி எறிய நினைப்பவர்களுக்கு அசைக்க முடியாத கோட்டையாகவும் திகழ்ந்தது.

அத்தகைய சுவாதீனம் அடைவதற்கு இந்த நெருக்கடியான நிலைமையையும் தமது உமய்யா இனையைச் சார்ந்த ஹலரத் உதுமான் (ரலி) உடைய கொலையையும் அரியதொரு வாய்ப்பாக கருதினார். ஹலரத் உதுமான் (ரலி) உடைய கிலாபத் ஆட்சியும், உமய்யா குடும்ப கவர்னர்களை நீக்கியதும் நீண்ட காலமாக மறைந்திருந்த ஹாஷிம் — உமய்யா கோத்திரப் பகைமைக்குப் புத்துயிரளித்தன. ஹலரத் அலீ (ரலி) அவர்களால் நீக்கப்பட்ட உமய்யாக் குடும்ப கவர்னர்கள் எல்லாம் அமீர் முஆவியாவிடம் வந்து சேர்ந்தனர். உமய்யாக் கிளையோடு தொடர்பில்லாத பல அரபிக் கோத்திரங்களும் அமீர் முஆவியாவின் கோலாகல ஆட்சியின் சிறப்பைக் கண்டு அவருக்கு உதவியாளராகி விட்டன. சில ஸஹாபக்களும் அமீர் முஆவியாவுக்குப் பக்க பலமாக நின்றார்கள்.

## கட்சி மாறிகள்

ஹலரத் உதுமான் (ரலி) அவர்களுடைய மரணத்திற்கு முன்னர் அம்ருபின் ஆஸ் மதீனாவிலிருந்து புறப்பட்டு எருஸலம் சென்றார். இவர் ஹலரத் உமர் (ரலி) அவர்களின் காலத்திலே எகிப்து நாட்டை வென்றவர். இப்பொழுதுள்ள இஸ்லாமிய அரசியல் நிலைமையை ஆராய்ந்து அமீர் முஆவியாவும் அவரை வரவேற்று உபசரித்துப் பதவியில் இருத்தி படிப்படியாக உயர்த்தினார். இறுதியாக அமீர் முஆவியாவின் முதல் அமைச்சராகவும், முக்கிய ஆலோசகராகவும் அம்ருபின் ஆஸ் இடம் பெற்றார்.

ஹலரத் முகைரா பின் ஷுஃபா என்னும் அரசியல் நிபுணர் முதலில் ஹலரத் அலி (ரலி) அவர்களையே ஆதரித்து நின்றார். பின்னர் யாது காரணத்தாலோ முஆவியாவின் கட்சியில் வந்து சேர்ந்து கொண்டார்.

ஹலரத் உமரின் கொலையில் கலந்திருந்த ஹுர்முஸான் என்ற நவ்முஸ்லிமைத் தக்க ஆதாரமில்லாமல் உபைதுல்லாஹ் பின் உமர் கொன்றுவிட்டார். ஹலரத் உதுமான் (ரலி) இவரை விசாரணை செய்து தண்டிக்காது கிடப்பில் போட்டுவிட்டார்கள். இப்பொழுது ஹலரத் அலி (ரலி) அவர்கள் கலீபாவாகிவிட்டதால் எங்கே அந்தப் பழைய வழக்குப் புதுப்பிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுவோமோ என்ற பயத்தால் இவர் முஆவியாவிடம் சரண் புகுந்துவிட்டார். ஹலரத் அலி (ரலி) அவர்களின் கட்சியில் மற்றொரு அரசியல் நிபுணரான ஜியாத் பின் அபீயா என்பவரும் அமீர் முஆவியாவின் கட்சியில் வந்து இணைந்து கொண்டார்.

கலீபா உதுமான் (ரலி) அவர்களால், தலைசிறந்த நபித் தோழர்களான ஸஅதுப்னு அபீவக்காஸ், அபூ மூஸா அஷ்அரீ, அபூஹுரைரா, அம்ருப்னுல் ஆஸ் போன்றவர்களுக்கு அளிக்கப்பட்ட நிலங்கள், சொத்துகளும் பைத்துல் மாலுக்குத் திரும்ப எடுத்துக் கொள்ளப்பட்டன. இவை நீதியை அடிப்படையாகக்

கொண்டு அலி (ரலி) அவர்களால் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளாகும். ஆனால், இவற்றால் அவர்களெல்லாம் மனக்கசப்பு அடைந்தவர்களாக, முஆவியா (ரலி) அவர்களின் அனுதாபிகளாக மாற ஆரம்பித்து விட்டனர். அப்துல்லாஹ் பின் அப்பாஸ், முஸ்கலா பின் ஹீரா போன்ற நெருங்கிய உறவினர்களும் நண்பர்களுங்கூட அலி (ரலி) அவர்களது தீவிர நடவடிக்கைகளால் அவர்களின் விஷயத்தில் அக்கறை குன்றியவர்களாயினர்.

முஆவியா (ரலி) தம்முடைய வெற்றியைப் பற்றியும் அலி (ரலி) அவர்களின் தோல்வியைப் பற்றியும் குறிப்பிடும்பொழுது, "அலி தம்முடைய இரகசியங்களை மூடி மறைப்பதில்லை. ஆனால், நான் அவற்றை பத்திரமாகக் காத்துக் கொள்வேன்; எதிர்நோக்கும் அபாயங்களை சந்திப்பதற்கு நான் எப்பொழுதும் தயார் நிலையிலிருப்பேன். ஆனால் அவரோ அவற்றைக் கண்ணெதிரில் பிரத்தியட்சமாகக் காணுவது வரை அவற்றைப் பற்றிக் கவலை காட்டமாட்டார். என் ஆட்கள் என்னுடைய உத்தரவுகளை விசுவாசத்துடன் நிறைவேற்றுவர். ஆனால், அவருடைய ஆட்களோ வெளியில் அவருடைய உத்தரவுகளை அலட்சியம் செய்து விடுவர்."

ஸிரியா நாட்டுத் தலைவர்களையெல்லாம் முஆவியா தமது கோலாகல ஆட்சியைக் கொண்டு நப்பாசை காட்டி தம் ஆதரவாளர்களாக்கி, அவர்களைக் கொண்டே ஹலரத் உதுமான் (ரலி) அவர்களின் கொலையாளிகள் கண்டுபிடித்துத் தண்டிக்கப்படாமலிருப்பதைக் காரணங்காட்டி, ஹலரத் அலி (ரலி) அவர்கள்மீது ஸிரியாவில் வெறுப்பையும் துவேஷத்தையும் வளர்த்து வைத்துவிட்டார்.

இந்த விதமான சூழ்நிலையிலேயே அமீர் முஆவியா, ஹலரத் அலி (ரலி) அவர்களைக் கலீபாவாக ஏற்று பைஅத் (விசுவாசப் பிரமாணம்) செய்துகொடுக்க முன்வருவாரா? வரமாட்டார் என்பதை நாம் நிதரிசனமாக அறிகிறோம்.

## ஒட்டகப் போர்

இதற்கிடையில், பெருமானார் (ஸல்) அவர்களின் பிராட்டியார் ஆயிஷா நாச்சியார் அவர்கள் ஹஜ் செய்வதற்காக மக்கா சென்றுவிட்டு மதீனா திரும்பிக் கொண்டிருந்தார்கள். வழியில் ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள் கொலையுண்ட செய்தியையும், ஹலரத் அலி (ரலி) அவர்கள் கலீபாவான செய்தியையும், மதீனாவில் குழப்ப நிலை நிலவுவதையும் கேள்வியுற்றார்கள். ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள் அநியாயமாகக் கொலை செய்யப்பட்டதற்கு மிகவும் வருந்தினார்கள். "ஹலரத் உதுமான் (ரலி) குற்றமற்றவர். அவரைக் கொலை செய்தோரை தண்டிக்கவேண்டும். முந்திய கலீபாக்கள் செய்ததைப் போன்றே அவரும் குறைந்த வயதுள்ளோரை கவர்னர்களாக நியமித்தார். இதில் அவர்மீது வீண்பழி சுமத்துவது தகாது. இந்தச் சதிகாரர்கள் இறைவனின் கட்டளைக்கு விரோதமாகவே கொலை செய்துள்ளார்கள். போர் புரியவும், இரத்தம் சிந்தவும் தடுக்கப்பட்டுள்ள மாதத்தில் இந்தக் கொலையைச் செய்திருக்கிறார்கள். நபி பெருமானாரது ரவ்லாஷரீபுள்ள மதீனாவின் புனித மண்ணிலே இக்கொலை நிகழ்ந்தது கொடிதினும் கொடிது. ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள் தம்மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுக்குச் சரியான விளக்கங்கள் கொடுத்த பின்பும் அக்கொலை பாதகர்கள் இவ்வேலையைச் செய்திருக்கிறார்கள்," என்க் கூறி ஆறாத் துயரடைந்து மீண்டும் மக்கா திரும்பிவிட்டார்கள்.

மதீனாவின் குழப்பநிலை தணியாததைக் கண்டு ஹலரத் தல்ஹாவும், ஜுபைரும் ஹலரத் அலி (ரலி) அவர்களின் அனுமதிபெற்று மக்காவுக்கு வந்துவிட்டார்கள். இங்கு ஆயிஷா பிராட்டியாரைக் கண்டு மதீனாவின் நிலவரங்களை எடுத்துக் கூறினார்கள். இவற்றால் ஹலரத் உதுமான் (ரலி) கொலைக்குப் பழிவாங்க வேண்டுமென்ற அவரது எண்ணம் வலுப்பெற்றது.

அன்றியும், மதீனாவிலிருந்து மக்கா வந்த உமய்யாக் கோரத்திரத்தார் சிலர் ஹலரத் உதுமான் (ரலி) கொலைக்குப் பழிவாங்க வேண்டுமென இயக்கஞ் செய்து, ஹலரத் ஆயிஷாவுடன் சேர்ந்து இராக், கூபா, பஸ்ரா முதலிய பிரதேசங்களிலும் இதைப் பற்றிப் பிரச்சாரம் செய்தார்கள். இராக்கிலுள்ள பைத்துல்மால் என்னும் அரசாங்கக் கருவூலத்தைக் கைப்பற்ற வேண்டுமென்றும் திட்டமிட்டார்கள். இந்தப் படையில் ஹலரத் ஜுபைர், தல்ஹா, மர்வான் பின் ஹகம், ஸயீத் பின் ஆஸ் என்பவர்களும் ஆயிரத்தி ஐந்நூறு மக்கா வாசிகளும் இருந்தனர். பதவி நீக்கம் செய்யப்பட்ட எமன் கவர்னர் யஃலா பின் மம்பா என்பவர் எழுநூறு ஒட்டகங்களை அனுப்பினார். அதோடு அறுநூறு ஒட்டக வீரர்களும் ஆயிரம் தரைப் படை வீரர்களும் வந்து சேர்ந்து கொண்டனர். ஆயிஷா பிராட்டியார் ஓர் ஒட்டகத்தின்மீது அமர்ந்தவராக படை பஸ்ரா நோக்கிப் புறப்பட்டது.

## கலீபாவின் முஸ்தீபு :

இச்செய்தி மதீனாவில் ஹலரத் அலி (ரலி) அவர்களுக்கு எட்டியது. ஆகையால், சிரியாமீது படையெடுக்க வேண்டுமென்று முன்னர் திட்டமிட்டதைக் கைவிட்டார்கள். இராக்கிலுள்ள பைத்துல்மாலைப் பாதுகாக்கவும், எதிரிகள் அங்கு வந்தடைவதற்குமுன் தாங்கள் சென்று சேர்ந்துவிட வேண்டுமெனவும் எண்ணியவர்களாய் முழுப்படை திரட்டி அங்கு புறப்பட்டார்கள். எனவே, நாயகத் தோழர் சிலர் தவிர, படையணியில் மதீனா வாசிகள் அனைவரும் இருந்தனர். அப்பொழுது அன்ஸாரி தலைவர் உக்பா பின் ஆமீர், "ஹலரத் உமர் (ரலி) அவர்கள் காலத்தில் இதைவிடப் பெரிய ராணுவப் பிரச்சினை எழுந்த போதிலும் கலீபா தலைநகரை விட்டும் வெளியேறியதில்லை. அக்காலத்தைப் போன்றே இப்போதும் படையில் நல்ல தளபதிகளும், திறமைசாலிகளும் இருக்கின்றனர். அவர்களால் நிலைமையைச் சமாளித்துக் கொள்ள

முடியும்; எனவே, தாங்கள் தலைநகரை விட்டும் பிரியக் கூடாது" என்றார்; ஆனாலும் இராக்கிலுள்ள கஜானாவைப் பாதுகாப்பதற்காகத் தாம் அங்கு சென்றே தீரவேண்டுமென ஹலரத் அலி (ரலி) கூறிவிட்டார்கள்;

ஸிகார் என்னும் ஊரைக் கடந்து செல்லும் பொழுது, ஹலரத் தல்ஹா, ஜுபைர் ஆகிய இருவரும் பஸ்ரா சென்று, ஸஅத் கோத்திரத்தைத் தவிர மற்ற எல்லா மக்களிடமும் ஹலரத் ஆயிஷா பிராட்டியாருக்கு அனுசரணையாகப் பிரமாணம் வாங்கியுள்ளதாக கலீபா அவர்கள் கேள்விப்பட்டார்கள்; உடனே அங்கு கூடாரமடித்துத் தங்கிக் கொண்டு தம் புதல்வர் ஹஸனையும், அம்மார் பின் யாஸிரையும் கூபா சென்று அங்குள்ள மக்களைத் தமக்கு உதவிக்கு அழைக்குமாறு கட்டளையிட்டார்கள்; இருவரும் கூபா சென்றனர். அங்கு ஹஸன் அவர்கள் பள்ளிக்குச் சென்று, மிம்பரில் ஏறி அங்கு கூடியிருந்த மக்களை நோக்கி உணர்ச்சிமிக்க தொரு சொற்பொழிவாற்றி அவர்களிடம் உதவி கோரினார்; ஹஜர் பின் அதீகந்தி என்பவரும் சொற்பொழிவாற்றினார்; 9650 கூபா வாசிகள் ஹலரத் அலி (ரலி) அவர்களின் படையில் சேர முன் வந்தனர்; அனைவரையும் அழைத்துக் கொண்டு இமாம் ஹஸன் அவர்கள் ஸிகார் என்னும் இடத்திற்கு வந்து தம் தந்தையுடன் கலந்து கொண்டார்கள்;

ஸிகாரிலிருந்து புறப்பட்டு கலீபா தம் சேனையுடன் ஹிஜ்ரி 36 ரபீயுல் ஆகிர் மாதம் பஸ்ரா வந்து சேர்ந்தார்; அங்குள்ள மக்கள் அப்பொழுது மூன்று பிரிவினராயிருந்தனர்: முதல் பிரிவினர் நடுநிலையாளர்கள்; இரண்டாவது பிரிவினர், கலீபாவுக்குச் சார்பான வர்கள்; மூன்றும் பிரிவினர் ஹலரத் ஆயிஷா பிராட்டியாரை ஆதரிப்பவர்கள்; இவர்களில் முதல் பிரிவைச் சார்ந்த நடுநிலையாளர்கள், முஸ்லிம்களுக்குள் உட்பகை கூடாதெனக் கருதி சமாதானம் செய்விக்க முயன்றனர்: இதை மற்றிரு கட்சிகளிலுமுள்ள நேர்மையாளர்கள் ஆதரித்தனர்; போரே நிகழக்

கூடாதென்றும், இரு கட்சிகளும் ஒன்றுபட வேண்டு மென்றும் ஹலரத் அலி (ரவி) அவர்களும் ஹலரத் ஆயிஷா நாச்சியாரும் விரும்பினர். சமாதானப் பேச்சு வார்த்தைகள் ஆரம்பித்துத் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தன. இதில் கஃகா என்பவர் அதிகம் அக்கறை எடுத்து வேலை செய்தார். போர் செய்ய வேண்டும் என்ற எண்ணமும் மறைந்தது.

இருதரப்பிலும் நல்லோரும் இருந்தனர்; தீயோரும் இருந்தனர். தீயவர்கள் சமாதானம் ஏற்படுவதை விரும்பவில்லை. ஒவ்வொரு கட்சியிலும் முப்பதாயிரம் வீரர்கள் இருந்தனர்.

## ஐந்தாம் படை

ஹலரத் அலி (ரவி) அவர்களின் படையில், ஹலரத் உதுமான் (ரவி) அவர்களின் கொலைக்குக் காரணமான அப்துல்லாஹ் பின் ஸபாவின் கட்சியினரான ஸபாயீ கட்சியினர் இரண்டாயிரம் பேர் இருந்தனர். இவர்கள் சதிகாரர்கள், தந்திரசாலிகள், செல்வாக் குடையோர். அவர்களெல்லாம் தம் படையிலிருந்து வெளியேறிவிடவேண்டும் என்க் கலீபா கட்டளையிட் டார்கள். எனினும் அவர்கள் வெளியேறவில்லை. சமாதானப் பேச்சில் அவர்கள் கலந்து கொள்ளக் கூடா தெனக் கலீபா கட்டளையிட்டதும், எங்கே இரு கட்சி யாரும் சமாதானமாகி விட்டால் ஹலரத் உதுமான் (ரவி) அவர்களின் கொலை நிருபணப்படுத்தப்பட்டுத் தாங்கள் மரணதண்டனையும், மற்றவிதத் தண்டனை களும் அடைவோமோ எனத் திகிலுற்றார்கள். இதைப் போன்றே ஆயிஷா பிராட்டியாரின் சேனையில் இந்த யுத்தத்திற்குக் காரண பூதர்களான உமய்யாக் கோத் திரத்தாரும் இருந்தனர்.

ஓர் இருள் சூழ்ந்த இரவிலே இருதரப்பாரும் ஆழ்ந்த நித்திரையிலிருக்கும்போது, ஸபாயீகள் ஹல ரத் ஆயிஷா படையினரை இருட்டில் தாக்கினர். இரு

நரப்பாரும் ஒருவரை ஒருவர் சந்தேகித்தனர்; சமாதானம் தவிடு பொடியாகியது; யுத்தம் துவங்கி விட்டது.

ஹலரத் ஆயிஷா (ரலி) ஓர் ஒட்டகத்தின்மீது அம்பாரியிட்டுப் படையின் நடுவிலிருந்து கொண்டு தம் படையினரைத் தடுத்தார்; ஹலரத் அலி (ரலி) அவர்களும் குதிரை மீதிருந்து கொண்டு தம் போர் வீரர்களைத் தடுத்தார்கள். சண்டை ஓய்வதாக இல்லை. சபாயிகள் ஹலரத் ஆயிஷாவைக் கைது செய்ய முயன்றனர். ஆனால் எழுபது வீரர்கள் தங்களின் இன்னுயிரை ஈந்து அவரைக் காத்தனர்.

## ஒரு யுக்தி

இவ்வாறு முஸ்லிம்களே முஸ்லிம்களை அழித்துக் கொண்டிருந்தார்கள். சண்டை ஓய்வதாக இல்லை. ஹலரத் ஆயிஷாவின் ஒட்டகை நின்று கொண்டிருக்கும்வரை அது ஓயாது என எண்ணியவர்களாய் ஹலரத் அலி அதனை உட்கார வைக்கும்படி சமிக்ஞை செய்தார்கள். அவ்வாறேஒருவர் பின்புறமிருந்து சென்று ஒட்டகத்தின் காலைநோக்கி வெட்டினார். ஒட்டகம் உடனே கதறிக்கொண்டு உட்கார்ந்துவிட்டது. ஒட்டகம் உட்கார்ந்தவுடன் ஹலரத் ஆயிஷாவின் படை மனந்தளர்ந்து சோர்வடைந்து விட்டது. கலிபா வெற்றியடைந்தார். இந்த ஒட்டகப் போரில் கலிபாவின் சேனையில் ஆயிரம் பேரும், ஹலரத் ஆயிஷாவின் சேனையில் ஒன்பதாயிரம் பேரும் ஆகப் பதினாயிரம் முஸ்லிம்கள் உயிர் துறந்தனர்.

ஹலரத் ஆயிஷாவின் சகோதரர் முஹம்மத் பின் அபூபக்கர் கலிபாவுடன் இருந்தார். அவரை அனுப்பித் தம் சகோதரியைப் பாதுகாத்து மரியாதை செய்யுமாறு ஹலரத் அலி (ரலி) அனுப்பி வைத்தார்கள். அதன் பின் ஆயிஷா பிராட்டியாரிடம் சென்று நலன் விசாரித்தார்கள். ஆயிஷா (ரலி) அவர்கள் பஸ்ராவில் சில நாள் தங்கி ஓய்வுகொண்டபின், அவர்

தம் சகோதரர் துணையுடன் மதீனாவுக்கு அனுப்பி வைக்கப்பட்டார். துணைக்கு நாற்பது உயர் குடும்பப் பெண்களையும் அனுப்பித் தாமும் சில மைல்கள் நடந்து சென்று வழியனுப்பியதோடு தம் மைந்தர்கள் ஹஸன், ஹுஸைன் இருவரையும் ஒருநாள் பயணம் வரை உடன் சென்று திரும்புமாறும் அனுப்பி வைத்தார்கள் ஹலரத் அலீ (ரலி) அவர்கள்.

ஹலரத் ஆயிஷா (ரலி) அங்கிருந்து புறப்படும் பொழுது பொதுமக்களை நோக்கி, ''மக்களே! தப்பெண்ணத்தின் காரணமாக எங்களுக்குள் இப்போர் நிகழ்ந்தது. எனக்கும் அலீ அவர்களுக்கு மிடையில் இதற்குமுன் எவ்விதச் சண்டைச் சச்சரவுகளும் கிடையாது.'' எனப் பிரகடனம் செய்தார்; ஹலரத் அலீயும் அதை ஏற்றுக்கொண்டவர்களாய், ''இவர் எம் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் பிராட்டியார் ஆவர். முஸ்லிம்களாகிய நமக்கு 'உம்முல் மூமினீன்' (அன்னை) ஆவார். இவருக்கு மரியாதை செலுத்துதல் நம் கடமையாகும்'' என்று கூறினார்கள். ஹிஜ்ரி 36, ரஜப் முதல் தேதி ஹலரத் ஆயிஷா பஸ்ராவிலிருந்து பயணமாகி மக்கா சென்று தங்கி இருந்து விட்டு அடுத்த ஆண்டு முஹர்ரம் மாதம் மதீனாவுக்கு வந்து சேர்ந்தார்.

## கூபா தலைநகர்

ஹலரத் அலி (ரலி) அவர்கள் பஸ்ராவில் சில நாட்கள் தங்கியபின் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்களை அதன் கவர்னராக நியமித்துவிட்டு ஹிஜ்ரி 36 ரஜப் 12 திங்கட்கிழமை கூபா நகர் வந்து சேர்ந்தார்கள். இங்கு அவர்களின் ஆதரவாளர்கள் பெரும்பான்மையாக இருந்து வந்ததால் குழப்ப நிலையிலுள்ள மதீனாவை விட்டும் வெகு தொலைவிலுள்ள இந்நகரை இஸ்லாமிய ஆட்சிபீடமாக—தலைநகராக — கி.பி. 656-ல் ஆக்கிக் கொள்ள முடிவு செய்தார்கள்.

## முஆவியாவுக்குத் தூது

இங்கிருந்து கொண்டு ஜரீர் பின் அப்துல்லாஹ் என்னும் தம் தூதர் மூலம் சமாதான முறையில் தமது

கிலாபத்தை அங்கீகரித்து விசுவாசப் பிரமாணம் செய்யுமாறு அமீர் முஆவியாவுக்கு மடல் அனுப்பினார்கள் ஹலரத் அலி (ரலி). அதில்,

"நீங்களும் உங்களைச் சேர்ந்த முஸ்லிம்களும் என்னைக் கலீபாவாக ஏற்று பைஅத் செய்தல் அவசியமாகும். ஏனெனில், முஹாஜிர்களும் அன்ஸார்களும் ஒருமனதாக என்னைக் கலீபாவாகத் தேர்ந்தெடுத்துள்ளார்கள். அபூபக்கர், உமர், உதுமான் இம்மூவரையும் இவர்களே கலீபாவாகத் தேர்ந்தெடுத்தார்கள். ஆகையால் இவ்விதத் தேர்தலுக்குப் பின் இதை எதிர்ப்போரெல்லாம் கலீபாவுக்குக் கீழ்ப்படியுமாறு பலவந்தமாகக் கட்டாயப் படுத்தப்படுவார்கள். எனவே, முஹாஜிர்களையும் அன்ஸார்களையும் நீங்கள் பின்பற்றுங்கள். இதுவே சிறந்த முறையாகும். இல்லையேல், போர் தவிர்க்க முடியாத ஒன்றாக ஆகிவிடும்.

"ஹலரத் உதுமானுடைய கொலையை உங்கள் குறிக்கோளுக்கு ஆயுதமாகப் பயன்படுத்துகிறீர்கள். நீங்கள் உண்மையாகவே ஹலரத் உதுமானுடைய கொலைக்குப் பழிவாங்க வேண்டுமென்று நினைத்தால், முதலில் என்னைக் கலீபாவாக அங்கீகரித்து பைஅத் செய்யுங்கள். அதன்பிறகு ஒழுங்கான முறையில் இவ்விஷயத்தைச் சமர்ப்பியுங்கள். குர்ஆன், நபிமொழி ஆகியவற்றின்படி இன்ஷா அல்லாஹ் நான் இதைப் பற்றித் தீர்ப்புச் செய்வேன். ஆனால், இப்பொழுது நீங்கள் அனுசரிக்கும் முறை ஏமாற்று வித்தையும் சூழ்ச்சியுமாகும்" எனக் கண்டிருந்தது.

இதற்கு அமீர் முஆவியா பதில் எழுதி அதில் ஹலரத் உதுமானைக் கொலை செய்தோரைத் தம்மிடம் பிடித்து ஒப்படைக்க வேண்டுமென்றும், அவ்வாறு செய்தால் தாமும் சிரியா நாட்டவரும் விசுவாசப் பிரமாணம் செய்துதரத் தயங்கமாட்டோம் என்றும் கண்டிருந்தது. கடிதத்தைப் படித்துப் பார்த்த ஹலரத் அலி, அந்தக் கொலையாளிகள் தம் கைவசத்திலில்லையென்றும் தீர்க்க விசாரித்துத் தேடிக் கண்டு பிடிக்கப்

பட வேண்டியவர்களாயிருக்கிறார்களென்றும் பதில் எழுதி அத்துடன் அப்ரு பின் ஆஸுக்கு, "உலக இச்சைகளை உதறித் தள்ளிவிட்டு நியாயத்தின் பக்கம் சேர்ந்து கொள்ளுங்கள்" என்று ஒரு தனிக் கடிதமும் அனுப்பியிருந்தார்கள்.

ஹலரத் உதுமானைக் கொலை செய்தவர்களைக் கண்டுபிடித்து அவர்களைத் தண்டிப்பது கலீபாவின் முதல் வேலையாக இருந்தது. இதில் சிக்கல்கள் பலவாக இருந்தன. ஹலரத் உதுமான் கொலை செய்யப்படும் பொழுது அவர் மனைவி நாயிலா மட்டுமே அங்கிருந் தார். பணியாளும் கொலையுண்டார். "முஹம்மத் பின் அபூபக்கர் இரண்டு மனிதர்களுடன் உள்ளே வந்தார். அந்த இரண்டு மனிதர்களும் யார் என்பதை அதற்கு முன் நானும் அறியேன். முஹம்மத் பின் அபூபக்கர் கலீபாவைத் தாக்கவில்லை" என நாயிலா அம்மையாரை விசாரித்த பொழுது கூறினார்.

முஹம்மத் பின் அபூபக்கரைக் கைது செய்து ஹலரத் அலி (ரலி) விசாரித்தபொழுது, அவர், "நான் ஹலரத் உதுமானைக் கொலை செய்யும் நோக்கத்துடன் வீட்டினுள் புகுந்தது உண்மையே. ஆனால் கலீபாவினுடைய "சகோதரர் மகனே! இன்று உன் தந்தை உயிருடனிருந்தால் இதை விரும்பமாட்டார்" என்ற ஒரு வாக்கியமானது என்னைப் பின்னடையச் செய்துவிட்டது. நான் வாளேந்தவில்லை. என்னைத் தொடர்ந்து வந்த அந்த இருவர் தாம் கொலை செய்தனர். ஆனால், அவர்கள் யாரென்று நான் அறியமாட்டேன்" என்று கூறினார்.

கொலையாளிகளைக் கண்டுபிடிப்பதற்கு எத்தனையோ முயற்சிகள் எடுக்கவே செய்தனர். எனினும், அவர்களைக் கண்டுபிடிக்க முடியவில்லை. திட்டவட்டமான ஆதாரங்கள் கிடைக்கவில்லை. ஒரு கொலைக்காக சதிக் கூட்டத்தாரை ஒட்டுமொத்தமாக தண்டிக்க முடியா

தல்லவா? எனவே இந்த விஷயத்தில் மாதொரு முடிவும் செய்ய முடியாத தர்ம சங்கடமான நிலையில் ஹலரத் அலீ (ரலி) இருந்து வந்தார்கள்.

அமீர் முஆவியாவுடன், கலீபா அவர்கள் மேற் கொண்ட சமாதான முயற்சிகள் தோல்வியுற்றன; எனவே, வேறு வழியின்றி அவர்கள் தம் கவர்னர்களை யும் உடன் அழைத்துக் கொண்டு எண்பதாயிரம் வீரர் களுடன் கூஃபாவிலிருந்து சிரியாவை நோக்கிப் புறப்பட்டார்கள்;

## அலீ-முஆவியா நிலை :

இது சமயம் அமீர் முஆவியாவின் நிலைமையை நாம் அறிந்து கொள்வது அவசியம்; ஒட்டகப் போருக் குப் பிறகு ஹலரத் அலீ (ரலி) கூபாவைத் தலைநகராக்கிக் கொண்டதால், வெகு தூரத்திலுள்ள பழைய ஆட்சி பீடமான மதீனாவிலிருந்து வீரர்களும், யுத்தத் தளவாடங்களும், உணவுப்பொருள்களும் கொண்டு வரவேண்டிய அவசியமில்லாமல் சிரியாவுக்குச் சமீப மாகவுள்ள இராக்கிலேயே அவற்றைச் சேகரித்துக் கொள்ளும் வாய்ப்பும் வசதியும் கலீபாவுக்கு ஏற்பட்டு விட்டன; எனவே, சீக்கிரத்திலும் இலகுவாகவும் கலீபா தம்மீது படையெடுக்கக்கூடும் என முஆவியா அஞ்சினார்;

மேலும், எகிப்திலிருந்த கலீபாவின் கவர்னர் கைஸ் பின் ஸஅதும் அதே சமயம் எகிப்திலிருந்து தம் மைத் தாக்கக் கூடுமெனவும் முஆவியா அஞ்சினார். எனவே, ஒரே சமயத்தில் மேற்கிலிருந்தும் கிழக்கி லிருந்தும் நிகழக்கூடிய இவ்விரு தாக்குதல்களினின்றும் தற்காத்துக் கொள்வதற்காக ஓராண்டு காலமாக யுத்தத்திற்கான ஆயத்தங்களை முஆவியா செய்து கொண்டே இருந்தார். ஆனால், இந்த ஆண்டு முழுவதை யும் ஹலரத் அலீ போரிலே கழித்தார் என்பதையும் நாம் கவனத்தில் கொள்ளவேண்டும். தமது ஆட்சியை யும் அரசியலையும் வன்மையுடையதாக ஆக்க அமீர்

முஆவியா எல்லா வகைகளிலும் முயன்றார்; ஹலரத் உதுமான் அவர்கள் கொல்லப்பட்டதைத் தமக்குச் சாதகமாக, மக்களிடையே உத்வேகமூட்டுவதற்குப் பயன்படுத்தினார். அதை அரேபியாவெங்கும் விளம்பரஞ் செய்தார். மேலும், வெகு காலமாக சிரியாவிலுள்ள திமிஷ்க் பட்டணம் ரோம ராஜ்யத்தின் எதிர்ப்புகளைத் தடுப்பதற்காக பிரம்மாண்டமான படைத்தளமாகத் தயாரித்து வைக்கப் பட்டிருந்தது. எனவே, இந்தச் சேனையைத் தன் முழு சக்தியுடன் கலீபாவின் சேனையோடு மோதவிட முஆவியா ஆயத்தமாக இருந்து வந்தார்.

ஹலரத் அலியின் நிலைமை இதற்கு முற்றிலும் மாற்றமானதாக இருந்தது. முஆவியாவுக்கு சிரியாவென்னும் ஒரு மாகாணத்திலிருந்த ஆதிக்கமும் வன்மையும் இஸ்லாமிய நாடுகள் அனைத்துக்கும் தலைவராக இருந்த ஹலரத் அலீ (ரலி) அவர்களுக்கு இல்லாதிருந்தது. இதோடு எகிப்தின் அரசியல் நிலைமையும் முஆவியாவுக்குச் சாதகமாக மாறத் தலைப்பட்டது.

எகிப்தில் கைஸ் பின் ஸஅத் என்பவர் கலீபாவின் கவர்னராக இருந்தார். அவரைத் தம் சார்பில் சேர்ந்து கொள்ளுமாறு முஆவியா அழைத்தபோது அவர் மறுத்துவிட்டார். இதனால் முஆவியா எகிப்தைத் தாக்க எண்ணினார். அவ்வாறு தாக்கும்பொழுது கலீபா சிரியாவைப் பின்புறமாகத் தாக்கிக் கைப்பற்றிக்கொண்டால் இரண்டுங் கெட்டான் நிலைமை ஆகிவிடுமே என எண்ணித் தாமதம் செய்தார்.

இந்த நிலையில் ஹலரத் அலியைக் கலீபாவாக ஏற்பதற்கு முஸ்லமா பின் முகல்லத் அன்சாரி தலைமையில் எகிப்திலுள்ள சிலர் ஒத்தி போட்டுகொண்டே வந்தார்கள்; அவர்கள் மீது கைஸ் எத்தகைய நடவடிக்கையும் எடுக்கவில்லை. இதைப்பற்றிச் சிலர் முறையீடு செய்து அவரது விசுவாசத்தைச் சோதிப்பதற்கு, விசுவாசம் தெரிவிக்காத அந்த எகிப்தியர்கள் மீது

கவர்னர் கைஸ் போர்தொடுக்குமாறு கலீபா கட்டளை பிட வேண்டுமென யுக்தி கூறினர். அத்தோடு இ நிலைமையை அறிந்த முஆவியாவும், கைஸ் தம்மை ஆதரித்து நிற்பதாகத் தம் பிரசாரத்தை முடுக்கிவிட் டார். இதுவும் கலீபாவின் சந்தேகத்தை வலு படுத்தியது. எனவே, கலீபா தமக்கு விசுவாச தெரிவிக்காதவர்கள்மீது போர் தொடுக்குமாறு கைஸுக்கு கண்டிப்பான கட்டளை பிறப்பித்தார். அதற்கு கைஸ், "அந்த மக்களோடு போர் தொடு தால் அவர்கள், நாட்டில் குழப்பத்தை விளைவித்து விடுவர். மேலும் அமீர் முஆவியாவுடன் சேர்ந்து கொள்ளவும் செய்வர். இப்பொழுது அவர்கள் இருந்து வரும் நிலையிலேயே அவர்களை விட்டு வைப்பதே நல் அரசியல் முறையாகும்," என்று கலீபாவுக்கு ஆலோ சனை தெரிவித்தார். கலீபாவுக்கு அவர்மீதிருந்த நல் லெண்ணமும் நம்பிக்கையும் நீங்கி விடவே, கைஸை நீக்கிவிட்டு முஹம்மத் பின் அபூபக்ரை எகிப்தின் ஆளுநராக நியமனம் செய்து அனுப்பிவிட்டார்.

எகிப்துக்கு வந்த புதிய கவர்னர் அங்கு விசுவாசப் பிரமாணம் பண்ணாதோருடன் கலீபாவின் ஆக்ஞைப் படி போர் தொடுத்து, எகிப்தில் கொந்தளிப்பை ஏற்படுத்திவிட்டார். இது ஸிஃப்பீன் போர் வரை நடந்துகொண்டே இருந்தது. இதனால் எகிப்தின் தாக்குதல் பயம் முஆவியாவுக்கு ஏடுபட்டுவிட்டது. ஒட்டகப் போரில் பஸ்ரா நகரத்தார் ஆயிரக் கணக்கில் இறந்து பட்டதால், ஹலரத் அலியின் ராணுவ சக்தி குறைந்து விட்டதெனவும் இனி அந்த நகரத்தாரில் சிலர் மட்டுமே கலீபாவுக்காகப் போர் புரிய முன் வருவர் எனவும் அம்ருப்னுல் ஆஸ் சணித்து ஆலோசனை கூறி முஆவியாவுக்கு தைரியம் ஊட்டினர்.

## ஸி:ப்பீன் போர்

ஹலரத் அலி அவர்களின் பெருஞ்சேனை புராத் (யூப்ரதீஸ்) நதியைக் கடந்து சிரியா நாட்டு எல்லையி

அடைந்தது. சேனையின் முன்னணியை முஆவியாவின் காவற்படை தடுத்தது. வெற்றி கிட்டாதெனக் கண்டு இருள் சூழ்ந்த வேளையில் அங்கிருந்து நகர்ந்துவிட்டது. பின்னர், ஸிஃப்பீன் என்னும் பெருவெளியில் அணி வகுக்குமாறு முஆவியா தம் படைக்கு உத்தரவிட்டார். அது முற்கூட்டிச் சென்று பாளையம் இறங்கி நீர் நிலைகளைக் கைப்பற்றிக் கொண்டது. பிந்தி வந்த ஹலரத் அலியின் படை நீர் நிலைகள் எதிரியின் கைவசப்பட்டதை அறிந்து கடும்போரிட்டு அவற்றைக் கைப்பற்றியது. எனினும், எதிரிகளுக்குத் தண்ணீர்த் தடை செய்வது மனிதத் தன்மை அல்ல எனக் கருதிய கலீபா, அவர்களைத் தடுக்க வேண்டாமெனத் தம் படையினருக்கு உத்தரவிட்டார். இதனால், இரு கட்சிகளைச் சார்ந்தோரும் நண்பர்களாகி ஒருவர் கூடாரத்துக்கு மற்றவர் சென்று வரலாயினர். சமாதானத் தென்றலும் வீச ஆரம்பித்தது.

ஹலரத் அலி அவர்கள் மறுமுயற்சி செய்து முஆவியாவிடம் மூவரைத் தூதனுப்பினார்கள். இரு தரப்பிலுமிருந்த ஆலிம்களும், ஹாபிள்களும், அறிஞர்களும் முஸ்லிம்கள் இரத்தம் சிந்துவதைத் தவிர்க்க அதிகம் விரும்பினர். இவர்களின் முயற்சியால் மூன்று மாத காலம் வரை போர் தடைபட்டிருந்தது. சமாதானப் பேச்சுகளும் நடைபெற்றன.

நான்காம் மாதம் போர்முரசு கொட்டப்பட்டது. ரஜப் பிறந்த ஐந்தாம் மாதம் போர் நின்றது. சமாதானப் பேச்சின்போது அமீர் முஆவியா, "உதுமானை அலி கொலை செய்யவில்லை என்பது உண்மைதான். ஆனால், கொலையாளிகளுக்கு அவர் அபயமளித்திருக்கிறார். அந்தக் கொலையாளிகளை அவர் என் வசம் ஒப்படைத்துவிட்டால் எல்லோரினும் முதன்மையாக நானே அவருக்கு பைஅத் (விசுவாசப் பிரமாணம்) செய்வேன்" என்றார்.

ஹிஜ்ரி 37, கழிந்து 38 ஸபர் பிறந்தது. மீண்டும் போர் துவங்கியது. இவ்வாறு காலம் கடந்து கொண்டு

மக்கட் தேசம் அதிகரித்து வருவதைக் கண்ட ஹலரத் அலி அவர்கள் தம் சேனைகளை ஒருமிக்கச் செய்து வீர உரை ஒன்று ஆற்றினார்கள்; படை வீறுகொண்டெழுந்து போரிட்டது. சிரியா அணிகள் சிதறுண்டன; மக்கள் மடிந்து வீழ்ந்தனர்.

## ஒரு சவால்

இக்கோரக் காட்சியைக் காணச் சகிக்காத ஹலரத் அலி அவர்கள் முஆவியாவை நெருங்கி, ''உமக்கும் எமக்குமுள்ள தகராறுக்காக அப்பாவி மக்கள் ஏன் வீணில் மடிந்து, பெண்கள் விதவைகளாகிக் குழந்தைகள் அநாதைகளாகி அவலமுற்று நிற்க வேண்டும்? நீரும் நானும் தனித்துப் போரிட்டு இருவரில் ஒருவர் மடிந்து இதனை ஓர் முடிவுக்குக் கொண்டுவந்து நிம்மதி நிலவச் செய்வோம்'' எனக் கூறி நின்றார்கள், அம்ரு பின் ஆஸ¬ம் இதை ஏற்குமாறு முஆவியாவுக்கு அறிவுரை பகர்ந்தார். அதற்கு முஆவியா, ''என்னைச் சாகடித்து விட்டு எனது ஆசனத்தில் நீர் அமர விரும்புகிறீரா?'' எனச் சினந்தார்.

பின்னர் கடும்போர் நிகழ்ந்தது; இப்போர் வெள்ளிக்கிழமை ஆரம்பித்துத் தொடர்ச்சியாக 30 மணி நேரம் ஓய்வின்றி நடைபெற்றது; எழுபதாயிரம் முஸ்லிம்கள் மடிந்தனர். அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) பரிமீது போர்க்களம் சுற்றிவந்து கலீபாவின் அணிகளுக்கு வீர உரை பகர்ந்து கொண்டிருந்தார்; கலிபாவின் இராக் சேனை வெற்றியடைந்து கொண்டும், முஆவியாவின் சிரியா சேனை சிதறி ஓடிக்கொண்டுமிருந்தது; ஹலரத் அலியின் சேனையில் 20,000 பேரும்; அமீர் முஆவியாவின் சேனையில் 50,000 பேரும் கொல்லப்பட்டனர்.

## அலி (ரலி)யின் தீரம்

ஸிஃப்பீன் போரில் ஹலரத் அலி (ரலி) அவர்களின் வீர, தீர பராக்கிரமம் எவ்வாறு இருந்தது என்பதனை சில உதாரணங்களால் காண்போம்:

போர்க்களம் புகுந்தால் அவர்கள் தம் உடலின் முன்பாகத்துக்கு மட்டுமே கவசம் அணிந்துகொள்வர். அமீர் முஆவியாவை நோக்கி ''நம் இருவரில் ஒருவர் நேரடிப் போரில் இறந்துபட்டால் முஸ்லிம்கள் நிம்மதி பெறுவர்'' எனப் பலமுறை அறைகூவல் விடுத்தும் முஆவியா அதனை ஏற்கத் துணியவில்லை. ஹலரத் அலியின் வாள் எவர் தலையிலும் பட்டால் அது அவர் மண்டையைப் பிளந்து சென்று சடலத்தை இரு கூறாக்கிவிடும்.

ஒரு சமயம் ஹலரத் உதுமான் (ரலி) அவர்களின் அடிமை முஆவியாவின் படையிலிருந்து வந்து எதிர்த்தான். ஹலரத் அலி அவர்கள் அவனோடு வாள்வீசிக் கொண்டே நெருங்கிச் சென்று, அவனது பிடரியைப் பிடித்து குதிரையிலிருந்து தூக்கி வீசினார்கள். அவன் அப்பால் போய்த் தரையில் விழுந்தான். அதனால் அவனுடைய எலும்புகள் நொறுங்கின.

மற்றொரு சமயம் மாறுவேடத்திலிருந்த ஹலரத் அலி அவர்களுடன் இரு வாலிபர்கள் வந்து பொருதினர். அவர்களில் ஒருவனது கொப்பூழைக் குறி வைத்து வாள் வீசினார்கள் அலி (ரலி) அவர்களின் மின்வெட்டு வீச்சு அவனை ஏதும் செய்யவில்லை என மக்கள் நினைத்தார்கள். அவ்வாலிபன் ஏறியிருந்த குதிரை நகர்ந்தது. ஆனால் அவனது உடல் இரு துண்டுகளாகப் பூமியில் விழுந்தது. பிறகு அடுத்த வீரனையும் அவ்வாறே தீர்த்துக் கட்டினார்கள்.

ஆஷிகெ ரசூல் என்றழைக்கப்படும் பெருமானாரின் திவ்ய தரிசனத்தைக் காணாத ஹலரத் உவைஸ்கரனீ (ரஹ்) அவர்கள் கொல்லப்பட்ட ஸிஃப்பீன் போரில் நடந்த லைலத்துல் ஹரீர் இரவில் ஹலரத் அலி அவர்கள் தக்பீர்-அல்லாஹு அக்பர் - சொல்லிக்கொண்டு வீசிய ஒவ்வொரு வாள் வீச்சுக்கும் ஒருவர் விதம் 530 எதிரிகள் வீழ்ந்து மடிந்தனர்.

## கொடிய சதி

இந்த நெருக்கடியான வேளையில் அம்ரு பின் ஆஸ் செய்த ஒரு சூழ்ச்சியால் ஹலரத் அலிக்குக் கிடைக்க வேண்டிய முழு வெற்றி தடுக்கப்பட்டுவிட்டது. அந்தக் கொடிய சதி என்னவென்றால், அம்ருப்னுல் ஆஸ், முஆவியாவிடம் வந்து, ''நான் சொல்கிறபடி நீங்கள் செய்தால் நமது தோல்வியைத் தடுத்துவிடலாம். அதாவது, ஈட்டிகளின் முனையில் திரு குர்ஆன் பிரதிகளைக் கட்டித் தூக்கிப் பிடித்தவர்களாய் எதிரிகளை நோக்கி, "போரை நிறுத்துங்கள்! இந்தக் குர்ஆனுடைய தீர்ப்புப் படி நாம் நடந்து கொள்வோம்!'' என்று நாம் அவர்களுக்கு அறிவிப்போம். அதன் விளைவாகப் போர் நிறுத்தம் ஏற்பட்டுவிடும். எதிரிகளின் தலைவர் ஹலரத் அலி அவ்வாறு செய்ய மறுத்தால், அவரது கட்சியில் பிளவு உண்டாகிவிடும். அதனாலும் நமக்கு நன்மையே விளையும்'' என்றார். அவ்வாறே அமீர் முஆவியா செய்வித்தார். அந்தத் திட்டம் பலனளித்தது. இதனைக் கண்டு ஹலரத் அலியின் கட்சியாரும் இவ்வாறே நடந்து கொள்ள வேண்டுமென ஆர்ப்பரித்தனர்.

இவர்களின் கூக்குரலைக் கேட்ட ஹலரத் அலி அவர்கள் தம் கட்சியினரை நோக்கி, ''ஆண்டவனுடைய அடியார்களே! உங்களுடைய உரிமைகளையும் கடமைகளையும் மறந்துவிடாதீர்கள்; விட்டுக்கொடுத்துவிடாதீர்கள்; நான் முஆவியாவையும், அம்ருபின் ஆஸையும் நன்கு அறிவேன். அவர்கள் எப்பொழுதும் தந்திரம் நிறைந்தவர்கள். அவர்களுடைய வீரர்களெல்லாம் போர்க்களத்திலிருந்து ஓடுகிறார்கள். வெற்றி நம்மையே நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. அது வெகு விரைவில் நமக்குக் கிடைக்கும். போரைத் தொடர்ந்து நடத்துங்கள்'' எனக் கூறினர்.

## சண்டித்தனம்

ஆனால், கலிபாவைச் சார்ந்தவர்களில் சிலர், ''ஆண்டவனின் வேதப்படி நடப்பதே சிறந்ததாகும்;

நீங்கள் அதை ஒப்புக்கொள்ளாவிட்டால் நாங்கள் உங்களைப் பிடித்து எதிரிகளிடம் கொடுத்து விடுவோம்'' என்றனர். ஆகவே, ஹலரத் அலியும், அப்துல்லாஹ் இப்னு அப்பாஸும் போரை நிறுத்திவிட்டார்கள். இந்தச் சதி சபாயிகளுடையதாகும். ''நாங்கள் இது வரை ஆண்டவனுக்காகப் போரிட்டோம்! இப்பொழுது ஆண்டவனுக்காகப் போரை நிறுத்துகிறோம்'' என்றார் கள் அவர்கள்.

இப்பொழுது இரு கட்சியினர் சார்பாக மத்தியஸ் தர்களை நியமிக்கும் பிரச்சினை எழுந்தது. அமீர் முஆவியாவின் சார்பாக எதிர்ப்பே இன்றி அம்ருபின் ஆஸ் நியமிக்கப்பட்டார். ஹலரத் அலி அவர்களின் சார் பாக சூது வாதறியாதவரான அபூமூஸா அஷ்அரீ நிய மிக்கப்பட்டார். இவருடைய வெகுளித் தனத்தை கலீபா தம் ஆட்களுக்கு எடுத்துக்காட்டியும் பலனில்லை.

ஒப்பந்தம் காணுவதற்கு இருதரப்பினரும் தவ்மத் துல் ஜந்தல் என்னுமிடத்தில் கூடினர். ஹலரத் அலி, அமீர் முஆவியா ஆகிய இருவரையும் நீக்கிவிட்டு வேறொருவரை கலீபாவாக ஜனநாயக முறைப்படி தேர்ந்தெடுப்பதெனத் தீர்மானித்தனர். இரு நடு வரும் இம்முடிவை மக்களிடம் அறிவிப்பதற்காக மேடையில் ஏறினர். அம்ருப்னுல் ஆஸ், அபூமூஸா அஷ்அரீயைக் கவுரவிக்கும் முறையில் தந்திரமாக முடிவை முதலில் அறிவிக்குமாறு கூறினர்.

## சூது வென்றது

வெகுளியான அபூமூஸா அஷ்அரீ எழுந்து நின்று, ''மக்களே! நாங்கள் இருவரும் எடுத்த முடிவின்படி என் சார்பில் நான் அலியைக் கிலாபத்துப் பதவியிலி ருந்து விலக்கிவிட்டேன்'' என்று கூறிவிட்டு ஒதுங்கிப் பின்புறம் சென்றுவிட்டார். அம்ருபின் ஆஸ் மேடைக்கு வந்தார். அங்கு நின்றுகொண்டு, ''மக்களே! அபூ மூஸா அஷ்அரீ தம் நண்பரான ஹலரத் அலியைக் கிலாபத்திலிருந்து விலக்கிவிட்டார் என்பதை நீங்கள்

43

இப்பொழுது கேட்டீர்கள். நானும் அதை ஏற்று அவரை மனப்பூர்வமாகக் கிலாபத்திலிருந்தும் விலக்கி விட்டேன். இப்பொழுது என்னுடைய நண்பர் அமீர் முஆவியாவை நான் கிலாபத் பதவியில் நியமனம் செய்கிறேன். ஏனெனில், முஆவியாவே ஹலரத் உதுமானுடைய வாரிசாகவும், அவருடைய கொலைக்குப் பழி தீர்க்கும் உரிமையாளராகவும் இருக்கிறார். கிலாபத் பதவிக்கு அவரே அதிக உரிமையுள்ளவராக இருக்கிறார்," எனக்கூறி அங்கிருந்து மெல்ல நழுவிவிட்டார்.

உடனே அபூமூஸா அஷ்அரீ அம்ருபின் ஆஸை நோக்கி "அம்ருவே! உமக்கு என்ன ஆகிவிட்டது? உம் மீது ஆண்டவனுடைய சாபம் இறங்கக்கடவது! நீர் நம்பிக்கை மோசம் செய்துவிட்டீர். இறைவன் குர்ஆனில் கூறியுள்ள ஒரு நாயைப் போன்றே உம்முடைய நிலைமை இருகிறது" என்றார். அதைக்கேட்ட அம்ருப்னுல் ஆஸ், "முதுகின்மீது புத்தக மூட்டையைச் சுமந்த ஒரு கழுதைக்குத்தான் ஒப்பிடவேண்டும் உம்மை," என்று கூறினார்.

பலரும் அபூமூஸா அஷ்அரீயைக் கடிந்து கொண்டனர். சிலர் தாக்குவதற்கு முற்பட்டனர். ஷரீஹ் பின் ஹானீ என்பவர் அம்ருப்னுல் ஆஸை தாக்கினார்; சவுக்கால் அடித்தார். பின்னர் தவ்மதுல்ஜந்தல் என்னுமிடத்திலிருந்து சிரியா கோஷ்டியார் முஆவியாவிடம் சென்றுவிட்டார்கள்.

## காரிஜிகள்

ஹலரத் அலி (ரலி) அவர்கள் ஸிஃப்பீன் போர்க்களத்திலிருந்து கூஃபா நகருக்குத் திரும்பினார். கூஃபா நகரின் கட்டிடங்கள் கண்ணுக்குத் தென்படும் தூரத்தில் கார்ஜிகளென்போர் சுமார் பன்னிரண்டாயிரம் பேர் ஹருரிய்யா என்ற சிற்றூரில் பிரிந்து தங்கிக் கொண்டு, "அல்லாஹ்வின் தீர்ப்பையன்றி வேறு எவருடைய தீர்ப்பையும் நாங்கள் ஏற்றுக்கொள்ள மாட்டோம். மேலும், அல்லாஹ்வுக்குக் கீழ்ப்

படியாதோருக்கு நாங்கள் கீழ்ப்படியமாட்டோம்'' என்று கூறிக்கொண்டிருந்தார்கள்.

குர்ஆனை இனிய குரலில் முறைப்படி ஓதும் காரீகளும், குர்ஆனை மனப்பாடம் செய்த ஹாபிள்களும் அடங்கிய ஒரு கூட்டத்தார் ஒவ்வொரு விஷயத்திலும் குர்ஆனின் கட்டளைப்படியே நடக்கவேண்டுமெனக் கூறி வந்தனர். இந்தக் குழுவினரே மத்தியஸ்தர் தீர்ப்புக்குப் பின் காரிஜிகளாகப் பிரிந்து விட்டனர்.

''ஹலரத் அலி முஸ்லிம்களை ஒற்றுமைப்படுத்த முயன்று, 'தமது கட்சி' என்னும் ஒரு கோட்டையைக் கட்டி அந்த ஒற்றுமையைத் தகர்த்து விட்டார்; அவர் எதிரிகளுடன் போர் செய்து வெற்றியோ, தோல்வியோ கண்டு தமது உயிரை அர்ப்பணித்து 'ஷஹீத்' (தியாகி) ஆகி இருக்கவேண்டும்,'' எனச் சிலர் நினைத்தார்கள். ஆனால், தாம் அவ்வாறு செய்திருந்தால் நபிபெருமானார் அவர்களின் வாரிசுகளான ஹஸன், ஹுஸைன் ஆகிய இருவரும் உயிரிழந்து பெருமானாரவர்களின் சந்ததியே உலகிலில்லாமல் போய்விடும் என்றும், இதையன்றி ஹஸன், ஹுஸைனுக்குப் பிறகு அப்துல்லாஹ் பின் ஜஃபர், முஹம்மத் பின் ஹனீபா ஆகிய சகோதரர்களும் அழிந்து விடுவார்கள் எனவும் ஹலரத் அலி அவர்கள் அஞ்சியிருக்கலாம் எனவும் சிலர் சிந்திக்கலாயினர்.

## பயனற்ற அறிவுரை

காரிஜிகளின் விசித்திரமான கொள்கைகளையும் பேச்சுக்களையும் கேள்வியுற்ற ஹலரத் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி), அவர்களிடம் சென்று தர்க்கமாடிக் கொண்டிருக்கும்பொழுது ஹலரத் அலி அவர்கள் அடுத்துச் சென்று அவர்களை நோக்கி, ''சிரியா நாட்டுச் சேனையிலுள்ளோர், ஈட்டிகளில் குர்ஆனைத் தொங்கவிட்டுத் தூக்கிப் பிடித்தபொழுது நான் உங்களை நோக்கி, 'இவர்களின் தந்திரத்தையும் ஏமாற்று

வித்தையையும் நான் உங்களைவிட அதிகமாக அறிவேன்; குர்ஆனைக் காண்பித்து நமக்கு வெற்றி முகம் காட்டும் போரிலிருந்து தப்பித்துக் கொள்ள இது அம்ருப்னுல் ஆஸ் கண்டுபிடித்த உபாயம்,' என்று நான் எச்சரித்தும் நீங்கள் எதிரியின் வலையில் சிக்கி என்னையும் பயமுறுத்தி யுத்தத்தை நிறுத்தச் செய்து உங்கள் மீது ஆபத்தை வரவழைத்துக் கொண்டீர்கள். அபூ மூஸா அஷ்அரீ, அம்ருப்னுல் ஆஸின் சூழ்ச்சியில் ஏமாந்து விடுவார் என்று நான் எச்சரித்தும் நீங்கள் அதைப் புறக்கணித்து விட்டு பிடிவாதமாக அவரை நம் தரப்பு நடுவராக நியமித்தீர்கள். ஆனால் குர்ஆனுடைய கட்டளைப்படி அந்நடுவர்கள் தீர்ப்புக் கூறவில்லை. அதன்படி தீர்ப்புக் கூறவேண்டுமென்று அன்றும் நான் சொன்னேன்; அதன்படி நடக்க வேண்டுமென்று இன்றும் நான் சொல்கிறேன்'' என்று கூறினார்கள்.

அதன்பின், ஹலரத் அலி அவர்கள் காரிஜிகளைத் தமது சிரியா மீதான மறு படையெடுப்பில் வந்து சேர்ந்து கொள்ளுமாறு கடிதம் எழுதினார்கள். அதற்குப் பதிலாக காரிஜிகள், ''தாங்கள் தவ்பாச் செய்து மன்னிப்புத் தேடிக்கொண்டால், உங்களுடன் நாங்கள் எவ்வாறு நடந்து கொள்வது என்பது பற்றி ஆலோசிப்போம்'', என்று கூறி விட்டனர். இந்தக் கடிதத்தைப் படித்துவிட்டு ஹலரத் அலீ அவர்கள் காரிஜிகளைப் பற்றிய நம்பிக்கையை இழந்துவிட்டார்கள்; தாமே சிரியா நாட்டாருடன் தனித்துப் போரிட வேண்டும் என்று முடிவு செய்தார்கள்.

கூஃபா மக்களை நோக்கி ஹலரத் அலீ அவர்கள் ஒரு சொற்பொழிவு ஆற்றினார்கள். அதில், ''எவர் ஜிஹாத் செய்வதைக் கைவிட்டார்களோ, எவர் ஆண்டவனுடைய கட்டளைக்குக் கீழ்ப்படியவில்லையோ, எவர் அசட்டை செய்து சோம்பல் காட்டுகிறார்களோ, அவர்கள் அழிவின் விளிம்புக்கு வந்துவிட்டார்கள். ஆனால், ஆண்டவனுடைய அருளைப் பெற்றவர்கள் நல்ல முறையில் நடந்து கொள்வார்கள். எனவே,

நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்: எவர் இறைவனுடைய ஜோதியை அணைக்க விரும்புகிறார்களோ, அவர்களுடன் நீங்கள் போர் புரியுங்கள். எவர்கள் அரசாட்சியும் நாடுகளும் கிடைத்துவிட்டால் ரோம, பாரசீக சக்கரவர்த்திகளைப் போன்று கோலாகலத்துடன் உலக ஆட்சி நடத்த விரும்புகிறார்களோ அவர்களுடன் போரிடுங்கள். உங்களுடைய எதிரிகளை எதிர்க்க நீங்கள் ஆயத்தமாகுங்கள். உங்களுடைய சகோதரர்களான பஸ்ராவாசிகளுக்கு இங்கு வந்து உங்களுடன் சேர்ந்து கொள்ளுமாறு நான் கடிதம் எழுதியிருக்கிறேன்; இன்ஷா அல்லாஹ், அவர்கள் நம்முடன் வந்து சேர்ந்த பிறகு, நாம் அனைவரும் இங்கிருந்து சிரியா நோக்கிப் புறப்பட்டு விடுவோம்'', என்று குறிப்பிட்டார்கள்.

இதுபோல், பஸ்ரா கவர்னர் அப்துல்லாஹ் பின் அப்பாஸுக்கும், ஒவ்வொரு கோத்திரத் தலைவருக்கும் கடிதங்கள் எழுதி போர் வீரர்களை அழைத்துக் கொண்டு வருமாறு குறிப்பிட்டிருந்தார்கள். இவ்வாறு ஐம்பதினாயிரம் பேர் ஹலரத் அலி அவர்கள் முகாமிட்டிருந்த நகீலா என்னுமிடத்தில் வந்து ஒன்று சேர்ந்தார்கள். அங்கு வந்தவர்களில் பலர், ''நாம் இல்லாத நேரத்தில் காரிஜிகள் இங்கு கலகம் செய்து உயிருக்கும் பொருளுக்கும் நஷ்டமேற்படுத்தலாம். எனவே, காரிஜிகளுடைய விஷயத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்து விட்டால் பிறகு நாம் நிம்மதியாக சிரியா நாட்டாருடன் போரிடலாம்'' என்றனர்.

இதனை அறிந்த ஹலரத் அலி அவர்கள், ''நீங்கள் காரிஜிகளைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். முஆவியாவையும் சிரியா நாட்டாரையும் எதிர்க்க என்னுடன் புறப்படுங்கள். இன்றேல், அவர்கள் பூமியில் கலகம் விளைவிப்பார்கள். ஆண்டவனுடைய அடியார்களைத் தங்களுடைய அடிமைகளாக்கி விடுவார்கள்'' எனக் கூறினார்கள்.

## காரிஜிகளின் திமிர்

இந்நேரத்தில், காரிஜிகள் அப்துல்லாஹ் பின் கப்பாப் என்னும் நபித்தோழரைக் கொன்று விட்டதாக

வும், கர்ப்பிணியான அவரது மனைவியின் வயிற்றைக் கிழித்துவிட்டதாகவும், மற்றும் மூன்று பெண்களைக் கொலை செய்துவிட்டதாகவும் ஹலரத் அலி கேள்வியுற்றார்கள். இக்கோர சம்பவத்தை விசாரித்து வருவதற்காக ஹாரிஸ் பின் மர்ரத்துல் சபதியை அனுப்பிய போது அவரையும் கொன்றுவிட்டார்கள். இவற்றைக் கேள்வியுற்ற படையிலிருந்தோர் கலீபாவிடம் வந்து, "அமீருல் முஃமினீன்! இக்காரிஜிகளை இங்கே விட்டுவிட்டு சிரியாவுக்கு உங்களுடன் நாங்கள் வந்தால், அவர்கள் எங்களுடைய சொத்துக்களை சூறையாடி, எங்கள் பெண்டு பிள்ளைகளையும் கொன்று விடுவார்கள். ஆனதால், முதலாவது இந்தக் காரிஜிகளுடன் சண்டை செய்து அவர்களை அழித்தொழித்து விட்டுப் பின்னர் சிரியா சென்று யுத்தம் செய்வோம்" என்று கூறினார்கள்.

எனவே, ஹலரத் அலி அவர்கள் தம் படையுடன் புறப்பட்டு காரிஜிகள் இருந்த இடத்திற்குச் சமீபமாக வந்து அவர்களை நோக்கி, "நீங்கள் எங்கள் சகோதரர்களைக் கொலை செய்தோரை எங்களிடம் ஒப்படைத்து விட்டால் நாங்கள் உங்களைக் கொலை செய்யாமல் விட்டுவிடுவோம். ஏனென்றால், நாம் சிரியா நாட்டாருடன் போர் செய்யச் செல்வோராயிருக்கிறோம். ஆண்டவன் உங்களுடைய உள்ளங்களை மாற்றிவிடுவானாக! எந்த நற்செயலை முன்னர் நீங்கள் செய்து கொண்டிருந்தீர்களோ அந்த வேலையில் ஆண்டவன் உங்களை ஈடுபடச் செய்வானாக!" என்று கூறினார்கள்.

இதனைச் செவிமடுத்த காரிஜிகள், "நாங்கள், அனைவரும் ஒன்று சேர்ந்து ஒரு மனத்துடன்தான் கொலை செய்தோம்; தனிப்பட்ட கொலையாளி எவருமில்லை. மேலும் நாங்கள் அனைவரும் உங்கள் இரத்தம் சிந்துவதை 'ஹலால்' (ஆகுமானது) என்று நினைக்கிறோம்" என்றார்கள். மேலும், "எங்களுடைய உண்மை வெளியாகிவிட்டது. நாங்கள் ஒருக்காலும் உங்களைப் பின்பற்ற மாட்டோம்" என்றும் கொக்கரித்தார்கள்.

## நஹர்வான் போர்

ஹலரத் அலி போருக்குத் தயாராகி, படைகளை அணிவகுத்து நிற்குமாறு கட்டளையிட்டார்கள். படைக்கு நாயகத் தோழரும், அன்னவழி உறவினரும், அண்ணல் நபிகளார் மதீனா வந்தடைந்த பொழுது அவர்களின் விருந் தோம்பியாக இருக்கும் பேறு பெற்ற பாக்கியசாலியுமான அபூ அய்யூப் அன்சாரி தலைமை தாங்கினார். அவர் பெருங் குரலில், "எவர் இந்தக் கொடியின் கீழ்வந்து விடுவார்களோ, எவர் கொலை செய்யவில்லையோ, எவர் தம் முஸ்லிம் சகோதரருக்குத் துன்பம் விளைவிக்கவில்லையோ, அவருக்கு இங்கு அடைக்கலம் கிடைக்கும். எந்த மனிதர் கூஃபாவுக்குச் சென்றுவிடுவாரோ, அல்லது மதாயின் நகருக்குத் திரும்பி விடுவாரோ, அவருக்கு அடைக்கலம் கொடுக்கப்படும். இந்த நேரத்திலும் எங்கள் சகோதரர்களைக் கொன்றவர்களை எங்களிடம் ஒப்படைத்து விட்டால் நாங்கள் உங்களுடன் போர் செய்யவேண்டிய அவசியமே இல்லை." என்று பிரகடனப் படுத்தினார்.

இதைக் கேட்டு ஃபர்தா பின் நௌபல் அஷ்ஜயீ என்பவர் ஐநூறு குதிரை வீரர்களுடன் ஹலரத் அலீயின் அணியில் வந்து சேர்ந்து கொண்டார். மற்றொரு குழு கூஃபா நகருக்கும் இன்னொரு குழு மதாயின் நகருக்கும் பிரிந்து சென்றுவிட்டனர். பிறகு காரிஜிகளில் ஆறாயிரம் பேர் மீதியாக இருந்தனர். அவர்கள் ஹலரத் அலீயுடன் போரிட ஆயத்தமானார்கள்.

"அவர்கள் முதலில் உங்களைத் தாக்கினாலன்றி போரிடுவதில் நீங்கள் முந்திக்கொள்ளவேண்டாம்." என்று ஹலரத் அலீ தம் வீரர்களை எச்சரித்தார்கள். எதிரிகள் போரிட முன் வந்தார்கள். கலீபாவின் படை இருபகுதிகளாகப் பிரிக்கப் பட்டு அவர்கள் காரிஜிகளை வளைத்துக் கொண்டார்கள். இரு அணிகளும் காரிஜிகளைக் கிடுக்கியில் வைத்துத் தாக்கின. கடும்போர் நடந்தது. சிறிது நேரத்தில் காரிஜிகளில் ஏழு பேர் மட்டுமே மீந்தனர். மற்றெல்லோரும் கொல்லப்பட்டனர்.

அவர்களின் பொருட்கள் அனைத்தும் சிறைப்பொருளாகக் கிடைத்தன. கலீபாவின் படையில் ஏழு பேர் வீர மரணம் அடைந்தனர்.

இதற்குப் பின் சிரியா செல்வதற்கு ஹலரத் அலீ மறு ஆயத்தம் செய்ய முனைந்தார்கள். நகிலா என்னுமிடத்தில் தங்கி ஆயுதங்களைச் சீரமைத்துச் செப்பனிட்டுக் கொண்டு சிரியா செல்லத் தயாராகும்படி கட்டளையிட்டார்கள். ஆனால் இராக் வாசிகள் சேனையிலிருந்து நழுவித் தங்கள் ஊருக்குச் சென்றார்கள். சேனை குறைந்து தேய்ந்து கொண்டே வந்தது. ஹலரத் அலீ கூஃபா சென்று சேனையைப் பலப்படுத்திக் கொண்டு சிரியா புறப்படலாம் என்ற எண்ணத்தில் நகிலாவிலிருந்து புறப்பட்டு வந்தார்கள். ஆனால் தலைவர்களுடன் கலந்து ஆலோசித்தபொழுது அவர்களில் சிலர், ''படையெடுப்பே வேண்டாம்'' என்றனர்; சிலர், ''எங்கள் உடல் நலம் நன்றாக இல்லை,'' என்றனர்.

ஹலரத் அலீ முயற்சிகள் பல செய்தும், நாள்தோறும் சொற்பொழிவுகளாற்றி ஊக்குவித்தும் பலன் கிடைக்கவில்லை. சொற்பொழிவுகளை எல்லோரும் இன்பமாக வந்து கேட்பர்; வாயால் வாக்குறுதியும் செய்வர்! ஆனால், ''புறப்படுங்கள் சிரியாவுக்கு'' என்றால் தங்கள் வீடுகளில் பதுங்கிக் கொள்வர். இந்நிலையைக் கண்ட ஹலரத் அலி அவர்களும் சிரியா படையெடுப்பின் எண்ணத்தைக் கைவிடுமாறு நேர்ந்தது.

## முஆவியா வலுப் பெற்றார்

இப்பொழுது சிரியா நாட்டின் நிலவரத்தைக் காண்போம்: அங்கு அமீர் முஆவியாவின் தலைமையில் மக்கள் ஒரே மனமுடையோராய், ஒரே கட்டுப்பாட்டுடன், ஒரே மனிதருக்குக் கீழ்ப்படிந்து நடப்பவர்களாக இருந்தனர். நிலப்படையிலும் நீர்ப்படையிலும் முஆவியாவே சிறப்புற்று விளங்கினார்.

மேலும், வெகு சீக்கிரத்தில் எகிப்து நாட்டைக் கைப்பற்றும் வாய்ப்பும் முஆவியாவுக்குக் கிட்டியது. எகிப்து நாடு கலீபாவின் ஆட்சியிலிருந்ததால், ஸிஃபீப் பின் போர் நிகழ்ந்த நேரத்தில் இரு முனைத் தாக்குதல்களுக்கு தாம் ஆளாக நேருமே என்று அவர் அச்சங் கொண்டிருந்தார். கைஸ் இப்னு ஸஅத் நீக்கப்பட்டு, முஹம்மத் இப்னு அபூபக்கர் கவர்னராக நியமிக்கப் பட்டபின் அங்கேற்பட்டிருந்த நிலைமையை நாம் ஏற்கனவே அறிந்திருக்கிறோம். சிரியாவாசிகளிடம் முஆவியா தாமே கலீபாவென விசுவாசப் பிரமாணம் பெற்றுக் கொண்டு தமது நிலையைப் பலப்படுத்திக் கொண்டார். எனவே, எகிப்திலிருந்த தம் கட்சியைச் சார்ந்தோருக்கு விரைவில் உதவிகளனுப்புவதாகச் செய்தி அனுப்பினார். அதனைத் தொடர்ந்து, முன்னர் ஹலரத் உமர் (ரலி) அவர்களின் கிலாபத்தின் போது எகிப்து நாட்டை வென்ற அம்ரு பின் ஆஸை ஆறாயிரம் வீரர்களுடன் அங்கு சென்று அந்நாட்டைக் கைப்பற்றச் செய்தார்; முஹம்மத் பின் அபூபக்கர் கொல்லப் பட்டார்.

இதர இஸ்லாமிய நாடுகளையும் தம் வசமாக்கும் முயற்சியில் அமீர் முஆவியா ஈடுபட்டு நாற்புறமும் சேனைகளை அனுப்பினார். மக்கா, மதீனா, எமன், பஸ்ரா, ஜஸீரதுல் அரப், மதாயின் முதலிய பிரதேசங்களுக்குப் பல சேனைகளை அனுப்பி வைத்தார். ஒருவாறு எங்கும் முஆவியாவுக்கு வெற்றியே காணப்பட்டது.

## கொலையா பரிகாரம்?

காரிஜிகளில் அப்துர்ரஹ்மான் பின் முல்ஜம் முராதீ, அம்ரு பின் பக்கர் தமீமீ, பரக் பின் அப்துல்லாஹ் ஆகிய மூவரும் ஒன்று சேர்ந்து இஸ்லாமிய உலகில் ஏற்பட்டுள்ள இன்னல்களிலிருந்து முஸ்லிம்களை விடுவிக்க வழி காண முயன்றார்கள். இறுதியாக, இஸ்லாமிய உலகில் சமாதானம் நிலவ வேண்டுமாயின் அமீர்

முஆவியா, ஹலரத் அலி, அம்ருப்னுல் ஆஸ் ஆகிய மூவரையும் ஒழித்துக் கட்டினால்தான் இது நிறைவேறும் என்று முடிவு செய்தனர். இப்பணியில் அப்துர் ரஹ்மான் பின் முல்ஜம், ஹலரத் அலி அவர்களையும், பரக் பின் அப்துல்லாஹ், அமீர் முஆவியாவையும், அம்ரு பின் பக்கர், அம்ரு பின் ஆஸையும் கொலை புரிவதென முடிவு செய்தனர். இக்கோரச் செயலுக்கு ஹிஜ்ரி 40-ம் ஆண்டு ரமளான் 15-ம் நாள் பஜ்ரு நேரம் (கி. பி. 661) தான் உற்றதாகக் குறிப்பிடப் பட்டது. மூவரும் முறையே கூஃபாவுக்கும், திமிஷ்குக்கும், கெய்ரோவுக்கும் சென்று கெடுவு நாளுக்காகக் காத்திருந்தனர். குறிப்பிட்ட தினத்தில் ஹலரத் அலி அவர்கள் மாத்திரமே இறைவனின் நாட்டப்படி தாக்குண்டார்கள். அமீர் முஆவியா சிறிய காயத்துடன் உயிர் தப்பினார்; அம்ருப்னுல் ஆஸ் சுகவீனத்தால் அன்று பள்ளிக்குச் செல்லவில்லை; தொழுகை நடத்துவதற்கு அனுப்பி வைக்கப்பட்ட அவர் பிரதிநிதி கொல்லப்பட்டார். ஹலரத் அலி இரண்டு நாட்கள் உயிரோடிருந்து மூன்றாம் நாள் ஞாயிற்றுக்கிழமை காலமானார்கள். (இன்னா லில்லாஹி)

கொலையாளி வளைத்துப் பிடிக்கமாட்டான்: அச்சமயம் ஹலரத் அலி அவர்கள், "இவனைக் கைது செய்து வைத்திருங்கள். நான் இறந்துவிட்டால் அவனைக் கொலை செய்துவிடுங்கள்; அவனைச் சித்திரவதை செய்யாதீர்கள். ஆனால், நான் உயிரோடு இருந்தால் அவனை மன்னிப்பதும் தண்டிப்பதும் என்னைச் சார்ந்தது," என்று கூறிவிட்டு, புதல்வர் ஹஸனை நோக்கி, "நாய் போன்ற ஒரு மிருகத்தையும் சித்திரவதை செய்யக்கூடாது," என நபிகள் பிரான் (ஸல்) கூறியிருப்பதால், நான் இறந்துவிட்டால் இந்தக் கொலையாளியைச் சித்திரவதை செய்யவேண்டாம்," எனக் கூறினார்கள்.

ஹலரத் அலி (ரலி) அவர்களின் ஜனாஸாவை இமாம் ஹுஸைன், ஹஸன், ஜஃபர் ஆகியோர் குளிப்பாட்டி

இமாம் ஹஸன் ஜனாஸா தொழுகை தொழுவித் தார்கள். பின்னர் திங்கள்கிழமை பஜ்ர் (வைகறை) தொழுகைக்குமுன் அப்புனிதவுடல் 'ரஹபா' என்னு மிடத்திலுள்ள ஜாமிஃ மஸ்ஜிதுக்கு அருகாமையில் நல்லடக்கம் செய்யப்பட்டது. இதில் ஹலரத் அலி அவர்களின் குடும்பத்தினரைத் தவிர வெளியார் யாரும் கலந்து கொள்ளாத காரணத்தினால், அவர்கள் பூமியில் அடக்கப்படவில்லை, அமரர்களால் வானுலகம் கொண்டு செல்லப்பட்டார்கள் எனப் பலவாறாகக் கூறப்படுகின்றன. இவையெல்லாம் ஆதாரமற்ற வீண் வார்த்தைகளாகும்.

## குடும்பம்

ஹலரத் அலீ (ரலி) அவர்களுக்கு பாத்திமா நாச்சி யார் (ரலி) மூலம் ஹஸன், ஹுஸைன், முஹ்ஸின் என்ற மூன்று ஆண்களும், ஜைனப், ருகையா, உம்மு குல்தூம் என்ற மூன்று பெண்களும் பிறந்தனர். மற்ற மனைவியர் மூலம் முஹம்மதிப்னு ஹனபிய்யா, அபூபக்ரு, அப்பாஸ், அக்பர், உதுமான், ஜஃபர், அப்துல்லாஹிப்னு லைலா, முஹம்மது அஸ்கர், யஹ்யா, அவ்ன், உமர், முஹம்மது அவ்ஸத் என்ற பன்னிரண்டு ஆண் களும், உம்மு ஹஸன், ரம்லத்துல் குப்ரா, உம்மு ஹானி, மைமூனா, ரம்லத்துஸ் ஸுக்ரா, ஜைனபுஸ் ஸுக்ரா, உம்முகுல்தூமுஸ் ஸுக்ரா, பாத்திமா, உமாமா, கதீஜா, உம்முல் கைர், உம்முசல்மா, உம்மு ஜஃபர், ஜிமானா, தகிய்யா என்ற பதினைந்து பெண் களும் பிறந்தனர்.



## இமாம் ஹஸன் (ரலி)

ஹலரத் அலி அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்ட பின் இமாம் ஹஸன் அவர்கள் கூஃபாவின் ஜாமிஃ பள்ளிக்கு வந்தார்கள். முஆவியாவின் ஆளுகையி

லிருந்த ஸிரியாவைத் தவிர ஏனையப் பகுதிகளிலிருந்த முஸ்லிம்கள் இமாம் ஹஸன் அவர்களுக்கே கிலாபத்துக்கான விசுவாசப் பிரமாணம் செய்து கொடுக்க முன் வந்தார்கள். இமாம் ஹஸன் (ரலி) அவர்கள் அவ்வாறு முன் வந்தவர்களின் பிரமாணங்களை ஏற்றுக் கொண்டார்கள். பின்னர் சிறியதொரு சொற்பொழிவாற்றினார்கள். அதில் ''ஏ, மானிடர்காள்! நேற்றையத் தினம் உங்களுடனிருந்த ஒரு மனிதர் இன்று இல்லை; மறைந்துவிட்டார். அவரைப் போன்ற ஒருவரை இதற்குமுன் நீங்கள் கண்டதில்லை. இதற்குப் பின்னரும் நீங்கள் கண்டுகொள்ள மாட்டீர்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அவருக்குத் தங்கள் ஞானத்தையும் யோசனையையும் அளித்து, யுத்த களங்களுக்கு அவரை அனுப்பிக் கொண்டிருந்தார்கள். வானவர்களான ஹலரத் ஜிப்ரயீலும், மீக்காயிலும் அவருக்குத் துணையாக இருந்து வந்தனர். எந்த யுத்தத்துக்குச் சென்றாலும் அவர் தோல்வி கண்டு துவண்டு வந்ததில்லை; அவர் பெரும் செல்வத்தை எங்களுக்கு விட்டுச் சென்றிருக்கிறார் என எவரும் எண்ணிவிட வேண்டாம்; அவர் தமது சம்பளத்தில் மீதப்படுத்திய 700 திர்ஹங்களை மட்டுமே விட்டுச் சென்றிருக்கிறார். இதைத் தவிர வேறு எவ்விதச் சொத்துமே இல்லை; இந்த 700 திர்ஹம் கூட ஓர் அடிமையை வாங்கி உரிமைவிட வேண்டுமென்னும் எண்ணத்திலேயே சேமித்து வந்தார்,'' என்று கூறியவராகக் கலீபாவுக்கான ஆசனத்தில் அமர்ந்தார்.

## பதவி மோகம்

ஹலரத் அலீ (ரலி) அவர்கள் உயிரோடிருந்த நாட்களிலேயே முஆவியா, தாமே கலீபாவாகி முஸ்லிம் சாம்ராஜ்யத்தை ஆளவேண்டும் என்னும் பேராசை கொண்டிருந்தார்; அலீ (ரலி) அவர்களின் ஆயுட்காலத்திலேயே இஸ்லாமியப் பிரதேசத்தில் பெரும் பகுதியை முஆவியா கவர்ந்து தமது அதிகாரத்தின் கீழ் ஆக்கிக்கொண்டார். இராக்கும் ஈரானும் மட்டுமே கலீபாவுக்கு வெறும் வாய் உபகாரம் செய்வதாய்

இருந்து வந்தன. இப்பொழுது ஹஸரத் அலி அவர்கள் மறைந்துவிட்டது அவருக்கொரு பெருவாய்ப்பாக அமைந்துவிட்டது. சந்தர்ப்பத்தை நழுவ விடுவாரா மதியூகியான அபூசுப்யானின் மதியூகி மகன் முஆவியா? அதிலும் இமாம் ஹஸன் அவர்கள் அமைதி மிக்கவர், சமாதானப் பிரியர், போரை விரும்பாதவர், குழப்பங்களை வெறுப்பவர், பதவி ஆசை, அதிகார வேட்கை இல்லாதவர் என்பதெல்லாம் முஆவியாவுக்கு நன்கு தெரியும். எனவே, இதுதான் உற்ற சமயம் எனக் கருதி அப்துல்லா ஹ்பின ஆமிர் தலைமையில் கூபாவை நோக்கி ஒரு படையை அனுப்பினார். இப்படை அன்பாரைக் கடந்து மதாயின் நகரை முன்னோக்கி விரைந்தது.

இதனை அறிந்த இமாம் ஹஸன் முஆவியாவின் படையை எதிர்ப்பதற்குத் தாமும் படை திரட்டிக் கொண்டு மதாயினுக்கு அருகாமையிலுள்ள ஸாபாத் நகரை வந்தடைந்தார்கள். அங்கு வந்து சேர்ந்ததும் தம் படையினர் போர் செய்ய விருப்பமில்லாதவர்களாகக் காணப்படவே அவர்களை நோக்கி ஒரு சிறிய சொற்பொழிவு ஆற்றினார். அதில்,

"நான் எந்த முஸ்லிம் சம்பந்தமாகவும் பொறாமை கொண்டில்லை. எனக்காக நான் எதை விரும்புகிறேனோ அதையே உங்களுக்கும் நான் விரும்புகிறேன். இது சமயம் உங்கள்முன் ஒரு பிரச்சினையை வைக்கிறேன். இதை நீங்கள் மறுக்கமாட்டீர்களென்றே நம்புகிறேன். நீங்கள் ஐக்கியத்தையும் ஒற்றுமையையும் விரும்புகிறீர்களில்லை. ஆனால், இந்த ஒற்றுமை நீங்கள் விரும்பும் வர்க்கப் பிரிவினையையும் அபிப்பிராய பேதங்களையும் விட மிக, மிக மேலானதாகும் என்பதை நீங்கள் உணர்ந்து கொள்ளவேண்டும். உங்களுள் பெரும்பாலோர் யுத்தத்திலிருந்தும் பின் வாங்குகிறீர்கள் என்பதை நான் இது சமயம் காண்கிறேன். நீங்கள் அதைரியமுடையவர்களாகவும் காணப்படுகிறீர்கள். எனவே, உங்கள் அபிப்ராயத்துக்கு விரோதமாக

நான் உங்களைக் கட்டாயப்படுத்த விரும்பவில்லை,'' என்று கூறினார்கள்.

## அவமதிப்பு

இதனை செவிமடுத்த சைனியத்தினர் யாதும் கூறாது மௌனித்தவர்களாய், ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்த வண்ணம் திகைப்புற்றிருந்தனர். இந்த சைனியத்தில் யுத்தத்திற்கு அஞ்சுபவர்கள் பலர் இருந்தார்கள். என்றாலும், அமீர் முஆவியாவுடன் யுத்தம் செய்ய வேண்டியது தங்கள் மார்க்கக் கடமையாகும் என்பதைக் கருத்தில் கொண்டவர்களும் பலர் இருந்தனர். இத்தகையோருக்கு இமாம் ஹஸன் அவர்களின் தாழ்வு மனப்பான்மையான பேச்சு பெரும் ஏமாற்றத்தை அளித்தது. அவர்கள் வெறுப்பும் கோபமும் அடைந்தவர்களாய் இமாம் ஹஸன் அவர்களை வாய்க்கு வந்தபடி இழிமொழி பேசினார்கள். எனினும், கோபம் தணியாதவர்களாய் இமாம் அவர்கள் நின்று தொழ வைத்துக் கொண்டிருந்த 'முஸல்லா' என்னும் தொழுகை விரிப்பைப் பிடித்திழுத்துப் பறித்துக் கொண்டார்கள். அவர்களின் நீளமான அங்கியைப் பிடித்திழுத்து கழுத்தில் சுற்றியிருந்த வஸ்திரத்தையும் பற்றி இழுத்தார்கள். இக்கோபக் குறிகளைக் கண்ட சாந்தமூர்த்தி இமாம் ஹஸன் அவர்கள் ரபீஆ, ஹமதான் இருவரையும் கூவி அழைத்தார்கள். அவர்களிருவரும் பாய்ந்தோடி வந்து இமாம் அவர்களைக் காரிஜிகளின் பிடியினின்றும் விடுவித்தார்கள். இனியும் அங்கிருப்பது பொருத்தமல்லவெனக் கருதிய இமாம் அவர்கள் தங்கள் அசுவத்தின் மீதேறி மதாயினை நோக்கிப் புறப்பட்டார்கள்.

வழியில் ஜர்ராஹ் பின் கபீஸா என்பவன் குதிரையின்மீது பாய்ந்து வந்து தாக்கினான். அவனுடைய கட்கம் தவறி இமாம் அவர்களின் தொடையில் பாய்ந்து காயப்படுத்திவிட்டது. இமாம் அவர்களுடன் வந்து கொண்டிருந்த அப்துல்லாஹ் பின் ஹன்வலாவும், அப்துல்லாஹ் பின் லிப்யானும் பாய்ந்து

சென்று ஜர்ராஹைப் பிடித்து அங்கேயே தீர்த்துக் கட்டிவிட்டார்கள்.

இமாம் அவர்கள் மதாயினில் தங்கிக் காயத்தை குணப்படுத்திக் கொண்டு அப்துல்லாஹ் பின் ஆமிருடன் யுத்தம் செய்யப் புறப்பட்டார்கள். தங்களின் முன்னணிப் படையை கைஸ் பின் ஸஃது அன்ஸாரி தலைமையில் முஆவியாவின் படையை எதிர்ப்பதற்காக அன்பாருக்கு அனுப்பி வைத்தார்கள். அதற்குள் முஆவியாவை கைஸும், இமாம் ஹஸனை இப்னு ஆமீரும் பொருதும் முறையில் எதிர்நோக்கி நின்றனர்.

## யுக்தி பலித்தது

இச்சந்தர்ப்பத்தில் இப்னு ஆமீர் ஒரு யுக்தியைக் கையாண்டான். அது கோரிய பலனை அளித்தது. இப்னு ஆமீர் இமாம் ஹஸன் அவர்களின் படையினரை நோக்கி,

"ஏ, இராக் வாசிகளே! என் சம்பந்தப்பட்டவரை நான் ஹஸன் அவர்களுடன் யுத்தத்தில் ஈடுபட விரும்பவில்லை. நான் முஆவியாவின் முன்னணிப் படையின் தலைவன் என்ற முறையில்தான் இங்கு வந்திருக்கிறேன். முஆவியாவோ தாமே ஷாம் (சிரியா) தேசப் படையை நடத்தி அன்பாரை வந்து அடைந்துவிட்டார். இதுவே உண்மை நிலை. எனவே, நீங்கள் இமாம் ஹஸன் அவர்களுக்கு என் ஸலாம் (ஆசியை) கூறுங்கள். அவர்கள் மீதும் அவர்களுடைய படைகள் மீதும் பிரமாணமாகச் சொல்லுகிறேன், இது சமயம் அவர் யுத்தத்தை ஒத்திவைக்க வேண்டும். இதுவே எனது வேண்டுகோள்," என்று கூறினான்.

இவ்வார்த்தைகளைக் கேட்ட இமாம் அவர்களின் சைனியங்கள் 'சண்டிக் குதிரைக்குச் சறுக்கியதே சாக்கு' என்ற முறையில் தங்கள் தலைவரின் கருத்தைப் புறக்கணித்தவர்களாய் வாட்களை உறைகளில் செருகி விட்டனர். இந்நிலையினைக் கண்ட இமாம் ஹஸன் அவர்கள் இனி இவர்களை நம்புச் சண்டையிறங்குவது

அறிவீனமாகும் என எண்ணியவர்களாய் மதாயின் திரும்பிவிட்டார்கள்;

இதனைத் தெரிந்து கொண்ட அப்துல்லாஹ் பின் ஆமீர் தன் படையுடன் பின் தொடர்ந்து சென்று மதாயின் நகரை முற்றுகையிட்டான்; ஹலரத் ஹஸன் அவர்களும் முஆவியாவுடன் சமாதானங் காண விழைந்து நின்ற நிலையில், தமது இராக் படைகளின் வீரமற்ற கோழைத்தனத்தைப் பிரத்தியட்சமாகக் கண்டதின் பின் யுத்தமென்ற எண்ணத்தை அடியோடு கைவிட்டு விட்டார்கள்;

## கிலாபத் துறவு

எனவே, சில நிபந்தனைகளுடன் கிலாபத் பதவியைத் துறக்க முன் வந்தார்கள். அந்நிபந்தனைகளை அப்துல் லாஹ் பின் அமீர் மூலம் முஆவியாவுக்கு அனுப்பி வைத்தார்கள்.

அந்நிபந்தனைகளாவன:—

(1) இராக் தேசத்தைச் சேர்ந்த எவரும் கோபத்தின் காரணமாகவோ அல்லது பொறாமையின் காரணமாகவோ கைது செய்யப்படக் கூடாது;

(2) பிரிவு அல்லது பாகுபாடின்றி அனைவருக்கும் ஒரே விதமான பாதுகாப்பு அளிக்கப்பட வேண்டும்;

(3) இராக் தேச வாசிகள் ஏதேனும் கடுமையான வார்த்தைகள் கூறியிருப்பார்களானால் அவை ஆத்திரத்தில் கூறப்பட்டதாக மதிக்கப்படவேண்டும்;

(4) அஹ்வாஜ் பகுதியில் வசூலாகும் வரி, வருமானங்கள் அத்தனையும் ஹஸன் அவர்களுக்கே கொடுக்கப்படவேண்டும்; (இதில் மற்றொருவருக்கும் பாத்தியங் கிடையாது);

(5) ஹுஸைன் அவர்களுக்கு ஆண்டு தோறும் இரண்டு லட்சம் திர்ஹம் (ரூபாய் 50,000) கொடுக்கப்பட வேண்டும்;

(6) சன்மானங்களும் அன்பளிப்புகளும் வருமாயின் அவற்றின் பங்கீட்டின்போது பனூ அப்துஷ்ஷம்ஸைவிட (பனூ உமய்யா) ஹாஷிம்களுக்கே முன்னுரிமை வழங்கப்படவேண்டும்;

(7) முஆவியா தமது ஆயுட்காலத்தில் தமக்குப் பின் கலீபாவாகத் தம் வாரிசுகளில் எவரையும் நியமிக்கக் கூடாது. முஸ்லிம் பெருமக்களே கலீபாவைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

முஆவியா அவற்றை அப்படியே ஏற்றுக் கொண்டார்; அவற்றை ஏற்றுக் கொள்வதாய் தம் கைப்பட எழுதிக் கையெழுத்திட்டு அரசாங்க முத்திரையும் பதிப்பித்தார்; மற்றும் பல தலைவர்களையும் சாட்சிகளாகக் கையெழுத்திடுமாறு செய்தார். பின்னர் அக் கடிதத்தை இமாம் ஹஸன் அவர்களிடமே திருப்பி அனுப்பிவிட்டார். இது ஹிஜ்ரி 41 ரபீயுல் அவ்வல் பிறை 25-ல் நிகழ்ந்தது;

இமாம் ஹஸன் அவர்கள் தாம் கிலாபத்தைத் துறந்துவிட்ட விஷயத்தை ஷாம் படைகளை எதிர்த்து நின்ற கைஸ் பின் ஸஃது அன்சாரிக்கு அறிவித்து அவர்களுடன் யுத்தம் செய்யாது மதாயின் திரும்பி விடுமாறு கட்டளையிட்டிருந்தார்; இவ்விஷயத்தை கைஸ் தம் படையினருக்குப் படித்துக் காண்பித்த பின் அவர்களை கூஃபாவுக்கு அனுப்பிவிட்டு மதாயின் வந்தார்; இமாம் ஹஸனும் அவரும் அங்கிருந்து கூஃபா திரும்பினர். இவர்களைத் தொடர்ந்து அமீர் முஆவியாவும் கூஃபா வந்து சேர்ந்தார். பின்னர் இருவரும் சந்தித்து உரையாடி, கடித மூலம் நடந்த உடன் படிக்கையை நேருக்கு நேர் வாய்மொழியால் ஊர்ஜிதம் செய்து கொண்டனர்.

இதன் பின், அங்கு அப்பொழுது அமீர் முஆவியாவுடனிருந்த யுக்தியில் வல்லவரான அம்ருப்னுல் ஆஸ், இமாம் ஹஸன் அவர்கள் தாம் கிலாபத்தைத் துறந்து விட்ட செய்தியை மக்கள் முன்பாகப் பிரகடனப்படுத்த வேண்டுமென முஆவியாவுக்கு ஆலோசனை கூறினார்;

அவரும் அதை ஒப்புக்கொண்டு இமாம் ஹஸன் அவர்களிடம் தெரிவித்தார்: விஷயத்தைப் புரிந்து கொண்ட அமைதியின் திருவுருவம், சாந்த, சற்குண சொரூபியான இமாம் அவர்கள் அதனை ஏற்றுக் கொண்டு மாபெரும் பொதுக்கூட்டத்தில் தமது கிலாபத் துறவு பற்றிய விஷயத்தை வெளியிட்டார்கள்:

''ஏ, மனிதர்களே! ஆண்டவனை வணங்கிப் போற்றிப் புகழ்ந்து நான் கூறுகிறேன்; நம் முன்னோர்களைக் கொண்டு ஆண்டவன் நமக்கு நேர்வழியைக் காட்டினான்; பின்வந்தவர்களால் இரத்தம் வெள்ளமாக ஓடுமாறு செய்தான். புத்திசாலிகளாயுள்ளவர்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சி நடப்பதே சிறப்புடைய தாகும்: கேவலத்துள் தலையாயது துர்நடத்தையாகும். இது சமயம் கிலாபத் சம்பந்தமாக எனக்கும் முஆவியாவுக்கு மிடையே அபிப்பிராய பேதம் காணப்படுவதை நீங்களெல்லாம் உணர்ந்தே இருக்கின்றீர்கள். இந்தக் கிலாபத்துக்கு உரிமையுள்ளவர் நாமா அல்லது அவரா என்பதுதான் தற்சமயமுள்ள பிரச்சினை. உண்மை எதுவாயினும், முஹம்மது (ஸல்) அவர்களின் உம்மத்து (கூட்டத்தார்)களுக்குள் எவ்விதச் சண்டையும், உயிர் சேதமும் ஏற்படாமல் பாதுகாக்க வேண்டு மென்னும் நோக்கத்தின் காரணமாகவே நான் இந்தக் கிலாபத்தைத் துறக்க முன்வந்தேன். (அருகிலிருந்த அமீர் முஆவியாவைப் பார்த்து) இந்தக் கிலாபத் என்னும் விஷயம் தங்களுக்கு ஒரு குழப்பமானதும் சோதனை சூழ்ந்ததுமாகும். இது சில நாட்களின் வாழ்க்கையாகும் என்பதை நீங்கள் உணரவேண்டும்,'' என்றார்கள் இமாம் ஹஸன். இதைக் கேட்டவுடன் அமீர் முஆவியாவுக்கு அப்பால் கேட்க மனம் சகிக்கவில்லை. எனவே, தொடர்ந்து பேசிக்கொண்டிருந்த இமாம் ஹஸன் அவர்களைப் பார்த்து, ''போதும், போதும்; இதுவரை சொன்னது போதும், நிறுத்துங்கள்'' என்றார். மேலும், தம் அருகில் அமர்ந்திருந்த அம்ருப்னுல் ஆஸை நோக்கி, ''இம்மாதிரியான வார்த்தைகளை ஹஸன்

வாயால் நான் கேட்க வேண்டுமென்பது உமது விருப்பமாயிருந்ததுபோலும்," என்று கடிந்து கொண்டார், முஆவியா (ரலி).

ஹுஸைன் (ரலி) அவர்களுக்கு தம் சகோதரர் ஹஸன் (ரலி) முஆவியா (ரலி)வுடன் இணக்கம் கண்டு பித்துச் சமாதானம் செய்து கொண்டது பிடிக்கவில்லை. முஆவியாவை நம்ப வேண்டாமென்று அவர் ஆரம்ப முதல் கூறிவந்தார். ஹாஷிம் குலத்தவர்களில் அநேகரும் இவ்விதக் கருத்துக் கொண்டவர்களாகவே இருந்தனர். என் செய்வது? இராக்கியர்களிடம் இமாம் ஹஸன் (ரலி) அவர்கள் பெற்ற கசப்பான அனுபவம் அவரை, மேலும் அவர்கள் மீது நம்பிக்கைகொள்ள முடியாதவாறு செய்துவிட்டது. முஆவியாவுடன் வீணில் போரிட்டுத் தோற்று அவமானமடைவதிலும் சமாதானம் காணுவதே அறிவுடைமை எனக் கண்டார் இமாம் ஹஸன் (ரலி). எனவே, மிக்க நியாயமாகவே அவர் சமாதானப பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். அதன் மூலம் நீண்ட காலத்திற்கு நடைபெறக்கூடிய ஒரு யுத்தத்தின் கோரப் பிடியிலிருந்தும் தம் மக்களைக் காப்பாற்றினார்.

புரட்சியையும், குழப்பத்தையும், கலகத்தையும் இங்ஙனம் முடிவுக்குக் கொண்டு வந்ததன் பின் ஹிஜ்ரி 41-ல் இமாம் ஹஸன் (ரலி) அவர்கள் தங்கள் குடும்பத்தார் அனைவரையும் அழைத்துக் கொண்டு கூஃபாவிலிருந்து மதீனாவுக்கு வந்து விட்டார்கள். "இவர் தலைமை தாங்கும் என் மகன்; இவர் மூலம் பிளவுண்ட முஸ்லிம்களின் இரு பெருங் கூட்டத்தினரிடையே சமாதானமும் அமைதியும் நிலவும்" என அண்ணல் நபி (ஸல்) இமாம் ஹஸன் (ரலி) விஷயத்தில் கூறிப்போந்த தீர்க்க தரிசனம் இங்ஙனம் பூர்த்தியாயிற்று. இமாம் ஹஸன் (ரலி) அவர்கள் சுமார் ஆறு மாத காலமே கலீபாவாகப் பதவி வகித்திருந்தார்.

இமாம் ஹஸன் (ரலி) அவர்கள் அமீர் முஆவியாவுடன் உடன்படிக்கை செய்து கொண்டு கிலாபத்தை

விட்டுக் கொடுத்தது சுயநலமிகள், கோழைகள் நீங்கலாக அவர்களது அத்யந்த விசுவாசிகளுக்கும் ஹலரத் அலி அவர்களைச் சார்ந்தோருக்கும், மிகுந்த ஏமாற்றத்தையும் மன வேதனையும் அளித்தது.

இமாம் ஹஸன் அவர்கள் கிலாபத்தைத் துறந்து மதீனா வந்த பின், தங்கள் பாட்டனாரான ரசூலுல்லாஹ் அவர்களின் ரௌலாவுக்கருகாமையிலேயே வசித்துத் தம் வாழ்நாட்களைக் கழித்து வந்தார்கள். இவ்வாறிருந்து வரும் பொழுது அவர்கள் மனைவி ஜஃதா பின்த் அஷ்அத் என்பவர் யாருடைய சூழ்ச்சியாலோ அல்லது ஏமாற்றுதலினாலோ அல்லது சொந்தக் குரோதத்தாலோ இமாம் அவர்களுக்கு விஷம் கலந்த பானத்தைக் கொடுத்துவிட்டதாகக் கூறப்படுகிறது. விஷத்தின் கொடிய நச்சுத் தன்மையால் அதை அருந்திய மூன்றும் நாள் ஹிஜ்ரி 50-ம் ஆம் ஆண்டு ரபியுல் அவ்வல் மாதம் தமது 47-ம் வயதில் மரணமானார்கள். (இன்னாலில்லாஹி...) இவர்களின் புனித உடல் ஜன்னத்துல் பஃகீயில் அன்னை பாத்திமா ஜஹ்ரா அவர்களின் கப்ருக்கருகாமையில் நல்லடக்கம் செய்யப்பட்டது. இவர்களின் மரணங் குறித்து மதீனா நகரில் மக்கள் அனைவரும் ஆழ்ந்த துயருற்றனர்.

## குணச் சித்திரம்

ஹலரத் இமாம் ஹஸன் அவர்கள் அழகிலும், ஒழுக்கத்திலும், நடை, உடை, பாவனைகளிலும் ஓரளவு தங்கள் பாட்டனார் ரசூலுல்லாஹ் அவர்களை ஒத்திருந்தார்கள்.

நபிகள் நாயகம் ரசூலுல்லாஹி (ஸல்) அவர்கள் மண்ணுலகைவிட்டுப் பிரிந்த நேரத்தில் இமாம் ஹஸன் அவர்கள் எட்டு வயதினராகவே இருந்தார்கள். எனவே மார்க்கம் சம்பந்தமாகவும் பாரமார்த்திகம் சம்பந்தமாகவும் நேரே பாட்டனார் அவர்களினின்றும் அதிகமாகத் தெரிந்துகொள்ள அவர்களுக்கு வாய்ப்பில்லையாயினும் 'குல விருது கல்லாமல் பாகி'

என்பதற்கேற்ப இமாம் அவர்கள் எந்த அறிவுப் பட்டணத்தின் மடியில் விளையாடித் திரிந்தார்களோ, எந்த அறிவுப் பட்டணத்தின் தலைவாயிலாய் விளங்கியவரின் திருப்புதல்வராய் வளர்ந்தார்களோ அவ்விருவரின் ஞானங்களும் அவர்களை இயற்கையாகவே மாபெரும் அறிவாளியாகவும் ஞானாசிரியராகவும் ஆக்கிவிட்டன; அன்று மதீனாவில் கல்விக் களஞ்சியங்களாக விளங்கிய பெரியார்களுள் இமாம் ஹுஸைன் அவர்களும் ஒருவராகத் தலைசிறந்து விளங்கினார்கள்.

மார்க்க சம்பந்தமான கலாஞானங்களைத் தவிர மக்களிடையே வழக்கத்தில் காணப்பட்ட பேச்சு வன்மை, கவிதை யாத்தல் போன்ற கலைகளிலும் இமாம் ஹுஸைன் அவர்கள் பாண்டித்தியம் பெற்றிருந்தார்கள். இவர்களின் பேச்சு மென்மையாக இருந்தாலும் கேட்போரின் மனதில் உணர்ச்சியையும் உத்வேகத்தையும் தூண்டக்கூடினவாய் அமைந்திருந்தன.

ஒரு சமயம் ஒருவர் இமாம் ஹுஸைன் அவர்களிடம் "வாழ்க்கை நடத்தும் வகையில் மிகமிக மேலானவர் யார்?" எனக்கேட்டார். அதற்கு இமாமவர்கள், "எவன் தன்னுடைய வாழ்க்கையில் மற்றவர்களையும் சேர்த்துக் கொள்கின்றானோ அவனுடைய வாழ்க்கை தான்" என்று கூறினார்கள். மேலும், கேள்வி கேட்டவர், "வாழ்க்கையில் மிகக் கேவலமானது எது?" என்று வினவினார். இதற்கு இமாமவர்கள், "ஒருவனுடன் மற்றவர் சேர்ந்து வாழ முடியாமல் நடந்து கொள்வது தான்" என்றார்கள்.

ஒருவர், "எனக்கு மரணமென்றால் பெரிய பயமாயிருக்கிறது" என்று இமாம் அவர்களிடம் கூறினார். இதைக்கேட்டதும் இமாமவர்கள், "நீர் உம் செல்வங்களையும் ஆஸ்தியையும் உமக்குப் பின்னால் வைத்துவிட்டீர்; இதனால்தான் நீர் மரணத்துக்குப் பயப்படுகின்றீர். இங்ஙனமில்லாமல் உம் செல்வங்களையும் சொத்துக்களையும் முற்கூட்டியே அனுப்பிவைத்து

விடுவீராயின் (தர்ம வழியில் செலவு செய்து விடுவீராயின்) அதைப்போய் பெற்றுக் கொள்வதற்கு நீர் துடிதுடிப்பீர்; மரணத்தைப்பற்றி நீர் அச்சங்கொள்ள மாட்டீர்'', என்று புத்திமதி கூறினார்கள்.

மேலும் இமாம் ஹஸன் அவர்கள், ''சற்குணமென்பது பத்து அம்சங்களைக் கொண்டதாகும். அவை (1) உண்மை உரைத்தல், (2) யுத்தத்தின்போது கடுமையாகத் தாக்குதல், (3) வேண்டுவோருக்கு ஈதல், (4) அழகான சுபாவம், (5) நன்றியறிதலுடன் பகரம் செய்தல், (6) உறவின் முறையாருடன் ஒன்றித்திருத்தல், (7) அகத்திலுள்ளோரைப் பாதுகாத்தல், (8) உரிமையை ஏற்றுக் கொள்ளுதல், (9) விருந்தோம்பல், இவை எல்லாவற்றைக் காட்டினும் (10) மனிதன் வெட்கத்துடனும் நாணத்துடனும் இருந்து வருதல்,'' என்று கூறியுள்ளார்கள்.

ஹலரத் அலி கர்ரமல்லாஹு அவர்கள் மற்ற சாதாரண மக்களைப்போல் மரணமடையவில்லை என்றும், அவர்களின் சரீரம் வானலோகத்திற்கு உயர்த்தப்பட்டிருப்பதால் இறுதி நாளைக்கு முன் அவர்கள் உயிர்பெற்று பூமிக்குத் திரும்புவார்கள் என்றும் ஷியாக்களில் ஒரு சிலர் எண்ணியும், கூறியும் வந்தனர். இவ்விஷயம் ஹலரத் ஹஸன் அவர்களுக்குத் தெரிய வந்ததும், ''இக்கூற்றுளார் பொய்யர்கள். ஆண்டவன் மீது பிரமாணமாக இவர்கள் எம்மைச் சார்ந்தவர்களே அல்லர்; என் தந்தையான ஹலரத் அலி அவர்கள் உயிர்பெற்று மீண்டு வருவதென்பது உண்மையாயிருக்குமாயின், அவர்களுடைய சொத்துக்களை நாங்கள் பிரித்திருக்கவே மாட்டோம்; மேலும் அவர்களுடைய மனைவியருக்கு மறு விவாகமும் செய்து வைத்திருக்க மாட்டோம்'', என்று கூறி அக்கூற்றைப் பொய்ப்பித்தார்கள்.

இமாம் ஹஸன் (ரலி) அவர்களைப் 'பொறுமையின் குன்று' எனக்கூறினால் அது மிகையாகாது. ''ஹஸனுக்கு என்னுடைய பொறுமையும், உருவமும் கிடைத்திருக்

றது.'' என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் திருவாய் மலர்ந்துள்ளார்கள். இமாம் அவர்களின் தன்மையை உள்ளபடி உணர்ந்து கொள்ளாத ஒரு சிலர் அவர்களை இழிசொற்களால் நிந்தனை செய்தார்கள். அவர்கள் அவ்விதக் கொடுஞ்சொல் பேசும் மக்களைப் பார்த்து, ''யான், நீங்கள் கூறுவது போன்று இல்லை. ஆயினும், ஆட்சிப்பிடித்துப்பிடித்து முஸ்லிம்களுக்கிடையே இரத்த வெள்ளம் ஓடுவதை நான் விரும்பவில்லை,'' என்று மட்டும் கூறிக்கொண்டிருந்தார்கள்.

மர்வான் என்பவர் ஹழரத் அலீ (ரலி) அவர்களை யும் இமாம் ஹஸன் அவர்களையும் வாய்க்கு வந்தபடி ஏசிப் பேசித் திரிபவராக இருந்து வந்தார். அப்படிப் பட்ட மர்வான் இமாம் ஹஸன் அவர்கள் இறந்த பொழுது தேம்பித் தேம்பி அழுதார். இதைக்கண்ட இமாம் ஹுஸைன் அவர்கள், ''ஏ, மர்வான்! நீர் ஏன் அழுகிறீர்? என் சகோதரர் ஹஸன் உயிரோடிருக்கு மட்டும் நீர் கொடுக்கவேண்டிய துன்பங்களனைத்தை யும் கொடுத்துவிட்டீரே! இன்னும் என்ன பாக்கி இருக்கிறது?'' எனக் கேட்டார்கள். அதற்கு மர்வான், எதிரே இருந்த ஒரு மலையைச் சுட்டிக்காட்டி, ''நான் எத்தனையோ கஷ்டங்களைக் கொடுத்தேன். ஆனால், ஹஸன், இம்மலையைக் காட்டினும் அதிகப் பொறுமை யுடனேயே இருப்பதைக் கண்டேன்,'' என்று பதிலுரைத் தார்.

## குடும்பம்

இமாம் ஹஸன் (ரலி) அவர்கள் பல மனைவியரை மணந்துள்ளார்கள். எனினும், ஒரே சமயத்தில் அவர் கள் நான்கு மனைவியருடன் மட்டுமே வாழ்க்கை நடத்துபவர்களாயிருந்தனர். இவர்கள் மனைவியர் மூலம் அவர்களுக்கு பாத்திமா என்ற பெண்ணும், உஸைல், ஹுஸைன், இஸ்மாயீல், அஹ்மத், அப்துர் ரஹ்மான், அப்துல்லாஹ், உமர், ஸைத், ஹஸனுல் முதன்னா, காஸிம், ஜஃபர் ஆகிய ஆண்களும் பிறந்தனர்.

# இமாம் ஹுஸைன் (ரலி)

ஹலரத் இமாம் ஹஸன் (ரலி) அவர்களுடன் கிலாபத் என்னும் ஜனநாயக ஆட்சி முடிந்து (மடிந்து) முடியாட்சி என்னும் எதேச்சாதிகார ஆட்சி இஸ்லாமிய சாம்ராஜ்யத்தில் தோன்றிவிட்டது. இமாம் ஹஸன் (ரலி) கிலாபத்தை துறந்தார்; அமீர் முஆவியா தம்மைக் கலீபாவாகப் பிரகடனப் படுத்திக் கொண்டார்; ஏற்காதவர்களை சாம, பேத, தான, தண்டத்தால் ஏற்குமாறு செய்தார்.

ஹலரத் இமாம் ஹுஸைன் அவர்கள் தம் சகோதரரின் முடிவை மனமின்றியே ஏற்றுக்கொண்டு விசுவாசப் பிரமாணம் செய்து கொடுத்தார்கள். எனினும், முஆவியாவின் காலத்தில் நடைபெற்ற இஸ்லாமிய சாம்ராஜ்ய சார்பான யுத்தங்களிலும் பங்கு கொண்டார்கள்.

ஹிஜ்ரி 56-ம் ஆண்டு அமீர் முஆவியாவுக்கு அந்திய காலம் நெருங்கி வந்து கொண்டிருந்தது; இது வரை ஆட்சியின் ஏகபோக உரிமையையும், அதன் இன்ப சுகங்களையெல்லாம் அனுபவித்தது போதும், இனியாகிலும் பெருமானார் (ஸல்) அவர்களும் குலபாயெ ராஷிதீன்களும் விரும்பி நின்ற, வகுத்தளித்த, ஜனநாயகம் மீண்டும் துளிர்க்கட்டும் என்று நினைத்துப் பார்க்காமல், தம் சந்ததி வாழையடி வாழையாக இஸ்லாமிய சாம்ராஜ்யத்தை அடைய வளைந்து ஆட்சி செலுத்தி வரவேண்டும் என்ற எண்ணம், ஆமீர் முஆவியாவின் உள்ளத்தில் வேரூன்றத் துவங்கிவிட்டது.

கிலாபத் என்பதன் உயிரோட்டம், அதன் சாரம், ஆத்மீகமும் தீவிர ஜனநாயகமும் பொதிந்தவையாகும். இஸ்லாம் சகல அதிகாரங்களுக்கும், உடைமைக்காரன் சர்வ சக்தனான அல்லாஹ் ஒருவனே என்பதில் ஆழமாக வேரூன்றி நிற்கின்றது. இந்த அதிகாரம் மக்

தன் கைக்கு வந்த அதனை அவர்கள் மிகுந்த இறை அச்சமும், ஆளும் தகுதியும் கொண்ட ஒருவரிடம் ஒப்படைக்கின்றனர்; இவரே கலீபா என்னப்படுவார்; அவர் இந்த ஆட்சியதிகாரத்தை ஒரு தூய அமானிதமெனப் பெறுகிறார்; அவர் தமது கலீபா பதவியைத் தம் சொந்த நலன்களுக்காக பயன்படுத்தக் கூடாது; மாறாக, இறைவனின் பரலோக ராஜ்யம் பூவுலகில் நடைபெறுவதற்கான கருவியாகவே அவர் தம்மை ஆக்கிக்கொள்ள வேண்டும்; இந்த முறையிலேயே பெருமானார் (ஸல்) அவர்களுக்குப்பின் குலபாயெ ராஷிதீன்களான அபூபக்கர் (ரலி), உமர் (ரலி), உதுமான் (ரலி), அலீ (ரலி) ஆகியோர் நடந்து வந்தனர்;

## குடும்ப வழி ஆட்சிக்கு வித்திட்டார் முஆவியா

ஆனால் முஆவியா (ரலி) அவர்களின் ஆட்சியின் கீழ் எல்லாம் தலைகீழாக நடக்க ஆரம்பித்து விட்டன; அவர் தமது இறை அச்சம் காரணமாகவோ அல்லது நபித்தோழர்களின் மத்தியில் ஓர் உன்னதப் பதவி வகித்ததின் விளைவாகவோ கலீபா பதவிக்கு வரவில்லை; மாறாக, அவர் தமக்கிருந்த இராஜ தந்திரத்தால் தான் அதனை அடைந்தார். இது நான்கு கலீபாக்களும் நடந்து காட்டிய ஜனநாயக மரபுக்கு மாற்றமும் விரோதமுள்ளதாகும்; இது குடும்ப வழி ஆட்சி முறைக்கு தடம் அமைத்துக் கொடுப்பதாக ஆகிவிட்டது;

முஆவியா (ரலி) மாபெரும் ஆட்சியாளர் என்பதில் சந்தேகமில்லை; ஆனால் இஸ்லாத்தின் தூதும் நோக்கமும் பெரிய அரசுகளை உற்பத்தி செய்வதில் அல்லவே! இஸ்லாம் மக்கள் அனைவருக்கும் சமத்துவ நியாயம் வழங்குவதன்றி, சமுதாயத்தில் உன்னத ஸ்தானம் பெறுவதற்கு ஒவ்வொருவரது தகுதியை அல்லவோ அளவுகோலாக ஆக்கியுள்ளது! ஜனநாயகத்துக்கு முஆவியா (ரலி) கொடுத்த மரண அடி இன்று வரை 'இஸ்லாம்' - ஜனநாயகத்தின் பிறப்பிடம் - தலை

## பொருளடக்கம்

முடியாதவாறு ஆகிவிட்டது: ஆகவே, தமக்குப் பின் தம் மகன் யஜீது ஆட்சிக்கு வரவேண்டுமென விரும்பினார்; அதற்குரிய ஏற்பாடுகள் அனைத்தையும் தமது மரணத்துக்கு முன்பே செய்து வாக்குகளைச் சேகரித்தார்; முஆவியாவின் இந்த முறையைப் பலர் விரும்பவில்லை; ஒப்புக் கொள்ளவில்லை.

முஆவியா (ரலி) மக்கா சென்றபொழுது, ஹஜ்ஜு செய்ய வந்திருந்த அப்துல்லாஹ் பின் உமரைச் சந்தித்து தம் மகனைக் கலீபாவாக்குவது பற்றி அவரிடம் எடுத்துக் கூறினார். அதற்கு அப்துல்லாஹ், "உங்களுக்குமுன் நான்கு கலீபாக்கள் இருந்தார்கள். அவர்களுக்கும் ஆண் மக்கள் இருந்தார்கள். உங்கள் மகன் அவர்களின் மக்களைவிட எந்த வகையிலும் உயர்ந்தவரல்ல. நீங்கள் விரும்புவதுபோல அவர்களில் யாரும் தம் மகனை கலீபாவாக்க விரும்பினார்களில்லை. அவர்களெல்லாம் முஸ்லிம்களுடைய நன்மையையே பிரதானமாகக் கருதி நடந்து கொண்டனர். என்னைப் பொறுத்தவரை நான் முஸ்லிம் சகோதரத்துவத்தின் ஓர் உறுப்பினன். மற்றவர்கள் ஒரு பாதையில் சென்றால் அவர்களையே நானும் பின் தொடருவேன்," என்று கூறி விட்டார்.

முஆவியா (ரலி) தம் தவறைத் தெரிந்துகொள்ளும் முறையில் மதீனாவில் ஒரு நாள் இமாம் ஹுசைன் (ரலி) அவர்களும் மற்றும் சிலரும் அவரைப் போய்க் கண்டு,

(1) நீங்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின்முன் மாதிரியைப் பின்பற்றுங்கள். அதற்கு மாற்றமாக யாரையும் கலீபாவாகத் தெரிந்தெடுக்காதீர்கள்; மக்கள் தங்களுக்கு விருப்பமான ஒருவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளட்டும்; அல்லது,

(2) அபூபக்கர் (ரலி) அவர்களின் உதாரணத்தைப் பின்பற்றுங்கள். சிறந்த தகுதிகள் வாய்ந்த உங்களின் உறவினர் அல்லாத ஒருவரை நியமனம் செய்யுங்கள் அல்லது,

ர்

(3) உமர் (ரலி) அவர்களைப் பின்பற்றுங்கள்; அவர்களைப்போல் ஒரு குழுவை நியமித்து உங்களுக்குப் பின் ஒருவரைக் கலீபாவாக நியமிக்கச் செய்யுங்கள் என்றனர்.

இவை எதையும் முஆவியா (ரலி) ஏற்றுக்கொள்ளவில்லை. மக்கள் ஏற்கனவே யஜீதுக்கு விசுவாசப் பிரமாணம் செய்துவிட்டார்களெனக் கூறிவிட்டார். பெரும்பாலான மக்கள் [தமக்குப் பயந்து] தம் எண்ணத்தை ஏற்றுக்கொண்டபின் ஒரு சிலர் மறுப்பதால் ஆகப்போவது ஒன்றுமில்லை என எண்ணிய அமீர் முஆவியா மௌனமாக இருந்துவிட்டார்.

அமீர் முஆவியா மிகுந்த தீர்க்காலோசனையும் புத்தி நீட்சண்யமுமுள்ளவர். ஒரு சிறு குறிப்பிலேயே விஷயமனைத்தையும் விளங்கிக்கொள்ளும் ஆற்றல் படைத்தவர். ஆகவே, தமக்குப்பின் அப்துல்லாஹ் பின் ஜுபைர் கிலாபத்துக்குப் போட்டியிடலாமென்று பெரிதும் எண்ணினர். இமாம் ஹுஸைனையும் இராக் வாசிகள் எஜீதுக்கு விரோதமாய் கலீபாவாக நியமனம் செய்யலாம் என்றும் எதிர்பார்த்தார். எனவே, அமீர் முஆவியா மரணமடையும்போது தம் மகன் எஜீதிடம் இவ்விருவரின் விஷயத்தையும் எடுத்துக் கூறிவிட்டுச் செல்லத் தவறவில்லை. அப்பொழுது ஹலரத் ஹுஸைன் விஷயமாகக் கூறும்பொழுது, 'என் மகனே! எனக்குப் பின் இராக் வாசிகள் ஹுஸைனை உமக்கு எதிராக நிறுத்தலாம். அதற்கொப்ப ஹுஸைன் உம்மோடு போரிட்டு அவரை நீர் வென்று விடுவீராயின் மன்னிக்குந் தன்மையுடனும் பெருந்தன்மையுடனும் நீர் அவரிடம் நடந்துகொள்ளவேண்டும். ஏனெனில், அவர் நம் உறவினர். உம்மைவிட கிலாபத்துக்கு அதிக உரிமையுடையவர், ரசூலுல்லாஹ் (ஸல்)அவர்களுடைய அளவற்ற அன்பைப் பெற்றவர். இதை உம் நினைவில் எப்போதும் கொண்டு இருந்து வருவீர்!'' எனக் குறிப்பிட்டார்.

## எஜீதுக்கு அரியணை

ஹிஜ்ரி 60-ம் ஆண்டு ரஜப் மாதம் முதல் நாள் அமீர் முஆவியா தமது 78-வது வயதில் 19-ஆண்டு கிலாபத்துக்குப் பின் மரணமடைந்தார்: யஜீது சிம்மாசனம் ஏறினார்: அவரது முதல் வேலை அப்துல்லாஹ் பின் ஜுபைர், இமாம் ஹுஸைன் ஆகிய இருவரிடத்திலும் பைஅத் பெற வேண்டுமென்பதாகவே இருந்தது: இவர்கள் எஜீதுக்கு விசுவாசப் பிரமாணம் செய்து கொடுக்க-எதிர்காலக் கலீபாவாக ஏற்றுக் கொள்ள-முஆவியா உயிரோடிருக்கும்போதே மறுத்து விட்டனர்: எனவே, மக்கா, மதீனாவைக் கொண்ட ஹிஜாஸ் பகுதியிலும் இராக்கிலும் இவ்விருவருக்கும் செல்வாக்கிருந்ததால் இவ்விரு பகுதி மக்களும் தம்மையும் தம் கிலாபத்தையும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள், எதிர்ப்பார்கள் என எஜீது அச்சம் கொண்டார்: எனவே, இந்தவித இன்னல் இடையூறுகளினின்று தவிர்ந்து கொள்வதற்கு இமாம் ஹுஸைன், அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் ஆகிய இருவரின் விசுவாசப் பிரமாணங்களும் தமக்கு அவசியம் கிடைத்தாக வேண்டுமென எஜீத் முடிவு செய்தார்:

அவர் சிம்மாசனம் ஏறியதும் முதல் வேலையாக மதீனாவின் கவர்னரான வலீத் பின் உக்பாவுக்கு உத்தரவு ஒன்றை அனுப்பிவைத்தார். அதில் இமாம் ஹுஸைன், அப்துல்லாஹ் பின் ஜுபைர் இருவரிடமும் தம்மைக் கலீபாவாக ஏற்றுக் கொண்டதான வாக்குறுதியைக் கண்டிப்பாக வாங்கி அனுப்பவேண்டும் எனக் கண்டிருந்தது: முஆவியாவின் மரணச் செய்தியும் வாக்குறுதி பெற்று அனுப்புமாறு வந்த கட்டளையும் கவர்னர் வலீதுக்குக் கலக்கத்தை உண்டுபண்ணின. இவ் விஷயத்தை கவர்னர் தம் உதவியாளரும் ஆலோசகருமான மர்வானிடம் கலந்தார். கொடூரமும் கல்நெஞ்சமும் படைத்தவரான மர்வான், "குறிப்பிட்ட அந்த இருவரையும் கூப்பிட்டனுப்பித் தங்களின் விசுவாசப் பிரமாணத்தை அளிக்குமாறு கூறுங்கள்;

ஏற்றுக் கொண்டார்களாயின் நல்லது; மறுப்பார்களாயின் அவர்களின் தலைகளைக் கொய்துவிடுங்கள்,'' என முரட்டுத்தனமாக ஆலோசனை கூறினார். மேலும் ''அமீர் முஆவியாவின் இறப்புச் செய்தி இவர்களுக்குத் தெரிந்துவிடுமாயின் இவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வோரிடத்தில் தங்களைக் கலீபாவாகப் பிரகடனப் படுத்திக்கொண்டு நமது விஷயத்தை மிகவும் சிக்கலானதாக்கிவிடக்கூடும்'' என்ற அச்சத்தையும் கவர்னரின் மனதில் புகுத்தித் தமது வாதத்திற்கு வலுத்தேடிக் கொண்டார்.

மர்வானின் கருத்தறிந்து அதனை ஓரளவு ஏற்றுக் கொண்ட கவர்னர், இமாம் ஹுஸைன், அப்துல்லாஹ் பின் ஜுபைர் ஆகிய இருவரும் உடனே தம்மை வந்து காணுமாறு ஆளனுப்பினார். அழைப்பு அகால நேரத்தில் வந்திருப்பதால் இது முஆவியாவின் இறப்புச் செய்தியையும் எஜீதுக்குத் தம்முடைய பைஅத்தை (பிரமாணத்தை)ப் பெற வேண்டுமென்பதற்காகவுமே வந்திருக்கிறது என்பதை இமாம் ஹுஸைன் அவர்கள் புரிந்து கொண்டார்கள்.

## ஹுஸைன் [ரலி] சமாதானம்

எனவே, தங்களின் தற்காப்பிற்காகச் சிலரைத் தொடர்ந்து வருமாறு ஏற்பாடு செய்து கொண்டு கவர்னரின் மாளிகையை அடைந்தார்கள். இவர்களை எதிர்பார்த்துக் கொண்டிருந்த கவர்னர், இமாம் அவர்களைக் கண்டதும் முகமன் கூறி இருக்கை கொடுத்து இவர்கள் எண்ணியவாறே முஆவியாவின் இறப்புச் செய்தியையும், எஜீதுக்கு பைஅத் பெறுமாறு தமக்குக் கட்டளை வந்துள்ளதையும் தெரிவித்துக் கடிதத்தையும் காண்பித்தார். இமாம் ஹுஸைன் அவர்கள் முஆவியாவின் மரணத்திற்குத் தங்களின் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டவர்களாய் கவர்னரை நோக்கி, ''என்போன்ற ஒருவர் மறைவாகவும் இரகசியமாகவும் பைஅத் செய்வது அழகல்ல, முறையல்ல; இது தங்களுக்கோ அல்லது எனக்கோ

கௌரவமளிக்காது: நீங்கள் பொது மக்களையெல்லாம் எஜீதின் பைஅத்துக்காக அழைப்பீர்களல்லவா? அது சமயம் நானும் அக்கூட்டத்தாருடன் வருவேன்; பொதுமக்களான முஸ்லிம் சகோதரர்கள் அனைவரும் பைஅத் செய்யும்போது நான் ஏன் பின்வாங்கவேண்டும்! என்னைப் பற்றி நீங்கள் அதைரியப் படவேண்டியதில்லை'', என்று பவ்வியமாக எடுத்துக் காட்டினார்கள்; கவர்னர் வலீத், மர்வானைப் போன்ற முரட்டுச் சுபாவம் படைத்தவரல்லர்; இளகிய உள்ளம் கொண்டவர், எனவே அவர், இமாமவர்களின் வார்த்தையை ஏற்றுக் கொண்டார்; இமாம் அவர்களும் கவர்னர் மாளிகையைவிட்டும் வெளிவந்தார்கள். கவர்னருடன் இருந்த மர்வான், இமாமவர்கள் பைஅத் செய்யாமல் வெளியில் செல்ல அனுமதித்ததைக் கண்டு வெகுண்டவராய், ''நீர் எனது வார்த்தையை உதாசீனப்படுத்திவிட்டீர்; இனி நீர் அவரை எவ்வகையிலும் கவருவதோ, அடக்குவதோ முடியாத காரியம்,'' எனக் கூறினார். இதைச் செவிமடுத்த கவர்னர் வலீத், மர்வானை நோக்கி, ''உம்முடைய வார்த்தைகளைக் கேட்டு யான் வருந்துகிறேன்; ரசூலுல்லாஹ் அவர்களின் அன்புப் புதல்வியான பாத்திமாவின் குமாரர் ஹுஸைனுடைய இரத்தத்தை ஓட்டி என் கரங்களைக் கறைப்படுத்திக்கொள்ள வேண்டுமென்று நீர் விரும்புகிறீர்? அல்லாஹ்வின் மீது ஆணையாகச் சொல்கிறேன், இறுதி நாளில் போது ஹுஸைனுடைய இரத்தம் சம்பந்தமாக யாரிடம் கேள்வி கேட்கப்படுமோ அவர்பால், நன்மைகள், மிகமிகக் குறைவாகவே காணப்படும்,'' என உருக்கத்தோடு கூறினார்.

இமாம் ஹுஸைன் (ரலி) கவர்னர் மாளிகையினின்று வீடு திரும்பியபின் பைஅத் பற்றிச் செய்வதின்னதென்றறியாது திகைத்து நின்றார்கள்; காரணம்:

(1) எஜீதைக் கலீபாவாக ஏற்றுக்கொள்வது இஸ்லாத்தின் ஜனநாயகக் கொள்கைக்கு விரோதமானதாக இருந்தது; அரசாங்கத் தலைவரான கலீபாவாக-அமீருல் முமினீனாக-வரவேண்டியவர் பொதுமக்

களால் நேர்ந்தெடுக்கப்படவேண்டும்; அமீர் முஆவியாவினல் ஏற்பாடு செய்யப்பட்ட வாரிசு பாத்தியக் கிலாபத் உரிமை, முன்னர் நடந்த கலிபாக்களின் ஜன நாயகத் தேர்தல் முறைக்கு முற்றிலும் முரண்பட்டதாக, கைஸர் (ரூம் சக்கரவர்த்தி), கிஸ்ரா (பாரசீக சக்கரவர்த்தி) இவர்களின் சர்வாதிகார முறையைத் தழுவியதாக இருக்கிறது; எனவே, எஜீதை, முஸ்லிம்களின் கலிபாவாக முஆவியா நியமித்துச் சென்றதை இமாம் ஹுஸைன் அவர்கள் வன்மையுடன் எதிர்க்க வேண்டியவர்களாய் இருந்தார்கள்.

(2) பொதுமக்கள் ஏற்றுக்கொள்ளும் ஒன்றைத் தாமும் ஏற்றுக்கொள்ளவேண்டுமே என்னும் கட்டாயமும், தர்ம சங்கடமுமான நிலையும் அவர்களுக்கேற்பட்டது. ஏனெனின், கவர்னரைச் சந்தித்தபொழுது, ''பொதுமக்கள் எல்லாரும் ஏற்றுக்கொள்வதை யானும் ஏற்றுக் கொள்ளத் தயங்கமாட்டேன்,'' என அவரிடம் கூறினர்கள்.

முவியா தம் மகன் எஜீதைக் கலிபாவாக நியமித்துள்ள அக்கிரமத்தை எதிர்க்க வேண்டுமென்றும், தாங்களெல்லாம் இமாம் அவர்களை கலிபாவாக ஏற்றுக் கொள்ளச் சித்தமாக இருப்பதாகவும் இராக் வாசிகளெல்லாம் ஏராளமான-இரண்டு சாக்கு மூட்டைகள் கொள்ளுமளவுக்கு-கடிதங்கள் அனுப்பியிருந்ததும் அவர்களைத் திகைப்புறச் செய்தன; குழப்பத்தில் ஆழ்த்தின.

இமாம் ஹுஸைன் அவர்கள் கவர்னரைச் சந்தித்த இரண்டாம் நாள் அப்துல்லாஹ் பின் ஜுபைர் மதீனவை விட்டும் மக்காவுக்குப் பிரயாணமாகிவிட்டார்கள். மூன்றும் நாள் கவர்னர் வலீத் இமாம் ஹுஸைன் அவர்களுக்கு ஆளனுப்பி அவர்களின் முடிவை அறிந்துவரச் சொன்னார். அதற்கு இமாமவர்கள், ''இன்னும் ஒருநாள் அவகாசம் வேண்டும். அதன் பின் என் கருத்தைத் தெரிவிக்கிறேன்,'' என்று பதில் கூறி அனுப்பினர்கள்; அதற்கு வலீத் சம்மத

மளித்தார். எனினும் இமாம் அவர்களுக்கு எவ்விதத் தீர்மானத்துக்கும் வரமுடியவில்லை; ஒருவாறாக, மதீனாவிலிருந்து குடும்பத்தார் அனைவரையும் அழைத்துக்கொண்டு இரவில் பயணமாகி எங்காவது செல்லலாம் என்ற முடிவில் ஏற்பாடுகள் அனைத்தையும் செய்து முடித்தார்கள்.

## ஹனீபா பின் அலீ

எங்கு, எந்தப் பாதையில் செல்வதென்பது புரியாது நின்ற வேளையில் அவர்களின் சகோதரர் முஹம்மதிப்னு ஹனபிய்யா பின் அலீ இமாமவர்களிடம் வந்தார். அவர் சொன்னார்: ''தங்கள் எஜீதுக்கு பைஅத் செய்ய வேண்டாம்; ஒரு குறிப்பிட்ட நகரத்தையும் குறியாகக் கொண்டு புறப்பட வேண்டாம்; 'நான் கிலாபத்தை ஏற்றுக் கொள்ளத் தயார்' என்று மட்டும் பிரகடனம் செய்து விடுங்கள். இதைப் பொது மக்கள் ஏற்றுக் கொண்டார்களாயின், அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்துவோம்; அல்லது வேறு எவரையேனும் பொதுமக்கள் தங்கள் கலீபாவாகத் தேர்ந்தெடுத்துக் கொள்வார்களாயின், அதனால் தங்களுளுடைய அந்தஸ்துக்கும், தன்மைக்கும் எவ்வித ஹானியுமில்லை; இது சமயம் தாங்கள் ஏதேனுமொரு குறிப்பிட்ட கூட்டத்தாரின் பக்கமோ அல்லது ஒரு நகரத்தின் பக்கமோ நோக்கம் வைத்துச் செல்வீர்களாயின், ஒரு சிலர் தங்களை ஆதரிக்கக் கூடும்; வேறு சிலரோ தங்களுக்கு விரோதிகளாகி விடுவர். பின்னர் அவர்களிடையே கருத்து வேற்றுமைகள் வளரும்; இருவரும் சண்டையில் ஈடுபடுவர்; இறுதியாக, அவர்கள் தங்களின் முதல் எதிரியாக உங்களையே கொள்வர். முஸ்லிம் சமுதாயத்தின் மதிப்கொளு முத்தாய் விளங்கும் தாங்கள், மிகவும் இழிவான முறையில் சிக்கிக் கொள்ளும் நிலை ஏற்பட்டு விடும்'' என்று ஆலோசனை கூறினார்.

இமாம் ஹுஸைன் (ரலி) அதனைச் சரிதான் என்று ஏற்றவர்களாய் ''அவ்வாறாயின் இது சமயம் நான்

எங்கு செல்லலாம்?'' என வினவினர்கள்; அதற்கவர்; ''தாங்கள் நேரே மக்காவுக்கே செல்லுங்கள். அங்கு விஷயம் மனதுக்குத் திருப்திகரமாக அமைந்தால் நல்லதுதான்; மக்காவில் திருப்தியான ஒரு வழி தோன்றவில்லையாயின், தாங்கள் மலை, வனந்திரங்களின் பக்கம் சென்றுவிட வேண்டும்; ஒரே இடத்தில் தங்கியிருத்தல் கூடாது. இந்தக் கிலாபத் பற்றிய விஷயம் ஒருவாறு முடிவுக்கு வந்துவிட்டால், பின்னர் தாங்கள் எங்காவது ஒரு குறிப்பிட்ட இடத்தில் தங்கியிருந்து கொண்டு விஷயத்தை இலகுவாகவும் சரியாகவும் தீர்மானம் செய்துவிடுவீர்கள்,'' என்று எடுத்துக் கூறினர், முஹம்மத் பின் ஹனபிய்யா;

## மக்கா நகர்ப் பயணம்

இது சமயம் மதீனு நகரில் குழப்ப நிலை அதிகரித்து நின்றது. மேலும் இமாம் ஹுஸைன் அவர்களைக் கூஃபா வருமாறு கூறி மேலும், மேலும் கடிதங்களும் குழுக்களும் வந்த வண்ணமிருந்தன. எனவே, தம் சகோதரரின் வற்புறுத்தலின்படி மதீனுவிலிருந்து புறப்பட்டு முதன் முதலாக மக்கா நகருக்கே செல்லவதென இமாம் அவர்கள் தீர்மானித்தார்கள். குடும்பத்தாருடன் இரவில் பிரயாணம் புறப்பட்டார்கள். வழியில் அப்துல்லாஹ் பின் முத்தீஃ என்பவர் இமாம் அவர்களைச் சந்திக்க நேர்ந்தது. அவர் பயண விஷயத்தைக் கேட்டறிந்தபின், ''தங்கள் எண்ணத்தை மெச்சுகிறேன். ஆண்டவனுக்காக கூஃபாவுக்கு மட்டும் செல்ல எண்ணங் கொள்ளாதீர்கள், அது மகா பொல்லாத இடம்; தங்கள் தந்தையார் அங்கே தான் கொல்லப்பட்டார்கள்; தங்களுடைய மூத்த சகோதரர் [இமாம் ஹஸன் (ரலி)] அங்கே தான் நிராதரவாக விடப்பட்டு, அவமானப் படுத்தப்பட்டு, ஈட்டியாலும் காயப்படுத்தப்பட்டார்கள். எனவே, தாங்கள் எக்காரணத்தை முன்னிட்டும் இராக் செல்ல வேண்டாம்; மக்காவில் கஃபாவின் அருகிலேயே அமர்ந்திருப்பது தான் தங்களுக்கு ஏற்றமுடையதும் நன்மை பயப்பது

மாகும். ஹிஜாஸ் வாசிகள் தங்களையே தலைவராக் ஏற்றுக் கொள்ளச் சித்தமாயிருக்கிறார்கள். தாங்கள் மக்கா நகரிலேயே இருந்து கொண்டு மக்களைத் தங்கள் பக்கம் நன்மையின் பாதையில் ஒன்று திரட்டி விடலாம்,'' என்று மன்றாடிச் சொன்னார்.

மக்கா நகர் சேர்ந்தபின் இமாம் ஹுசைன் அவர்கள் தங்கள் பாட்டனாரான அபூதாலிபுக்குச் சொந்தமானதும் பெருமானார் (ஸல்) அவர்களும் ஹாஷிம் குலத்தவர்களும் குறைஷிகளின் கட்டுப்பாடு நிமித்தமாகச் சென்று மூன்றாண்டு காலம் அஞ்ஞாதவாசம் புரிந்த 'ஷுஃபே அபிதாலிப்' கணவாயில் சென்று தங்கினார்கள். இமாமவர்கள் மக்கா வந்திருக்கும் செய்தி தெரிந்த அந்நகர மக்கள் அன்பு மேலிட்டால் கூட்டங்கூட்டமாக வந்து தரிசித்துச் சென்றார்கள். இதனை அடுத்து கூபாவிலிருந்து பிரதிநிதிக் குழு ஒன்று வந்தது. அவர்கள் இமாமவர்களை அணுகி சந்தர்ப்ப சூழ்நிலைகளெல்லாம் பக்குவமாகக் கனிந்து நிற்பதாகவும் உடனே தங்களுடன் புறப்பட்டுவருமாறும் அழைத்தனர். எனினும், இமாம் ஹுசைன் (ரலி) அவர்கள், அவர்களின் ஆசைவார்த்தைகளில் மயங்கி விடாமல், அவர்களை நோக்கி, ''சகோதரர்களே! யான் உங்களுடைய அன்புக்கும் ஆதரவிற்கும் எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். நான் இது சமயம் உங்களுடன் புறப்படுவதற்குச் சாத்தியப்படாது. எனக்குப் பதிலாக என் சிறிய தந்தை உகைல் அவர்களின் மகனான என் சகோதரர் முஸ்லிமை உங்களுடன் அனுப்புகிறேன். அவர் அங்கு சென்று உண்மை நிலையைத் தெரிந்து வந்து கூறுவார். அதன் பின்னர் நான் கூபா வருவது பற்றியும் புறப்படுவது பற்றியும் தீர்மானித்து உங்களுக்குத் தகவல் தெரிவிக்கிறேன்,'' எனப் பதிலிறுத்துவிட்டு முஸ்லிமை அவர்களுடன் சென்று உண்மை நிலையை அறிந்து வருமாறு பணித்தார்கள்.

முஸ்லிம் இராக் வாசிகளுடன் மக்காவினின்றும் கூஃபா புறப்பட்டார். வழியில் எண்ணற்ற சிரமங்களை

அனுபவித்தவராய் அங்கு சென்று சேர்ந்தார். இவர் வந்தது நிமித்தமாக கூஃபா வாசிகளுக்கிடையே ஒரு விதப் பரபரப்பும் உத்வேகமும் எஜீதுக்கு விரோத மான பேச்சுக்களும் எழுந்துள்ளதை அரசாங்க ஒற்றர் கள் உளவெடுத்து முஸ்லிம் அங்கு வந்துள்ள விஷயத்தை திமிஷ்கிலுள்ள எஜீதுக்குத் தெரியப்படுத்தினர். உடனே இதற்குத் தகுந்த நடவடிக்கை மேற்கொள்ள வில்லையாயின் காரியம் மிஞ்சிவிடும் என்பதை அறிந்த எஜீது, தன் மந்திரி சர்ஜூனின் ஆலோசனையின்மீது பஸ்ராவிலிருந்த தன் கவர்னரான உபைதுல்லாஹ் பின் ஜியாதுக்குக் கட்டளையொன்று அனுப்பி, அதில், "கூஃபா நகர் சென்று முஸ்லிமை அங்கிருந்து அப்புறப் படுத்திடவேண்டும்; அவர் வெளியேற மறுப்பாராயின் அவரது சிரசைக் கொய்துவிடவேண்டும்" எனக் குறிப் பிட்டிருந்தார். அங்கு அப்பொழுது நுஃமான் கவர்ன ராக இருந்தார்.

## உபைதுல்லாஹ் பின் ஜியாத் கூஃபா வருகை

கூஃபா வாசிகள் இமாம் ஹுசைன் (ரலி) விரை வில் அங்கு வர இருக்கிறார்கள் என்பதைக் கேள்விப் பட்டதிலிருந்து புதிதாக வரக்கூடிய அறிமுகமற்ற பெரியார்களையெல்லாம் ஹலரத் ஹுசைன் அவர்கள் தான் வந்துவிட்டார்கள் என்று எண்ணிக் கொண்டு, "ஹுஸைனே வருக! உம் வரவு நல்வரவாகுக! நாங்கள் எல்லாரும் உமக்கு அர்ப்பணமாகக் கடவோம்," எனக் கூறி சந்தோஷ ஆரவாரங்கள் செய்து வந்தார்கள். இப்பொழுது, இப்னு ஜியாத் அங்கு வந்து கொண்டிருக் கும் மார்க்கத்திலும் அவனை இனம் தெரியாத மக்கள், அவன் சூதாக மக்கா வாசிகளின் உடையணிந்துவரு வதை அறியாது, அவ்வாறு கூறி, ஆரவாரம் செய்தனர். இவர்களின் 'ஹுசைன் துதிபாடும்' சொற்கள் இப்னுஜியாதின் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவது போல் இருந்தன. இந்த ஆத்திரத்தோடு அவன் கூஃபா நகரை அடைந்தான். மறுநாள் முதல் வேலை யாக அங்குள்ள ஜாம்ஆப் பள்ளியில் மக்களை ஒன்று

கூட்டி, தனது வருகையை அறிமுகப்படுத்திக் கொண்டு, சிறியதொரு உரை ஆற்றினன். அதில்,

"ஏ கூஃபா வாசிகளே! அமீருல் மூமினீன் (எஜீது) என்னை உங்கள் நகரமான கூஃபாவுக்கும் கவர்னராக்கி இருக்கிறார். துன்புற்றோருக்கு உதவியும், நேர்மையாளருக்கு நன்றியும், மூர்க்கர்களுக்கும் புரட்சி செய்பவர்களுக்கும் தண்டனையும் வழங்குமாறு அவர் எனக்கு உத்தரவிட்டுள்ளார். இதை நான் பூரணமாக நிறைவேற்றியே தீருவேன்.

"ஒவ்வொரு தெருத் தலைவனும் இப்பட்டணத்து எல்லைக்குள் நுழைந்துள்ள அல்லது நுழையும் எந்தப் புது முகத்தாரை, அல்லது காரிஜி, அல்லது சந்தேகப் பேர்வழியை என் முன்னே கொண்டுவந்து நிறுத்த வேண்டும். அவ்விதம் செய்யாமல் அரசுக்கு விரோதமான காரியங்களில் ஈடுபடுவதாகத் தெரிந்தால் அவனது வீட்டு வாசலுக்கு முன்பாகவே அவன் தூக்கிலிடப்படுவான். அந்தத் தெரு மக்களுக்கு அளித்து வரும் உதவித் தொகைகளும் நிறுத்தப்படும்.

"எம்மோடு மனமொத்து வேலை செய்பவர்களிடம் அளவற்ற அன்புடனே நடந்து கொள்வோம். ஆனால் துரோகிகளுக்கும் விரோதிகளுக்கும் நான் கொடிய நஞ்சாவேன்", என்று கூறினன்.

## முஸ்லிம் பின் உகைல்

இக்கூட்டத்திற்கு முஸ்லிமும் வந்திருந்தார். இப்னு ஜியாதின் வார்த்தைகளைக் கேட்டு அவர் மிகவும் நடுக்கமுற்றார். கூஃபா மக்களும் அவ்வாறே நடுக்கமுற்றனர். அன்றிரவு முஸ்லிம் தாம் தங்கியிருந்த இடத்தை விட்டு ரசூலுல்லாஹ் அவர்களின் குடும்பத்தார் மீது பேரன்பு பூண்டவரான கூஃபா பிரமுகர் ஹானீ பின் உர்வா மத்ஹஜி என்பவரிடம் வந்து அடைக்கலம் வேண்டினார். சிறிய தயக்கத்திற்குப் பின் அவர் இடங்கொடுக்க முன் வந்தார். முஸ்லிம்,

ஹானியின் வீட்டில் தங்கியிருந்ததால் ஹுஸைன் (ரலி) அவர்களின் ஆதரவாளர்கள் இரகசியமாக அங்கு வந்து போய்க் கொண்டு இருந்தனர். அவ்வாறு வருபவர்களிடம் ஹுஸைன் (ரலி) அவர்களுக்கு ஆதரவாக விசுவாசப் பிரமாணங்களும் வாங்கிச் சேகரிக்கப் பட்டன. அவ்வாறு பதினெட்டாயிரம் இராக் வாசிகள் இமாம் ஹுஸைன் அவர்களே தங்களின் கலீபாவாக இருக்க வேண்டுமென விருப்பந் தெரிவித்துக் கைச் சாத்திட்டுக் கொடுத்தனர்.

இப்னு ஜியாதுடன் பஸ்ராவிலிருந்து வந்தவர்களுள் இமாம் அவர்களின் பேராதரவாளரான ஷுரைக் பின் அவ்ர் ஸல்மீ என்பவரும் ஒருவர். இவர் ஹானியின் நெருங்கிய நண்பர். எனவே, ஷுரைக்கை, ஹானி தம் விருந்தினராகத் தம் வீட்டிலேயே தங்க வைத்துக் கொண்டார். முஸ்லிமும் அங்கே தங்கியிருப்பதை அறிந்து ஷுரைக் மகிழ்ச்சியுற்றார்.

எதிர்பாரா வண்ணம் ஷுரைக் நோயுற்றார். அவரை நலன் விசாரிக்க இப்னு ஜியாத் ஹானியின் இல்லம் வந்தான். இச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி அவனைத் தீர்த்துக் கட்டிவிடுமாறு ஷுரைக் முஸ்லிமுக்கு முற்கூட்டியே யோசனை கூறி வைத்திருந்தார். ஆனால் இப்னு ஜியாத் அங்கு நலன் விசாரிக்க வந்தபொழுது மறைவிலிருந்த முஸ்லிம் வெளியே வந்து காரியத்தை முடிக்கவில்லை. இது ஷுரைக்குக்குப் பெருத்த ஏமாற்றமாகிவிட்டது. இப்னு ஜியாத் திரும்பிச் சென்ற பின் முஸ்லிமை "நீர் கோழை; உறுதியான இருதயம் உம்மிடம் இல்லை; வாய்த்த சந்தர்ப்பத்தை நழுவ விட்டுவிட்டீரே!" என ஷுரைக் கடிந்தார். அதற்கு முஸ்லிம், "இச்செயலை முதலாவதாக நமக்கு அடைக்கலமளித்துள்ள ஹானி விரும்பவில்லை; மேலும் 'எதிர்பாராவண்ணம் ஒருவனைத் தாக்குவது முஸ்லிம்கள் செய்யக்கூடிய காரியமல்ல' என்று ரசூலுல்லாஹ் கூறியுள்ளார்கள். நான் என்ன செய்யட்டும்? என் பாதங்கள் எழவில்லையே!" என்று பதிலுரைத்தார்.

எனவே, தம் மார்க்க பக்தியின் காரணமாக முஸ்லிம் இப்னு உகைல் தமக்குக் கிடைத்த அரிய சந்தர்ப்பத்தைக் கை நழுவ விட்டு விட்டார்.

## அடிமை முஅக்கல்

முஸ்லிம் பின் உகைலைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று இப்னு ஜியாத் கூஃபாவுக்கு வந்து நாட்கள் பல கடந்து விட்டன. துப்புக் கிடைக்கவில்லை. கூஃபாவாசிகள் அவரை அவ்வளவு இரகசியமாக வைத்துக் காத்து வந்தனர்! இறுதியாக இப்னு ஜியாத் தன் அடிமையான முஅக்கல் என்பவனிடம் இந்த துப்புத் துலக்கும் பணியை ஒப்படைத்தான். முஅக்கல் நல்ல தந்திரசாலி; சாமர்த்தியவான்; உளவறிவதற்கு கூஃபாவின் பெரிய பள்ளி வாயிலான ஜாமிஃ மஸ்ஜிதைத் தனக்குப் பொருத்தமான இடமாகத் தேர்ந்தெடுத்தான். அங்கு இவன் அடிக்கடி சென்று பார்த்ததில் ஒருவர் அதிகமாக தொழுது கொண்டும் வணக்கத்திலீடுபட்டுக் கொண்டும் இருப்பதைக் கவனித்தான். இவர் நிச்சயமாக இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின் ஆதரவாளராகத்தான் இருக்கவேண்டுமென்ற முடிவுக்கு வந்தவனாய் அப்பெரியாரின் அருகில் வந்து உட்கார்ந்தான். மெதுவாகப் பேச்சை ஆரம்பித்து,

"அல்லாஹ் என் மனதில் நபிகள் நாயகமவர்களின் குடும்பத்தார்களை அதிகம் நேசிக்கவேண்டும், கவுரவிக்கவேண்டும் என்ற எண்ணத்தைப் போட்டுவிட்டான். நான் ஷாம் தேசத்தைச் சேர்ந்த ஓர் அடிமை. இது சமயம் என்னிடம் 3000 திர்ஹங்கள் இருக்கின்றன. இங்கு ஹலரத் ஹுஸைன் (ரலி) அவர்களின் பிரதிநிதி ஒருவர் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். இப்பணத்தை நான் அவரிடம் காணிக்கையாகச் செலுத்தி அதை அவர் நல்லவழியில் செலவு செய்யட்டும் என்று ஆசைப்படுகிறேன்," என்றான் முஅக்கல்.
அதற்கு அப்பெரியார்;

"இப்பள்ளிவாயிலில் தொழுதுகொண்டிருப்பவர்கள் எத்தனையோ பேர்களிருக்க, இவ்விஷயத்தைக் கேட்க நான் மட்டும் உம்முடைய கண்ணில் தைத்த காரணம் என்ன?" என வினவினார். அதற்கு முஅக்கல்,

"பலரையும் நான் கவனித்துப் பார்த்ததில் தங்கள் தோற்றமும் வணக்கமும் தாங்கள் ஒரு பெரிய மனிதர் என்பதை எனக்கு உணர்த்தின. இதனால்தான் நான் இவ்விஷயத்தைத் தங்களிடம் சொல்லிக்காட்ட முனைந்தேன்," என நளினமாகப் பதில் கூறினான். முஅக்கலின் நயவஞ்சகமான வார்த்தைகளை வெள்ளை உள்ளம் கொண்ட அவ்வணக்கவாளிப் பெரியார் உண்மையென நம்பிவிட்டார். வந்தது கேடு!

## முஸ்லிம்-முஅக்கல் அறிமுகம்

இரண்டாம் நாள் அந்த வணக்கப் பெரியார், முஅக்கல் என்பவனை அழைத்துக்கொண்டு ஹானீயின் இல்லம் சென்று முஸ்லிமிடம் அறிமுகப்படுத்தி வைத்தார். அப்பொழுது, அவன், தான் கைவசம் கொண்டு சென்ற 3000 திர்ஹங்கள் கொண்ட பணமுடிப்பை முஸ்லிமிடம் காணிக்கை வைத்து ஒரு பரிபூரண 'அஹ்லெ பைத்' பக்தனைப்போல நடித்து உரையாடினான். இரவு முழுவதும் முஸ்லிமுடன் இருந்து பல விஷயங்களையும் கிரகிப்பான்; பகல் முழுதும் இப்னு ஜியாதுடன் இருந்து அவற்றை எடுத்துக் கூறுவான். இவ்வாறு சில நாட்கள் கழிந்தன. தேவையான விவரங்கள் அனைத்தும் முஸ்லிமின் வாயிலிருந்து பிடுங்கப்பட்டு விட்டன.

## ஹானீ பின் உர்வா

ஹானீ பின் உர்வா மத்ஹஜீ, கூஃபா நகர்ப் பிரமுகர்களில் ஒருவராகையால் புதிய கவர்னராக வந்திருக்கும் இப்னுஜியாதை அவர் அடிக்கடி சென்று காணுவது வழக்கம். இப்பொழுது முஸ்லிம் பின் உகைல் தம்முடைய வீட்டில் இருப்பதால் உடல் நலமின்மை

லையக் காரணங்காட்டி இப்னுஜியாதிடம் செல்வது நின்றுவிட்டது: எனினும் முஅக்கலின் துப்புக்குப் பின் இப்னு ஜியாத் அவர் வராததன் காரணத்தைப் புரிந்து கொண்டான்.

ஒரு நாள், கூஃபாவின் மற்றுமிரு பிரமுகர்களான முஹம்மத் பின் அஷ்அத்தும், ஸல்மா பின் காரிஜாவும் இப்னுஜியாதைக் காண அவனது மாளிகையான 'கஸ்ரெ அம்மாரா'வுக்குச் சென்றனர். அங்கு நடந்த உரையாடலின்போது இப்னுஜியாத் பேச்சுவாக்கில், "ஹானியைச் சில நாட்களாகக் காணுவதற்கில்லையே, என்னவாம்?" என அவர்களிடம் வினவினான்: "அவரின் உடல்நிலை சரியாக இல்லை, அதனால்தான் அவர் தங்களை வந்து காணவில்லை," என அவ்விருவரும் சமாதானங் கூறினர். இதைக்கேட்ட இப்னு ஜியாத், "அவர் உடம்புக்கு என்ன? அவர்தான் நாள் முழுவதும் தமது வீட்டின்முன் அமர்ந்து நண்பர்களுடன் அளவளாவிக் கொண்டுதானே இருக்கிறார்," என்று சற்று கடினமான தொனியில் கூறினான்.

பின்னர், அவ்விருவரும் ஹானியிடம் சென்று நடந்த விபரத்தையும் இப்னு ஜியாதின் நிலையையும் எடுத்துக் கூறி, அவனைச் சந்திப்பதற்குத் தங்களுடன் வருமாறு ஹானியை அழைத்தார்கள். இருவரின் பேச்சையும் தட்டமாட்டாதவராய் ஹானி அவர்களுடன் புறப்பட்டார். ஆயினும் ஹானியின் மனம் நிம்மதிப்பட்டதாக இல்லை. 'கஸ்ரெ அம்மாரா' மாளிகையை நெருங்கியதும் ஹானி கலக்கமடைந்தார். எனினும், முஹம்மத் பின் அஷ்அத் அவருக்குச் சமாதானங் கூறி உள்ளே அழைத்துச் சென்றார்.

ஹானியைக் கண்டதும், "நான் அவனுக்குச் சன்மானம் வழங்க எண்ணுகிறேன், அவனோ என்னைக் கொல்லச் சதி செய்கிறான்," என்ற கருத்துக் கொண்ட கவியினைப் பாடினான் இப்னு ஜியாத். இதைக்கேட்ட ஹானி, "இதன் அர்த்தமென்ன? என்னைக் கண்டதும் ஏன் இக்கவியை பாடிக் காண்பிக்கவேண்டும்?" என்றார். இப்னு ஜியாத் எக்களிப்புடன், "இதன் அர்த்தம்

என்னவென்று கேட்கிறீர்? உமக்குப் புரியவில்லையா? முஸ்லிம் பின் உகைலை மறைத்து வைத்துக் கொண்டிருப்பதும், அவரிடம் ஹுசைனுக்கு விசுவாசப் பிரமாணம் செய்ய மக்களைத் திரட்டுவதும் எத்தகைய இராஜத் துரோகச் சதிகுற்றம் என்பது உமக்கு விளங்கவில்லையா?'' என்று கூறினான். இதனை ஹானீ மறுத்தாரெனினும் அவன் முஅக்கலை அழைப்பித்து அவர்முன் நிறுத்தினான். இனி விஷயத்தை மறைப்பதில் பயனில்லை எனக் கண்டார் ஹானீ. எனவே அவர், ''தாங்கள் சொல்வது உண்மைதான்; ஆனால் இறைவன்மீது ஆணையாக நான் அவரை அழைக்கவில்லை; அவர் சுயமே என்னிடம் வந்தார்'' என்று விபரங்கள் அனைத்தையும் கூறியவராய், ''இதோ நான் இல்லம் சென்று முஸ்லிமை வெளியேற்றி விட்டு வருகிறேன்,'' என்று புறப்பட எழுந்தார். இப்னு ஜியாத் அவரைத் தடுத்து நிறுத்தி, ''முஸ்லிம் இங்கு என்னிடம் வராதவரை, நீர் இதை விட்டும் அகல முடியாது,'' என்று சத்தியம் செய்து கூறினான். அதற்கு ஹானீ, ''இது முடியாத காரியம்; ஆண்டவன்மீது பிரமாணமாக, என்னிடம் அதிதியாக வந்திருக்கும் ஒருவரைக் கொல்லுவதற்கு உம்மிடம் நான் ஒப்படைக்க முடியாது,'' என்றார். இந்தப் பதிலைக் கேட்டதும் இப்னு ஜியாத், அடங்காச் சினம் கொண்டவனாய்த் தன் கரத்திலிருந்த தண்டத்தால் ஹானீயின் மண்டையில் ஓங்கிப் பலமாக அடித்தான். அவர் மண்டை உடைந்து படுகாயமுற்று மூர்ச்சையாகி விழுந்தார். அவரை ஓர் அறையில் கொண்டு போய்ப் போட்டனர்.

உடனே, ஹானீ கொல்லப்பட்டுவிட்டார் என்று நகரெங்கும் செய்தி பரவியது. ஹானீயின் கூட்டத்தாரெல்லாம் ஒன்று திரண்டு 'கஸ்றெ அம்மாரா' முன் வந்து அதைச் சூழ்ந்து கொண்டு, ''இப்னு ஜியாதைப் பழிக்குப்பழி வாங்கியே தீருவோம்,'' எனக் கூக்குரல் எழுப்பினர். இதைக் கண்ட அவன் மனம் கலங்கியு

வனுப் காஜி ஷுறைஹை அழைத்து, "தாங்கள் ஹானியை நேரில் சென்று பார்த்துவிட்டு, அவர் கொல்லப்படவில்லை என்பதை வெளியில் கூச்சலிட்டுக் கொண்டு நிற்கும் அவரின் கூட்டத்தாருக்கு எடுத்துச் சொல்லி அமைதிப்படுத்தி அனுப்புங்கள்," என்று கூறினான். காஜி, ஹானியைக் காணச் சென்றார். இவரைக் கண்டதும் ஹானி, "வெளியில் கேட்பது என் கூட்டத்தாரின் கூக்குரலாகத் தெரிகிறது. அவர்களில் பத்துப் பேராகிலும் மாளிகையினுள்ளே நுழைந்துவிடுவார்களாயின், நான் விடுவிக்கப்பட்டு வெளியே வந்துவிடுவேன். இதனை நீங்கள் அவர்களிடம் சொல்லிவிடுங்கள்," எனக் கேட்டுக் கொண்டார். காஜி ஷுரைஹுக்கு இது ஏற்புடையதாயினும் இப்னு ஜியாதின் ஒற்றர்கள் உடனிருக்கின்றனரே! அவர் இதை வெளியே கூற முடியவில்லையே! உயிருக்கு வினையாகிவிடுமே! இவ்வாறு எண்ணியவராய் ஷுரைஹ் வெளியே வரண்டாவிற்கு வந்து, "ஹானி கொல்லப்படவில்லை; உயிரோடு இருக்கிறார்," என்று மட்டும் கூறிக் கூட்டத்தினரைச் சமாதானப்படுத்திக் கலைந்து செல்லுமாறு செய்தார். பத்துப் பேரைப் பற்றிய விஷயத்தை வாய் திறக்கவில்லை.

## காலை வாரிக் கை விட்டனர்

"ஹானி கொல்லப்பட்டார்," என்ற தகவல் முஸ்லிம் பின் உகைலின் காதுக்கு எட்டியது. வேதனையும் ஆக்ரோஷமும் அடைந்தவராக தம்மிடம் பிரமாணம் செய்தவர்களில் நாலாயிரம் பேரைத் திரட்டிக் கொண்டு, 'கஸ்றெ அம்மாரா'வுக்கு வந்து அதை முற்றுகையிட்டார். இப்னு ஜியாத் மாளிகைக்குள் சிக்கிக் கொண்டான். அப்பொழுது அவனுடன் பாதுகாப்பாக ஐம்பது பேர் மட்டுமே இருந்தனர். இவர்களுள் முப்பது பேர் காவல் படையினர், இருபது பேர் நகர்ப் பிரமுகர்கள்.

இவ்வபாய நிலையைக் கண்டதும் அவன் மாளிகை வாயிலை அடைத்துக் கொண்டு கூபா நகர்ப் பிரமுகர்

களை நோக்கி, "நீங்கள் மாளிகையின் மேல் மாடிக்குச் சென்று உங்களைச் சேர்ந்த மக்களைக் கலைந்து செல்லுமாறும், முஸ்லிமுடன் ஒத்துழைக்க வேண்டாமென்றும், கலைந்து செல்பவர்களுக்குத் தக்க சன்மானங்கள் அளிக்கப்படுமென்றும் பொருத்தமான ஆசை வார்த்தைகள் கூறி அனுப்பிவையுங்கள்," என்று கூறினான். அதன்படி அவர்கள் மேல் தளத்துக்குச் சென்று இப்னு ஜியாதின் விருப்பத்தை எடுத்துக்கூறி கலைந்து செல்லுமாறு கேட்டுக் கொண்டனர்.

இவர்களின் வார்த்தைகளை முஸ்லிமும் அவருடன் கூடி நின்ற கூஃபா வாசிகளும்-இமாம் ஹுஸைனுக்கு விசுவாசப் பிரமாணம் செய்து கொடுத்தவர்கள்—கேட்டனர். அங்கு நின்ற இதர தலைவர்கள் முஸ்லிமைக் காலை வாரிக் கைவிட்டு விட்டுத் தங்கள் தங்களைச் சார்ந்தவர்களை, அரவமின்றி அழைத்துச் சென்றனர். இதில் எஞ்சியவர்கள் முப்பது பேர். முஸ்லிம் மனமுடைந்தார். இந்த முப்பது பேருடன் அவர் கூஃபாவின் கந்தா என்னும் பகுதியை அடைவதற்குள் அவர்களும் கரைந்து காணமலாயினர். முஸ்லிம் தன்னந் தனியராகி செய்வதின்னதென்றறியாது திகைத்து நின்றார்.

## மறு அடைக்கலம்

பின்னர் முஸ்லிம் இப்னு உகைல் கூஃபா நகர வீதிகளில் சுற்றித் திரிந்தவராக இறுதியில் தௌஆ என்னும் ஒரு பெண்மணியின் இல்லத்தின் முன் வந்து நின்றார்; அம்மாதிடம் தண்ணீர் கேட்டு வாங்கிப் பருகித் தாகந் தீர்ந்தார். நீர் பருகியதும், "நீர் இனி இங்கிருக்க வேண்டாம்; உம் வழியே சென்றுவிடும்," என்று புரட்சியாளருடன் சென்றிருந்த தன் மகன் பிலாலை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்த அப்பெண்மணி முஸ்லிமைப் பார்த்துக் கூறினாள்; தயங்கி நின்றார் முஸ்லிம். மீண்டும், மீண்டும் கூறியும் பதில் கூறாது நின்றுவிட்டுப் பின்னர், "நான் இந்நகருக்குப் பரதேசி, எனக்கு வீடோ, என் குடும்பத்தினரோ இங்கில்லை,

இந்நிலையில் எனக்கு நீர் ஏதேனும் உதவி செய்ய முடியுமா?'' என்றார். ''எத்தகைய உதவி?'' என வினவினாள் அம்மாது: ''நான்தான் முஸ்லிம் பின் உகைல்; கூஃபா நகரவாசிகள் எனக்கு பெரும் துரோகம் செய்துவிட்டனர்,'' என்று மிக்க சோகத்துடன் கூறினார். இறை அச்சமும் இரக்க சிந்தனையும் கொண்ட அம்மாது நல்லாள் அவர்மீது பரிவு காட்டித் தனது இல்லத்துள் அழைத்து ஒரு மூலையில் தங்கி இருக்கச் செய்து அவருக்கான வசதிகளை இரகசியமாகச் செய்து கொடுத்து வந்தாள்.

வெளியே சென்று திரும்பிவந்த அப்பெண்மணியின் மகன் பிலால், தன் அன்னை வீட்டின் ஒரு குறிப்பிட்ட இடத்துக்குப் போவதும் வருவதுமாக இருப்பதைக் கவனித்தான். அதுபற்றித் தன் அன்னையை வினவினான்; முதலில் மழுப்பலாகக் கூறினாள். பின்னர் அவனுடைய வற்புறுத்தலின் பேரில், இரகசியத்தைக் காப்பதற்கு அவனிடம் வாக்குறுதியைப் பெற்று, முஸ்லிமுக்குத் தான் அடைக்கலம் அளித்திருக்கும் உண்மையைக் கூறினாள்.

இதுவரை இப்னு ஜியாதினால் முஸ்லிமைக் கண்டு பிடிக்க முடியவில்லை. எனவே, ஒருநாள் பள்ளிவாயிலில் ஒரு பொதுக்கூட்டத்தைக் கூட்டி அதில்:

''அறிவற்றவனும் போக்கிரித்தனமுடையவனுமான முஸ்லிம் பின் உகைல், எத்தகைய சங்கடங்களை நம்மிடையே ஏற்படுத்திவிட்டான் என்பதை நீங்கள் நேரிலே அறிவீர்கள். நாம் முஸ்லிமை எவ்வகையாலும் கண்டுபிடித்துக் கொண்டுவர ஏற்பாடு செய்யப் போகிறோம். எவரேனும் முஸ்லிமை ஒளித்து வைத்திருந்தார் என்பது தெரிய வருமாயின், அத்தகையவர் குற்றவாளியாகக் கருதப்பட்டுக் கடுந்தண்டனைக்கு ஆளாவார். முஸ்லிமைக் கண்டுபிடிக்க உதவி செய்பவருக்குத் தக்க சன்மானம் அளிக்கப்படும்,' எனப் பிரகடனம் செய்தான்.

இது விஷயம் அந்தப் பெண்ணின் மகன் பிலாலுக்குத் தெரிந்தது; அவன் கிலேசமும் நடுக்கமும் அடைந்தான்; அச்சம் அதிகரிக்கவே அடுத்தநாள் காலையில் அப்துல்ரஹ்மான் பின் முஹம்மத் என்பவரிடம், "முஸ்லிம் என்னுடைய இல்லத்தில் ஒளிந்து கொண்டிருக்கிறார்," என்ற இரகசியத்தைக் கூறிவிட்டான். உடனே அப்துர்ரஹ்மான், இப்னு ஜியாத் மாளிகையிலிருந்த தம் தந்தைக்கு விஷயத்தை உணர்த்திவிட்டார்; அவர் இப்னு ஜியாதிடம் இரகசியத்தை அவிழ்த்துவிட்டார்.

## முஸ்லிம் கைது

உடனே இப்னு ஜியாத் எழுபது வீரர்களை அனுப்பி முஸ்லிமைக் கைப்பிடியாகக் கொண்டு வந்து சேர்க்குமாறு உத்தரவிட்டான். வீரர்கள் பிலாவின் இல்லத்திற்கு வந்துவிட்டார்கள். வெளியில் நடந்து கொண்டிருந்த பேச்சு வார்த்தை சப்தங்களிலிருந்து விஷயத்தை விளங்கிக் கொண்டார் முஸ்லிம். அவர் மனம் கலங்கவில்லை. ஏன் கலங்குவார்? ஹஸரத் அலியின் தம்பி மகன் அல்லவோ அவர்! எழுபது போர் வீரர்களையும் ஒருவரே எதிர்த்துப் போராடி அனைவரையும் வெளியே தள்ளிவிட்டார். ஆனாலும், முஸ்லிம் ஒண்டியாக எப்படிச் சமாளிப்பார்? வீரர்கள் மீண்டும் உள்ளே நுழைந்து அவரை வெளியே கொண்டு வந்து விட்டனர். உடனே புகைர் பின் ஹமரான் என்பவன் தனது கட்கத்தால் முஸ்லிமின் முகத்தில் தாக்கினான்; அவரது உதடு தெறித்து முன் பற்கள் சிலவும் சேதமடைந்தன; உதிரம் கொட்டியது. இந்நிலையிலும் தாக்கியவனை அவர் படுகாயப்படுத்திவிட்டார். மற்ற சிப்பாய்கள் அவரைக் கற்களால் அடித்தனர்; இறுதியாக, முஸ்லிம் களைத்துவிட்டார்.

அந்நேரம் அங்கு வந்த கூஃபா பிரமுகர் முஹம்மத் பின் அஷ்கத், தனியராக நின்று வீணில் போரிடுவது பயனளிக்காது என்றும், தாம் அடைக்கலம் அளிப்பதாகவும், சரணடைந்துவிடுவது நல்லதென்றும் முஸ்லிமுக்குச் சொன்னார். எனினும், அவர் இப்னு

ஜியாதின் வீரர்களுடன் இருதிவரை போரிட்டார். களைத்துப் போனபின் ஒரு குழியில் சறுக்கிவிழுந்து சுவற்றில் சாய்ந்தவண்ணம் உட்கார்ந்து விடவே வீரர் கள் அவரைக் கைது செய்து நிராயுதபாணியாக்கினர். பின்னர், அவரைக் கழுதையின்மீது ஏற்றி இப்னு ஜியாதிடம் கொண்டு சென்றனர்.

அப்பொழுது அங்கு நின்றிருந்த, தம்மீது அனு தாபங் கொண்டவரான, முஹம்மத் பின் அஷ்கத்தைப் பார்த்து,

"என்னைக் காப்பாற்றுவதென்பது இனித் தங்க ளால் இயலாது; என்னைப் பற்றி நான் கவலைப்பட வில்லை; ஆனால், தங்களுக்குக் கூடுமாயின், எனக்குப் பின் எனக்காக ஓர் உதவி செய்யுங்கள். எனக்கு நடந்த விஷயங்களை என் சகோதரர் ஹுஸைன் அவர் களுக்குத் தெரியப்படுத்திவிடுங்கள். மேலும் கூஃபா வாசிகளை நம்பித் தம் குடும்பத்தார்களையெல்லாம் அழைத்துக் கொண்டு இங்கு வரவேண்டாமென்றும், வந்த வழியே மக்காவுக்குத் திரும்பி சென்றுவிடுமாறும் செய்தி அனுப்பிவிடுங்கள். இதுதான் தாங்கள் எனக்குச் செய்யக்கூடிய பேருதவியாகும்" என்று முஸ்லிம் பின் உகைல் கூறினார். இதனைச் செவியேற்ற அப் பிரமுகர்,

"இறைவன்மீது ஆணையாக, நான் இச்செய்தியை எப்படியாயினும் இமாம் ஹுஸைன் அவர்களுக்கு எட்டச் செய்துவிடுகிறேன், தாங்கள் கவலைப்பட வேண்டாம்" என்று உறுதியளித்தார். முஸ்லிமுக்கு அளித்த வாக்குத் தத்தத்தின்படி இப்னு அஷ்கத் நடந்து கொள்ளவும் செய்தார். ஓர் ஆள் மூலம் செய்தி அனுப்பி வைத்தார்.

## இப்னுஜியாத் முன்பாக

பின்னர், முஸ்லிம், இப்னு ஜியாதின் முன் கொண்டு போய் நிறுத்தப்பட்டார். அப்போது முஹம்மத் பின் அஷ்கத், இப்னுஜியாதிடம், "நான் முஸ்லிமுக்கு அபய

மளித்துள்ளேன்,'' எனக் கூறினர். அதற்கு அவன், ''உமக்கு இவ்வதிகாரத்தைத் தந்தது யார்?'' எனக் கூறி மறுத்துவிட்டான்.

முஸ்லிம், இப்னு ஜியாதுக்கு 'சலாம்' சொல்லாததைக் கண்ட அங்கிருந்தவர்கள், 'கவர்னருக்கு சலாம் சொல்லவேண்டாமா?' என்று இடித்துக் காட்டினர். அதற்கு, ''அவர் என்னைக்கொல்ல எண்ணுவாராயின், அவருக்கு நான் 'சலாம்' சொல்லமாட்டேன்; என்னைக் கொல்லுவது அவருக்கு நோக்கமில்லையாயின் எத்தனைமுறை வேண்டுமானாலும் நான் 'சலாம்'சொல்லத் தயார்', என்று பதிலுரைத்தார். இதைக்கேட்ட இப்னுஜியாத், 'என் உயிர்மீது பிரமாணமாக, நிச்சயமாக நான் உன்னைக் கொல்லவே போகிறேன்,' என்றான்.

அதற்கு முஸ்லிம், ''அதுவே உம் தீர்மானமானால், இங்குள்ள ஒருவரிடம் எனது 'வஸிய்யத்'தை (மரண உபதேசம்) செய்ய அனுமதி தரவேண்டும்,'' என்று கேட்டார். அதற்கு அவன் இணங்கினான். அங்கு முஸ்லிமுக்கு அதிகம் வேண்டியவராயிருந்த உமர் பின் ஸஃத் பின் அபீ வகாஸ் என்பவரை நெருங்கி, ''ஒரு சில இரகசிய வார்த்தைகளைத் தங்களிடம் சொல்ல விரும்புகிறேன்,'' என்றார். இப்னுஜியாதின் அச்சத்தினால் உமர் அவற்றை கேட்க மறுத்தார். அது கண்ட முஸ்லிம் ''உம்மைச் சார்ந்த ஒரு சகோதரனை மோசம் செய்வது தகாது,'' என வேண்டிக் கொண்டார்.

உமர் ஒருவாறு இணங்கியவராக அருகில் வந்ததும், ''(1) நான் கூஃபாவில் இன்னவரிடம் எழுநூறு திர்ஹங்கள் கடன் வாங்கியுள்ளேன். எனது வாளையும் உருக்குச் சட்டையையும் விற்று, அதனைத் தாங்கள் கொடுத்துக் கடனை அடைத்துவிடவேண்டும்; (2) என்னுடைய பிரேதத்தை தாங்களே எடுத்து அடக்கம் செய்துவிடவேண்டும்; (3) ஹுஸைன் கூஃபாவை நோக்கி வந்துகொண்டிருப்பார். அவருக்கு ஆளனுப்பி வழியிலேயே கண்டு அவரைத் திருப்பி அனுப்பிவிடவேண்டும்,'' என்று முஸ்லிம் உமரிடம் கூறினர்.

இம்மரண உபதேசத்தை உமர், இப்னுஜியாதிடம் கூறி, அவனின் அபிப்பிராயத்தைக் கேட்டார், அதற்கு அவன், "(1) கடன் தீர்க்கும் விஷயத்தில் உமக்குப் பூரண உரிமையுண்டு; (2) ஹுஸைன் விஷயத்தில் நான் ஒரு தீர்மானம் செய்திருக்கிறேன்; அவர் இங்கு வரவில்லையாயின், நான் அவரைப் பின்தொடர்ந்து செல்லப் போவதில்லை; ஆனால் அவர் இங்கு வந்துவிட்டால், அவரை நான் விடப்போவதில்லை; (3) முஸ்லிம் கொல்லப்பட்டபின் அவர் பிரேத சம்பந்தமாய் உமது வேண்டுகோள் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. எனக்கு இவ்வளவு தூரம் இடையூறுகளையும் இன்னல்களையும் விளைவித்த அவருடைய பிரேதம் நல்லமுறையில் அடக்கம் செய்வதற்கு அருகதை அற்றதாகும்". என்று கூறிவிட்டான்.

முஸ்லிம் மீது கீழ்க்கண்ட குற்றப்பத்திரிகை வாசிக்கப்பட்டது:—

"மனிதர்கள் தங்களிடையே ஒற்றுமையுடன் இருந்தார்கள். நீர் அவர்களிடையே பிரிவினையையும், அபிப்பிராய பேதங்களையும் உண்டுபண்ணி, சண்டை சச்சரவுகளுக்குக் காரணமாயிருந்தீர்."

## இப்னு ஜியாத் முஸ்லிம் விவாதம்

இதைப் படிக்கக் கேட்ட முஸ்லிம், "இக்குற்றச் சாட்டு உண்மைக்கு விரோதமாகும். அவ்விதக் கொடிய நோக்கம் கொண்டு யான் இங்கு வரவில்லை. உம்முடைய தந்தை, முஆவியாவின் கையாளாக இருந்து கூபாவாசிகளில் பெரியோர்களையும் நல்லோர்களையும் ஈவிரக்கமின்றிக் கொன்று குவித்தார். முஆவியா, இஸ்லாமிய ஜனநாயக முறையை விட்டுவிட்டுக் கைஸர், கிஸ்ரா போன்ற ஏதேச்சாதிகார அரசர்களைப் பின்பற்றினார் என்று கூஃபிகள் கருதினார்கள். எனவே, இங்கு நீதியான ஆட்சியை ஸ்திரப்படுத்தவும், அல்லாஹ்வின் திருவேதக் கட்டளைப்படியும் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் 'சுன்னத்' (வாழ்வு வாக்குப்) படியும் மக்களை நடக்கச் செய்யவுமே அவர்களின்

அழைப்பின் மீது நான் இங்கு வந்தேன்.'' என்று கூறினார்.

இதைக் கேட்ட இப்னு ஜியாத், வாயில் வந்தபடி ஏசியவனாய், ''நீர் அருகதையற்ற ஒரு காரியத்தைச் செய்யத் துணிந்தீர். அதனால்தான் உமது எண்ணம் பூர்த்தியாக ஆண்டவன் உதவி செய்யவில்லை,'' என்றான். ''பின்னர், இதற்கு அருகதையுள்ளவர் யார்?'' என்று முஸ்லிம் வினவ, ''அமீருல் மூமினீன் எஜீது தான்,'' என்றான் இப்னு ஜியாத். இதற்கு முஸ்லிம், ''எந்நிலையிலும் ஆண்டவனே நன்றிக்குரியவன். அவன் உங்களுக்கும் எங்களுக்கும் இடையே தீர்ப்புச் செய்யக் கூடியவன்,'' என்றார். இதைக் கேட்ட இப்னு ஜியாத் ''அப்படியாயின் கிலாபத்துக்குரியவர் நீங்கள் தான் என்று நினைக்கின்றீர்?'' என வினவினான். ''எண்ணம் மட்டுமல்ல; உண்மையும் அதுதான்,'' என்றார் முஸ்லிம். அதற்கு அக்கொடியோன், ''அப்படியா? சரிதான். உம்மை சரித்திரத்தில் இடம் பெறும் வகையில் நான் கொல்லப்போகிறேன். கொலையில் இதற்கு நிகரான கொடிய உபமானம் வேறு எங்கும் காணமுடியாது,'' என்றான்.

இதற்கு பதில் கூறுமுகத்தான் முஸ்லிம், ''உண்மை தான்; இஸ்லாத்தில் புதிய புதிய உதாரணங்களை உண்டு பண்ணுவதும், புதுமையான செயல்களைச் செய்து காட்டுவதும் உங்கள் பரம்பரையைச் சார்ந்த தாகும். இஸ்லாத்தில் இல்லாத புதிய புதிய காரியங்களையெல்லாம் நீங்கள் செய்வீர்கள். இறைவன் மீது ஆணையாக, நீர் என்னை எத்தகைய கொடிய முறையில் கொல்ல நினைக்கின்றீரோ, அத்தகைய முறையில் செய்து கொள்வீராக! இதற்கு உம்மைவிடத் தகுதி படைத்தவர் வேறு யார்தான் உண்டு?'' என்று உணர்ச்சி ததும்பக் கூறினார்.

சுடச்சுடக் கிடைத்த பதிலைக் கேட்டுச் சகிக்காத வனாக இப்னு ஜியாத், முஸ்லிமையும், ஹுசைனையும் மற்றும் ஹலரத் அலீ, உகைல் போன்றவர்களையும்

 

வாய் கொண்ட மட்டும் ஏசிப் பேசினான். அதன்பின் முஸ்லிமுக்குத் தண்ணீர் பருகக் கொடுத்து, உப்பரிகைக்குக் கொண்டு போய், அங்கிருந்து வெட்டிக் கீழே தள்ளுமாறு உத்தரவிட்டான். அதன்படி, முஸ்லிமைக் கைது செய்யும்போது அவரால் காயப்படுத்தப்பட்ட அந்தக் கொலைபாதகன் புகைர் பின் ஹம்ரான் என்பவனே அவரை வெட்டினான். அவரது உடல் உப்பரிகையிலிருந்து கீழே தள்ளபபட்டது. முஸ்லிம், ஹிஜ்ரி 60 துல்ஹஜ் பிறை 9 அன்று கொல்லப்பட்டார்.

முஸ்லிமை உப்பரிகைக்கு இட்டுச் செல்லும் பொழுது அவர், இறை நாமத்தை பஜித்துக்கொண்டும், பாவ மன்னிப்புக் கோரிக் கொண்டும், நபிமார்கள் மீதும் ரசூலுல்லாஹ் மீதும் சலாமும் சலவாத்தும் கூறிக்கொண்டும் வீரர் (கொலையாளி)களின் நடுவே வீரராகவே சென்றார். அப்போது, ''ஏ, இறைவா, என்னை ஏமாற்றியவர்களுக்கு நீயே தீர்ப்புக் கூற வேண்டும். அவர்கள் என்னைப் பொய்யனாக்கினர்; கேவலப்படுத்தினர். இதையெல்லாம் நீயே அறிந்தவனாக இருக்கிறாய்,'' என்று மொழிந்தவாறு சென்றார். இப்னு ஜியாதின் கொடுமையும் முஸ்லிமின் கொலையும் அடுத்து நிகழவிருக்கும் சரித்திரப் பிரசித்திப் பெற்ற, முஸ்லிம் உலகத்தின் உள்ளங்களையெல்லாம் பிழிந்தெடுத்து கண்ணீர் அல்ல, செந்நீரை வடிக்க வைக்கும், சோக நிகழ்ச்சியின் முன்னோடியாகும். அடுத்து, அடைக்கலம் தந்த ஹானியும் கொலை செய்யப் பட்டார்.

## இமாம் அவர்களுக்கு முஸ்லிமின் கடிதம்

கூஃபா வாசிகளின் நிலையறிய அனுப்பப்பட்ட முஸ்லிம் பின் உகைல் அவர்கள் அங்கு வந்து ஹானீ பின் உர்வா மதிஹஜியின் இல்லத்தில் தங்கியிருந்து கொண்டு இமாம் ஹுசைன் அவர்களுக்காக வாக்குப் பிரமாணம் வாங்கியபொழுது 18,000 கூஃபாவாசிகள் ஆதரவு தெரிவித்தார்கள் என்பதை முன்பு கண்டோம். ஹானீ கொல்லப்பட்டதாக முஸ்லிம் கேள்வியுற்றதும்

தமது ஆதரவாளர்களைத் திரட்டிக் கொண்டு வந்து இப்னு ஜியாதின் மாளிகையான 'கஸ்ரெ அம்மாரா'வை முற்றுகையிட்டதையும் பார்த்தோம். பின் இப்னு ஜியாத், அங்கிருந்து கலைந்து செல்பவர்களுக்குத் தக்க சன்மானங்கள் வழங்கப்படுமென தன்னுடனிருந்த கூஃபா பிரமுகர்களிடம் கூறி அவர்கள் வெளியே 'வராந்தா'வில் வந்து இதை அறிவித்துக் கலைந்து செல்லுமாறு கேட்டுக்கொண்டபோது அந்தத் துரோகிகள் அத்தனை பேரும் பனிக்கட்டி கரைவது போல் கரைந்து, முஸ்லிமை காலை வாரித் தனியராக்கி விட்டுச்சென்ற நீசத்தனத்தையும் நாம் அறிந்தோம்.

இந்தக் கூஃபாவின் நயவஞ்சக முனாபிக்குகளின் வாக்குப் பிரமாணத்தைப் பூரணமாக நம்பிக்கொண்டு முஸ்லிம், தம் சகோதரரான இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களுக்கு, "கூஃபா வாசிகள் 18000 பேர் தங்களுக்கு ஆதரவாக என்னிடம் வாக்குப் பிரமாணம் செய்து கொடுத்திருக்கிறார்கள்; தங்கள் வருகையைப் பெரிதும் எதிர்பார்த்து நிற்கிறார்கள்; இப்போது காற்று நமக்குச் சாதகமாக வீசிக்கொண்டிருக்கிறது; எனவே, தாங்கள் தாமதமின்றி இங்கு புறப்பட்டு வரவும்," என அழுத்தமாக எழுதியனுப்பிவிட்டார்.

இக்கடிதம் இமாம் அவர்களின் கைக்குக் கிடைத்ததும், கூஃபா வாசிகளைப்பற்றி அவர்கள் கொண்டிருந்த அச்சங்களெல்லாம் பறந்தோடி விட்டன. மதீனாவை விட்டுப் புறப்பட்ட பொழுது வழியில் கண்டு கூஃபா வாசிகளின் துரோக புத்தியைப் பற்றி எடுத்துக் கூறி எச்சரிக்கை செய்த அப்துல்லாஹ் பின் முத்தீஃவின் வார்த்தைகளெல்லாம் அடியோடு மறந்து போயின. பயணத்துக்குத் தயாராகிவிட்டார்கள் இமாம் ஹுஸைன் அவர்கள். பின்னால், முஸ்லிமுக்கு நேர்ந்த கதியைப் பற்றிய தகவல் இந்நேரம்வரை அவர்களுக்கு எட்டாதிருந்தது; எனவே அவர்களின் பயணத்தைத் தடை செய்வதற்கு யாரும், எதுவும் அப்போது அங்கு இல்லை.

மக்கா, மதீனவாசிகளனைவரும் கூஃபா வாசிகளின் துரோகத்தைப் பற்றி நன்கு அறிந்தவர்களாதலின், இமாம் ஹுஸைன் அவர்கள் இராக் செல்ல ஆயத்தம் செய்துவிட்டார்களாம் என்பதைக் கேள்வியுற்றதும் அதிர்ச்சியும் கலக்கமும் அடைந்துவிட்டார்கள். முஆவியாவின் ஆட்சி அங்கு வலுவடைந்திருப்பது அவர்களுக்குத் தெரியும். எவ்வாற்றானும் பிரயாணத்தைக் கைவிடச் செய்ய வேண்டுமெனப் பிரயாசைப் பட்டார்கள்.

## அப்துல்லாஹ் பின் அப்பாஸ்

முதன் முதலாக அம்ருபின் அப்துர்ரஹ்மான் என்பவர் இமாமவர்களிடம் வந்து இராக் செல்ல வேண்டாமெனப் பல நியாயங்களை எடுத்துக்கூறிச் சென்றார். அடுத்து அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் வந்தார்கள். இமாம் அவர்களைக் கண்டு பின்வருமாறு கூறலுற்றார்:—

"நான் அல்லாஹ்வுக்காகக் கூறுகிறேன், தாங்கள் கூஃபா பிரயாண எண்ணத்தைக் கைவிட்டு விடுங்கள். இங்கு மக்கள் கலவரமடைந்துள்ளனர்; ஆனால், இராக் தேச மக்கள் தங்களுக்கு முழு ஆதரவு காட்டும் வகையில், அங்கு ஷாம் தேசக் கவர்னரைக் கொன்றுவிட்டு நகரத்தைக் கைப்பற்றிக் கொண்டு தங்கள் எதிரிகளையெல்லாம் அப்புறப்படுத்திவிடுவார்களாயின், தாங்கள் தாராளமாகத் தங்கள் எண்ணம்போல் இராக் செல்லலாம். இராக்கியர்கள் தங்களை அங்கழைக்கும் இந்நேரத்தையும் நிலைமையையும் எண்ணிப்பாருங்கள்! கூஃபாவில் இப்பொழுது எஜீதின் கவர்னர் அம்மக்களின் கழுத்தை நெறித்தவண்ணம் இருந்து வருகிறார். அவர்களின் ஆட்சி, அதிகாரம், அங்கு நடைபெறுகிறது. இந்நிலையில் நீங்கள் அங்கு சென்றால் உங்களை அவர்கள் வஞ்சித்து விடுவார்கள் என நான் அஞ்சுகிறேன். உங்களைக் கைவிடுவதோடு உங்களுக்கு எதிரிகளாகவும் அவர்கள் மாறிவிடக்கூடும்." என்றார். அதற்கு இமாம் ஹுஸைன் அவர்கள், "தாங்கள்

கூறுவது போன்ற இக்கட்டான நிலை ஏற்பட்டுவிடுமாயின், நான் இறைவனிடம் நன்மையை வேண்டுவேன். அவனது நாட்டமறிந்து நான் நடந்துகொள்வேன்," எனச் சமாதானங் கூறினார்கள்.

## அப்துல்லாஹ் பின் ஜுபைர்

இதன் பிறகு அப்துல்லாஹ் பின் ஜுபைர் (ரலி) வந்தார். இராக் வாசிகள் இமாம் அவர்களை வரவேற்கக் காத்திருக்கின்றனர் என்ற விபரத்தை முஸ்லிம் பின் உகைலின் கடிதமாறலாயறிந்து அவர்கள் கூஃபா செல்ல இணக்கம் கொண்டாலும், தமது சொந்த அபிப்பிராயத்தையும் ஒளிவு மறைவின்றிக் கூறிவிடத் துணிந்தவராய், "தாங்கள் இங்கு மக்காவிலேயே இருந்து கொண்டு கிலாபத்தை அடைந்து கொள்ளும் முயற்சியிலீடுபடுங்கள். நாங்களெல்லாம் உங்களுக்கு விசுவாசப் பிரமாணம் செய்து கொடுக்கிறோம். மற்றவர்களையும் தங்களைக் கலிபாவாக ஏற்குமாறு செய்கிறோம்," என்று கூறினார்.

இதைக் கேட்டதும் இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள், "மக்காவின் பரிசுத்த கஃபாவுக்கு ஒரு கவுரவமுண்டு; இங்கே போர் நிகழ்ந்து அதனால் இரத்தம் சிந்தப்படும் கொடிய பாவத்துக்கு நான் ஆளாகவிரும்பவில்லை," என்று பதில் சொன்னார்கள். பின்னும், இப்னுஜுபைர், "தாங்கள் இங்கு மக்காவிலேயே இருங்கள்; உங்களுக்கான சகல வேலைகளையும் நானே கவனித்துக் கொள்கிறேன்," என்று வற்புறுத்திக் கூறினார். அதற்கும் இமாமவர்கள் ஒப்புக் கொண்டார்களில்லை. மேலும், "நான் கொல்லப்படுவேனாயின், இந்தக் கண்ணியமிக்க கஃபாவின் எல்லையில் இக்கொலை நடக்காமலிருக்க வேண்டும். அதற்காயினும் நான் கொல்லப்படும் ஸ்தலம் கஃபாவின் பரிசுத்த எல்லையை விட்டும் ஓர் அடியாகிலும் எட்டியே இருக்க வேண்டும் என்று ஆசைப் படுகிறேன்," என்றும் கூறினார்கள் இமாம் ஹுஸைன் (ரலி)

## மீண்டும் இப்னு அப்பாஸ்

இரண்டாம் நாளும் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) வந்து,

"ஏ, சகோதரரே! தாங்கள் கூபாவுக்குச் செல்வது எனக்கு மனநிம்மதி அளிக்கவில்லை; நான் அதை ஏற்க எவ்வளவோ முயன்றும் முடியவில்லை; இப்பிரயாணத் தில் தாங்கள் ஒருக்கால் கொல்லப் படுவீர்களோ என்று பெரிதும் அஞ்சுகிறேன். இராக்வாசிகள் ஏமாற் றுக்காரர்கள்; அவர்களை நம்பித் தாங்கள் அங்கு செல் வது எனக்குப் பிடிக்கவேயில்லை. நீங்கள் மக்கா நகரி லேயே இருங்கள்; தாங்கள் ஹிஜாஸ் வாசிகளின் தலை வராயிருக்கின்றீர்கள். இராக் வாசிகள் தாங்கள் அங்கு அவசியம் வரத்தான் வேண்டுமென வற்புறுத்துவார்க ளாயின், நான் முன்பு கூறியது போன்று, முதன் முத லில் அங்கு ஆட்சியிலிருக்கும் எதிரிகளை அப்புறப் படுத் தியதின் பின்னரே தாங்கள் அங்கு செல்லச் சாத்தியப் படும் என்ப் பட்டவர்த்தனமாகத் தெரிவித்து விடுங் கள்.

"ஹிஜாஸை விட்டுத் தாங்கள் வெளியேற விரும் பினால் எமன் தேசத்துக்குச் செல்லலாம், அது பரந்த நிலப்பரப்புள்ள பிரதேசம்; அங்கு பலவிதமான கோட்டை கொத்தளங்களும் இருக்கின்றன; அங்கு உங்களின் தந்தையார் மீது அன்பு பூண்டுள்ள பக்தர் கள் - ஆதரவாளர்கள் - மலிந்திருக்கிறார்கள்; அங்கே சென்றால் உங்களின் செல்வாக்கு அதிகரிக்கும்; அங்கே அமர்ந்து கொண்டு கிலாபத்துக்கான பிரயத்தனங் களை நீங்கள் செய்யலாம். கடிதங்கள் மூலமும் தூதர் களை அனுப்பியும் மக்களின் ஆதரவை நீங்கள் அறிந்து கொள்ளலாம்; பிரசாரத்தை முடுக்கி விடலாம்; ஆதர வைத் திரட்டலாம். இவ்வித முயற்சிகளால் உங்களு டைய எண்ணம்—வேணவா—நல்ல முறையில் பூர்த்தி பெறும் என நான் உறுதியாக நம்புகிறேன்" என்று கூறி முடித்தார்.

அதற்கு இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள், "என் சகோதரரே! தாங்கள் என் மீது அதிக அன்பு பூண்டவர்கள் என்பதை நான் அறிவேன். எனினும், நான் கூஃபா செல்வதற்கு உறுதி பூண்டுவிட்டேன்; என் பயணத்தை நிறுத்த இயலாது," என்று கூறிவிட்டார்கள்.

இதனைக் கேட்ட அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் மீண்டும் உருக்கமாகச் சொன்னார்கள்:

"நீங்கள் என் ஆலோசனையை ஏற்கத் தயாராயில்லை யாயினும், குறைந்தபட்சம் பெண்களையும் குழந்தைகளையுமாவது இங்கு மக்காவில் விட்டுச் செல்லுங்கள்; உடனழைத்துச் செல்லவேண்டாம்; ஏனெனில், ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள் தங்கள் குடும்பத்தார் முன்னிலையில் கொலை செய்யப்பட்டதுபோல் தங்களையும் தங்கள் குடும்பத்தார் முன்னிலையில் படுகொலை செய்து விடக் கூடாது என நான் மிகவும் அஞ்சுகிறேன்," என்று.

யாது கூறினும் இமாம் அவர்கள் தங்கள் தீர்மானத்தை மாற்றிக்கொள்வதாக இல்லை; இறைவனின் நாட்டப்படியே அனைத்தும் நடந்தேற வேண்டுமென்றிருக்கும் போது யார் எது கூறினும் யாது பயன்?

## அபூபக்கர் பின் ஹாரித்

இதற்குப் பின் அபூபக்கர் பின் ஹாரித் வந்தார்; அவரும் மிக உருக்கத்துடன் சொன்னார்:

"தங்கள் தந்தை அவர்கள் இராக்கில் மிக்க கவுரத்துடனேயே பாராட்டப் பெற்றார்கள். பெரும்பான்மையான முஸ்லிம்கள் அவர்களின் வார்த்தைக்குக் கீழ்ப்படிந்து நடப்பவர்களாகவே இருந்தார்கள். எனினும் நடந்தது என்ன? அமீர் முஆவியா தங்கள் தந்தையாருக்கு எதிரியாகப் புறப்பட்டபோது, பணத்துக்கு ஆசைப்பட்ட அம்மக்கள், தங்கள் தந்தையாரைக் கைவிட்டு முஆவியாவுக்குச் சார்பானவர்களாக

மாறிவிட்டார்கள்; மாறியதோடு சும்மா இருந்தார்களா? இல்லை; தங்கள் தந்தையாருக்குப் பரம விரோதிகளாக மாறிவிட்டார்கள். பின்னர் அல்லாஹ்வின் நாட்டம் எவ்வாறு நடந்தேறியது என்பதைத் தாங்கள் அறிவீர்கள்;

“அதன்பின் தங்கள் சகோதரர் ஹஸன் (ரலி) விஷயத்திலும் கூஃபா வாசிகள் எவ்வித துரோக மிழைத்தனர் என்பது இன்றும் நம் கண் முன்னே காட்சியளித்துக் கொண்டிருக்கிறது; இவ்வளவையும் தெரிந்து கொண்டதின் பின்னரும் தாங்கள், தங்கள் தந்தையாருடையவும் தங்கள் சகோதரருடையவும் எதிரிகளிடம் செல்ல விரும்புகிறீர்கள்; அவர்கள் உங்களுக்கு உதவி புரிவார்களென்றும் நம்புகிறீர்கள்!

“ஷாம் தேசத்தவரான எஜீதின் அரசாங்கத்திலுள்ளவர்கள் தங்களைக் காட்டிலும் பலம் பொருந்தியவர்கள்; சக்தியும் வசதியும் படைத்தவர்கள்; அவர்களைக் கண்டு மக்கள் நடுக்கமுறுகின்றனர்; தாங்கள் அங்கு சென்றதின் பின் அதிகார வர்க்கத்தினர் கூஃபா வாசிகளை உங்களுக்கு எதிராகத் தூண்டிவிடுவார்கள்; கூஃபா வாசிகளும் பணத்தாசையின் காரணமாக அவர்கள் சொல்கிறபடியெல்லாம் ஆடுவார்கள்; ‘உங்களை நேசிக்கிறோம், விசுவாசிக்கிறோம்,’ என இதுசமயம் கூறிக் கொண்டிருப்பவர்கள், நீங்கள் அங்கு சென்றதின்பின் உங்களை வெறுப்பதில் பிரதானமானவர்களாக இருப்பதை நீங்கள் காண நேரிடும் என்பதைச் சற்றே எண்ணிப் பாருங்கள்,” என்று;

என்ன சொல்லியும் யாது பயன்? இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின் எண்ணத்தில் மாற்றம் ஏற்படவில்லை; ஏற்படுத்த முடியவில்லை. அபூபக்கர் பின் ஹாரிதுக்கு இமாமவர்கள், ‘அல்லாஹ்வின் நாட்டப்படியே அனைத்தும் நடந்தேறும்,’ என்று மட்டுமே பதில் கூறினார்கள்;

## கூஃபாவை நோக்கி

ஹிஜ்ரி 60-ம் ஆண்டு துல்ஹஜ் பிறை 11-ல் இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் தங்கள் குடும்பத்தார்களுடன் இராக்கிலுள்ள கூஃபா நகரத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். தன்யீம் என்னும் இடத்தை அடைந்த பின் அங்கு பல ஒட்டகங்களை வாடகைக்குப் பிடித்துத் தங்கள் 'காபிலா' (பிரயாணக்) கூட்டத்துடன் சேர்த்துக் கொண்டார்கள்.

அங்கிருந்து புறப்பட்டு ஸப்பாஹ் என்னும் இடத்தை வந்தடைந்தார்கள். அங்கு நபிகள் பிரான் (ஸல்) அவர்களின் குடும்பத்தார் (அஹ்லு பைத்கள்) மீது அளவிலா அன்பு பூண்டவரான புகழ்மிக்க கவிவாணர் ஃபர்ஸதக்குடன் இமாமவர்கள் சந்திக்க நேர்ந்தது. அவரிடம் இராக் தேச நிலைமைபற்றி விசாரித்தார்கள்; அதற்கு அக் கவிராயர், 'நான் இராக் பற்றிய விஷய ஞானமுடைய ஒருவரிடம் விசாரித்தேன். அத்தேச மக்களின் மனங்கள் தங்கள்பால் சார்ந்துள்ளன; ஆனால். அவர்களின் வாட்கள் பனூ உமையாக்களை (எஜீதை)ச் சார்ந்து நிற்கின்றன என்று அவர் எனக்குத் தகவல் தந்தார்,' எனக் கூறினார்.

'உண்மையாகவா?' என ஆச்சரியத்துடன் வினவியவர்களாய் இமாமவர்கள், 'அல்லாஹ் தான் நாடியதை நடத்தாட்டுகிறான். ஒவ்வொரு வினாடியும் அவன் புதுமைகளைச் செய்துகொண்டிருக்கிறான். அல்லாஹ்வின் உதவி நமக்குக் கிடைக்குமாயின் அவனது அருளுக்கு நாம் கடமைப்பட்டவர்களாவோம், அவன் பேருபகாரியாவான். அன்றி, அவனது தீர்ப்பு நமக்குச் சாதகமாக இல்லாவிடின், நாம் நேர்மையையும் சத்தியத்தையும் கடைப்பிடித்தோம் என்ற அளவில் திருப்தியுறுவோம். அதற்குரிய கூலியையும் அவன் அளிக்கவே செய்வான்,' எனக் கூறினார்கள்.

## அப்துல்லாஹ் பின் ஜஃபர், மதீனு கவர்னர் கடிதங்கள்

அடுத்து இமாம் ஹுஸைன் அவர்களின் காபிலா தன் பயணத்தைத் தொடர்ந்தது. அத்தருணத்தில் இமாம் அவர்களின் பெரிய தந்தை ஹலரத் ஜஃபர் (ரலி) அவர்களின் மகனுரான அப்துல்லாஹ் (ரலி)யின் கடிதமொன்று மதீனுவிலிருந்து வந்து சேர்ந்தது. அதில் அப்துல்லாஹ் (ரலி):

"நான் உங்களிடம் அல்லாஹ்வின் பொருட்டால் கேட்டுக் கொள்கிறேன்; நீங்கள் இராக் செல்லும் எண்ணத்தை மாற்றிக் கொண்டு உடனே மக்காவுக்குத் திரும்பிவிடுங்கள். ஏனெனில், இந்தப் பயணத்தால் உங்களுடைய உயிருக்கு ஆபத்தும், உங்கள் குடும்பத்தினருக்குத் துன்பமும் நேரிடக் கூடுமெனப் பெரிதும் அஞ்சுகிறேன். நீங்கள் படுகொலை செய்யப்பட்டால் மூமின்களின் ஒரே புகலிடமாயுள்ள ஜோதி அணைந்து விடும். பிரயாணத்தின்மீது அவசரங்காட்ட வேண்டாம். இதோ நான் புறப்பட்டு வருகிறேன்," எனக் கூறியிருந்தார்.

போதாக்குறைக்கு, மதீனுவின் கவர்னர் அம்ரு பின் ஸயீதிப்னுல் ஆஸ் இடமும் தம்முடன் கொண்டு செல்வதற்காக, இமாம் அவர்களைச் சமாதானப்படுத்துவதற்கான கடிதமொன்றும் வரைந்து கேட்டார் அப்துல்லாஹ் பின் ஜஃபர். அதற்கு அவர், 'நான் எதை எழுதுவது? தாங்கள் ஒரு கடிதத்தை எழுதிக் கொண்டு வாருங்கள். அதில் நான் எனது முத்திரையைப் பதித்துத் தருகிறேன்,' எனக் கூறினர். கவர்னரின் கடிதம் கீழ்க் காணுமாறு வரையப்பட்டது:—

"தங்களை இராக் செல்லாது திருப்பிடவேண்டும் என்றும் இடையூறில்லாத சமாதானப் பாதையில் செலுத்த வேண்டுமென்றும் நான் அல்லாஹ்வை இறைஞ்சுகின்றேன். நான் தங்கள் விஷயத்தில் குரோதம், நயவஞ்சகம் இவற்றிலிருந்து பாதுகாப்புத் தேடுகிறேன்; பிளவையும், வம்பு, தும்பையும் வளர்ப்

பதற்குத் தாங்கள் துணை போக வேண்டாம். அதில் பெரிய ஆபத்துண்டு என்பதை நினைத்து அஞ்சுகிறேன். அப்துல்லாஹ் இப்னு ஜஃபரையும் என் சகோதரர் யஹ்யப்னு சயீதையும் தங்களிடம் அனுப்பியிருக்கிறேன். அவர்களுடன் தாங்கள் மதீனாவுக்கே திரும்பிவிடுங்கள். நான் தங்களுக்கு அபயமளிக்கிறேன். இங்கு தங்களுக்கு வேண்டிய சவுகரியங்கள் அனைத்தையும் செய்து தரு கிறேன். என் இவ்வெழுத்துகளுக்கு இறைவனே சாட்சியாவான்!''

இக்கடிதத்தில் கவர்னர் அம்ரு தமது அதிகார முத்திரையைப் பதித்து அப்துல்லாஹ் பின் ஜஃபரி வசம் கொடுத்து யஹ்யா இப்னு சயீதையும் உடன் அனுப்பினார். இருவரும் கொண்டு சென்ற கடிதத்தை படித்துப் பார்த்த இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள்,

'நான் கனவில் (பாட்டனார்), ரசூலுல்லாஹ் (ஸல்) அவர்களைக் கண்டேன்; அவர்கள் எனக்கு ஒரு கட்டளை யிட்டார்கள்; அதை நான் அவசியம் நிறைவேற் றியே தீருவேன்; அதன் முடிவு எனக்குச் சாதகமா யிருக்கட்டும் அல்லது பாதகமாயிருக்கட்டும்; அதை நான் பொருட்படுத்தவேயில்லை,' என்றார்கள்.

இதைக்கேட்டதும் அப்துல்லாஹ்வும், எஹ்யாவும் 'அஃது என்ன கனவு!' எனக் கேட்டனர். அதற்கு இமாமவர்கள், 'அக்கனவை நான் இதுவரை யாரிடமும் கூறியதில்லை; நான் மரணமடையும் வரை எவரிடமும் சொல்லப் போவதுமில்லை,' என்று மட்டும் கூறியதோடு நிறுத்திக் கொண்டார்கள்.

மதீனாவின் கவர்னர் அம்ருப்னு ஸயீது கடிதத்திற்கு இமாமவர்கள் இவ்வாறு பதில் எழுதி அனுப்பினார்கள்:

'அல்லாஹ்வின் நேரிய பாதையின் பக்கல் அழைப் பவனும், நற்கிரியைகளைச் செய்பவனும், 'நான் ஒரு முஸ்லிமாயிருக்கிறேன்,' என்று கூறிக் கொள்பவனு மான ஒருவன், அல்லாஹ்வுக்கும் அவனுடைய திருத் தூதருக்கும் மாற்றமாக எப்படி நடக்கத் துணிவான்?

ஒருக்காலும் துணியமாட்டான்! தாங்கள் எனக்கு அபயமும், நன்மையும், உதவியும் அளிப்பதாகக் கூறுகின்றீர்கள்; அபயமளிப்பவர்களிலெல்லாம் மேலானவன் அல்லாஹ்வாயிருக்கிறான், ஒருவன் இவ்வுலகில் அல்லாஹ்வுக்கு அஞ்சி நடக்கவில்லையாயின், இறுதி நாளின்போது அல்லாஹ் அவனுக்கு அபயமளிக்கமாட்டான்; எனவே இங்கு நான் அல்லாஹ்வுக்கு அஞ்சி நடக்க விழைகிறேன்; இறுதி நாளின்போது அவன் எனக்கு அபயமும், பாதுகாப்பும் அளிக்கப் போதுமானவன், மேலும், தாங்கள் எனக்கு எழுதியதுபோல் நன்மைகள் பலவும் செய்ய எண்ணம் கொண்டிருப்பீர்களாயின், அதற்காக இறைவன் தங்களுக்கு இவ்வுலகிலும் மறுவுலகிலும் நற்பயனளிப்பானாக!''

தமது முயற்சி பலனளிக்காததைக் கண்ட அப்துல்லாஹ் பின் ஜஃபர் (ரலி) தம் இரு புதல்வர்களையும் இமாம் அவர்களுடன் செல்லுமாறு அனுப்பிவிட்டு மதினாவுக்குத் திரும்பிவிட்டார்.

இங்ஙனமாக, இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின் அஹ்லெபைத் (ரசூலுல்லாஹ்வின் இல்லத்தார்) காபிலா பல எல்லைகளையும் கடந்து வந்துகொண்டிருக்கிறது என்ற செய்தி பாட்டைக் காவலர், ஒற்றர்கள் மூலமாகத் திமிஷ்கிலுள்ள எஜீதுக்கும், கூஃபாவிலுள்ள இப்னு ஜியாதுக்கும் கிடைத்துக்கொண்டிருந்தன; எனவே, உமையா அரசாங்க அதிகாரிகள்—எஜீதின் ஆட்கள்—இவர்களை வளைத்துப் பிடிக்க வேண்டுமென்ற முயற்சியில் ஈடுபடுத்தப்பட்டனர்; இதற்காக இப்னுஜியாத், காதிஸிய்யா நகரிலிருந்து கஃப்பான், கத்கத்தானா, ஜபலெ லஃலஃ வரை பாட்டைக் காவலர்களையும் உளவாளிகளையும் நிறுத்தி வைத்தான்.

## கைஸின் கொலை

இந்நிலையில் இமாம் அவர்கள் ஹாஜிஸ் என்னும் இடத்தை அடைந்ததும் கைஸ்பின் மஸ்ஹர் ஸைதாவீ என்பவர் மூலம் தம் வருகையை கூஃபா வாசிகளுக்கு

அறிவித்துக் கடித மாறலாகத் தெரியப்படுத்தினார்கள். ஆனால் கைஸ், காதிஸிய்யாவை அடைந்ததும் இப்னு ஜியாதின் ஆட்கள் அவரைப் பிடித்து பஸ்ராவுக்குக் கொண்டு சென்றனர். துரதிருஷ்ட வசமாக சற்றும் எதிர்பாராத நிலையில் இப்னுஜியாத் எஜீதின் கடிதத்தைப் பெற்ற அதே தினத்தன்று இமாம் ஹுஸைன் அவர்களின் கடிதத்துடன் கைஸ் பிடிபட்டு பஸ்ராவுக்குக் கொண்டு செல்லப்பட்டார். பஸ்ரா வாசிகளும் இமாம் அவர்களை எந்த நேரமும் எதிர் பார்த்த வண்ணமே இருந்து வந்தனர். இப்னு ஜியாதுக்குக் கிடைத்த எஜீதின் ஆணையும் அம்மக்களுக்குத் தெரியவந்தது. அக்கொடியோன், கைஸை உப்பரிகையிலேற்றி, 'பொய்யரான அலீயின் குமாரர் ஹுஸைனும் ஒரு பொய்யர்' எனத் தூஷணிக்க வேண்டுமெனக் கூறினான். கைஸ் அவ்வாறு அவதூறாகப் பேசுவாரா? உப்பரிகையில் ஏறினார். அங்கு நின்றுகொண்டு, 'ஏ, மனிதர்களே! ரசூலுல்லாஹ்வின் ஈரல் குலைத்துண்டான ஹலரத் பாத்திமாவின் அன்புத் திருமகனார், இமாம் ஹுஸைன் அவர்கள் இதுபோழ்து தாரணி மக்களுள் தன்னேரில்லாதவர்கள். அவர்கள் இது சமயம் ஹாஜிஸ் என்னும் ஸ்தலத்தை வந்து அடைந்துள்ளார்கள். நான் அவர்களின் வருகையைக் கூஃபா, பஸ்ரா மக்களாகிய உங்களுக்கு அறிவிப்பதற்காகவே இங்கு வந்துள்ளேன்,' எனக் கூறியதுடன் இப்னு ஜியாதையும் அவனைச் சார்ந்தவர்களையும் கடுமையான வார்த்தைகளால் தாக்கினார். இதனைக் கேட்டுச் சினங்கொண்ட அப்பாதகன் கைஸை உப்பரிகையிலிருந்து கீழே தள்ளிக் கொல்லுமாறு உத்தரவிட்டான். முஸ்லிம் பின் உகைலுக்கு முன் இது இப்னு ஜியாத் புரிந்த முதல் கோரப் படுகொலையாகும்.

பின்னர் பஸ்ராவின் பெரிய பள்ளி வாயிலுக்குச் சென்று அங்கொரு சொற்பொழிவு ஆற்றினான். அதில் அவன் கூறியதாவது:—

"அமீருல் மூமினீன் (எஜீத்) பஸ்ராவின் அதிகாரத்தோடு கூஃபாவின் அதிகாரத்தையும் எனக்கு வழங்கியிருக்கிறார்; ஆகவே, நான் அங்கு செல்கிறேன், எனக்குப்

பிரதிநிதியாக என் சகோதரர் உதுமான் இங்குள்ள என் அலுவல்களைக் கவனித்துக் கொள்வார். பிரஜைகளாகிய நீங்கள் கலகம் செய்வதை விட்டும், விகற்பங்களை வளர்ப்பதை விட்டும் நீங்கியவர்களாக இருந்து வரவேண்டும். ஆதலின், இத்தகைய செய்கைகளை எவரேனும் செய்கிறார் என்றோ, அல்லது, அவற்றிற்கு உதவியாக இருக்கிறார் என்றோ எனக்கு உண்மையான தகவல் கிடைத்தால் அத்தகையோரை நான் கொன்றே விடுவேன். பின்னர், பாவம், புண்ணியம், நேசன், பகைவன என்ற பாகுபாடின்றி அனைவரும் மடிந்து நாசமடைய நேரிடும். ஆகவே, நீங்களெல்லாம் நேரிய வழியில் நடந்து கொள்ளுங்கள். என்னுடைய கடமையைத் தெரிவித்து விட்டேன். பின்னர் என்மீது குறை கூறிப் பயனில்லை,'' என்பதாகும். இவ்வாறான கடுமையான சொற்பொழிவை ஆற்றிவிட்டு இப்னு ஜியாத் கூஃபாவுக்குப் புறப்பட்டுவிட்டான்.

## அப்துல்லாஹ் பின் முத்தீஃ

ஹாஜிஸ் என்னும் இடத்தை நீங்கி இமாம் அவர்களின் காபிலா பத்னெ ரமலா என்ற இடத்தின் நீரோடையருகே வந்து சேர்ந்தது. இங்கு இராக் தேசத்திலிருந்து வந்து கொண்டிருந்த அப்துல்லாஹ் பின் முத்தீஃ என்பவரைச் சந்திக்க நேர்ந்தது. அவர் இமாமவர்களைப் பார்த்து, 'என் தாய் தந்தையர் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! தாங்கள் ஏன் தங்கள் பாட்டனார் (ரசூலுல்லாஹ்) சமூகத்திலிருந்து வெளியில் புறப்பட்டீர்கள்?' என்று வினவினார். அதற்கு இமாமவர்கள், 'உலகத்தாருக்கு மீண்டும் உண்மையை உயிர்ப்பித்துக் காட்டவேண்டும் என்பதற்காகவும், புனித இஸ்லாத்தில் புதிதாக வந்து புகுந்து கொண்டுள்ள அனுச்சாரங்களைக் களைந்தெறிவதற்காகவும் கூஃபா வாசிகள் என்னை அழைத்துள்ளார்கள். எனவே, நான் அங்கு சென்று கொண்டிருக்கிறேன்,' எனப் பதில் சொன்னார்கள். இதைக்கேட்ட அப்துல்லாஹ் பின் முத்தீஃ,

'நான் ஆண்டவனை முன்னிறுத்திக் கூறுகிறேன்; நீங்கள் கூஃபா செல்லும் எண்ணத்தை முற்றிலுமாகக் கைவிட்டு விடுங்கள்; தங்களின் புனித உயிருக்கு ஊறு விளைவிக்கக் கூடிய சாத்தியக் கூறுகள் அங்கு தென்படுகின்றன; அங்குள்ள சூழ்நிலைகள் தங்களுக்குச் சாதகமானவையாகத் தோன்றவில்லை.' என்று எடுத்துக் காட்டினார்.

இதற்கு இமாமவர்கள், 'அல்லாஹ்வின் ஏற்பாட்டின்படியே காரியங்கள் நடைபெறும். அதற்கு அதிகமாக என்ன நடந்துவிடப் போகிறது?' என்றார்கள்.

## ஜுஹைர் பின் கைன்

இப்பொழுது இமாமவர்களின் 'காபிலா' ஜரூத் என்னும் இடத்தை வந்தடைந்தது. இங்கே ஹஜ்ஜுக்குச் சென்று திரும்பிக் கொண்டிருந்த ஜுஹைர் பின் கைனின் சந்திப்பு ஏற்பட்டது. ஜுஹைர் இமாமவர்களைக் கண்டதும் புத்துணர்ச்சியும் மிகத் தேஜஸும் அடைந்தவராய்த் தம்மை இஸ்லாத்திற்காக இமாமவர்களின் பாதையில் அர்ப்பணிக்கத் துணிந்துவிட்டார். எனவே, தம் மனைவிக்கு விவாக விடுதலையளித்து அப்பெண்ணின் சகோதரருடன் கூஃபா செல்லுமாறு கூறிவிட்டு இமாமவர்களின் காபிலாவில் சேர்ந்து கொண்டார்.

## மக்கா திரும்பும் எண்ணம்

ஜரூத்தைக் கடந்து இமாமவர்களின் 'காபிலா' தஃலபிய்யா (ஸார்தூ) என்னும் இடத்தில் வந்து கூடாரமடித்துத் தங்கியது. அங்கே வந்தபின் கூஃபாவினின்றும் வந்து கொண்டிருந்த அஸதி கூட்டத்தாரைச் சேர்த்த ஒருவர் மூலம், தம் சகோதரரும் தூதுவருமான முஸ்லிம் இப்னு உகைலும் அவருக்கு அடைக்கலமளித்த கூஃபா பிரமுகர் ஹானியும் கொல்லப்பட்ட துக்ககரமான செய்தியைக் கேள்வியுற்ற இமாம் அவர்கள், 'இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்.' எனக்

கூறியவர்களாய்க் கண்களினின்றும் அருவியாக நீரை வடித்தார்கள்.

அங்கிருந்த நண்பர்களும் அன்பர்களும் இமாம் அவர்களை நோக்கி, 'இறைவனை முன் நிறுத்தி உங்களுடையவும் 'அஹ்லெபைத்'களுடையவும் நன்மைக்காகக் கூறுகிறோம்; காலம் இன்னும் கடந்துவிடவில்லை. நீங்கள் தயக்கமின்றி இங்கிருந்து திரும்பி விடுங்கள். அங்கே கூஃபாவில் உங்களை ஆதரிப்பவர்களோ உங்களுடன் ஒத்துழைக்கக் கூடியவர்களோ எவருமில்லை எனத் தெரிகிறது. தங்களை அழைத்தவர்கள் அனைவரும் தங்களின் விரோதிகளாக மாறிவிடுவார்கள் போல் நிலைமை மாறிவிட்டது,' என்று கூறினர்.

இதனைச் செவியேற்ற இமாம் அவர்கள் ஒரு கணம் மௌனித்தவர்களாகத் திரும்பிச் செல்லலாமா என்ற யோசனையில் ஆழ்ந்தார்கள். அதுபோழ்து முஸ்லிம் இப்னு உகைலின் சகோதரரும் அன்பர்களும் முன் வந்து, 'அல்லாஹ்வின் மீது ஆணையாக நாங்கள் முஸ்லிமின் கொலைக்குப் பழிக்குப் பழி வாங்காது இங்கிருந்து திரும்பமாட்டோம்,' என்று கூறினார்கள். இவ் வார்த்தைகளைக் கேட்ட இமாம் அவர்கள் தமது கூட்டாளிகளை ஏறெடுத்துப் பார்த்து நீண்ட மூச்சொன்றை நெகிழ்த்தவர்களாக, 'ஆமாம், உண்மைதான்! அவருக்குப் பிறகு உயிர் வாழ்தலில் என்ன இன்பம் இருக்கிறது?' என்று கூறியவாறு தமது 'காபிலா'வைக் கூஃபாவின் திசையை நோக்கி நடக்குமாறு பணித்தார்கள்.

வழியில் இமாம் அவர்கள் வந்து கொண்டிருந்ததைக் கண்ட ஆங்காங்குள்ள கிராமத்தார்கள், இமாமவர்களுடன் கூஃபா சென்றால் அவர்களின் ஆதரிப்பில் சுகமாக வாழலாம் என்ற எண்ணத்தில் 'காபிலா' வுடன் வந்து சேர்ந்து கொண்டிருந்தார்கள். ஜபார் என்னும் இடத்தை அடைந்ததும், முஸ்லிமுக்குக் கடிதம் கொண்டு சென்ற தங்களின் தூதர் (வளர்ப்புச்

சகோதரர்) அப்துல்லாஹ் பின் யக்தரும் இப்னுஜியா திஞல் கொல்லப்பட்டார் என்ற செய்தியைக் கேள்வி யுற்று அளவிலா வியாகூலம் அடைந்தார்கள்.

## அப்துல்லாஹ் பின் யக்தர்

இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் தாம் மக்காவி லின்றும் கூஃபா புறப்பட்டுவிட்ட செய்தியை முஸ்லி முக்குத் தெரியப்படுத்துவதற்காகவும் கூஃபாவின் நிலைமையைத் தங்களுக்கு அறிவிக்கச் சொல்லியும் அப்துல்லாஹ் பின் யக்தரிடம் கடிதம் கொடுத்தனுப்பி ஞர்கள். அவர் அவ்வாறு செல்லும்பொழுது காதி ஸிய்யாவை அடுத்து எஜீதின் பாட்டைக் காவலன் ஹஸீன் பின் நமீர் தைமீ என்பவனுடைய ஆட்கள் அப்துல்லாஹ்வைப் பிடித்து கூஃபாவிலிருந்த இப்னு ஜியாதிடம் கொண்டு சென்றனர். அவன் அவரை கைஸ் பின் மஸ்ஹர் போன்று உப்பரிகையிலேற்றி பெரு மாஞர் (ஸல்) அவர்களின் அன்புப் பேரரும்—அலி-பாத்திமா (ரலி) அவர்களின் திருப்புதல்வருமான இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களைத் தூஷணித்துப் பேசுமாறு கூறிஞன்.

கைஸ் போன்றே அப்துல்லாஹ்வும் உப்பரிகையில் நின்றுகொண்டு, 'ஏ, மக்களே! ரசூலுல்லாஹ்வின் திருப் புதல்வியார் பாத்திமா நாச்சியாரின் இதயக் கனி இமாம் ஹுஸைன் அவர்கள் உங்களிடம் வந்து கொண்டிருக்கிருர்கள், நீங்கள் இப்னு மர்ஜாஞவுக்கு (எஜீதுக்கு) விரோதமாக அவர்களுக்கு உதவி செய்யுங் கள்.' என்று கூவியழைத்தார். இப்னுஜியாத் இவ் வார்த்தைகளைக் கேட்டுச் சகித்துக் கொள்வாஞ? அவனிடம் சகிப்புத் தன்மை ஏது? 'அரசு அன்று கொல்லும்' என்ற குணமுடையோன் அல்லவா அவன்? கைஸுக்கு நேர்ந்த கதியே அப்துல்லாஹ்வுக்கும் நேர்ந்தது. அவரை உப்பரிகையிலிருந்து உருட்டி விட்டான்.

முன்பு முஸ்லிம் பின் உகைல் தமது மரணத் தறு வாயின்போது, முஹம்மத் பின் அஷ்அத், அம்ருப்னு

ஸஃத் இருவரிடமும், இமாம் அவர்களைக் கூஃபா வர விடாது வழியில் தடுத்துத் திரும்பச் செய்யுமாறு ஆளனுப்பக் கேட்டுக் கொண்டாரல்லவா? அவர்கள் அவ்வாறே தங்கள் ஆட்களில் இருவரை அனுப்பி இமாம் அவர்களுக்கு விஷயத்தை அறிவித்தார்கள். இதற்கிடையில்தான் அப்துல்லாஹ் பின் யக்தர் கொல்லப்பட்டார்.

## இடையில் வந்து இடையில் சென்றனர்

இந்த வகையில், இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களுக்கு ஒன்றுக்குப்பின் ஒன்றாக துக்கச் செய்திகள் வந்துகொண்டிருப்பதைக் கண்ட இமாம் அவர்கள் தாம் மரணப் பாதையில் சென்றுகொண்டிருப்பதை திட்டமாக அறிந்துகொண்டார்கள். தம்முடன் வந்திருப்பவர்களையெல்லாம் ஒன்று கூட்டி அவர்கள் மத்தியில் சிறிய உரை ஒன்று ஆற்றினார்கள்:

'சகோதரர்களே! இங்கே மிக்கப் பயங்கரமான செய்திகள் கிடைத்துக் கொண்டிருக்கின்றன. முஸ்லிம் பின் உகைல், ஹானீ பின் உர்வா, கைஸ் பின் மஸ்ஹர், அப்துல்லாஹ் பின் யக்தர் ஆகியோரெல்லாம் கொடூரமான முறையில் கொலை செய்யப்பட்டார்கள் என்ற துக்ககரமான செய்திகள் நமக்குக் கிடைத்துள்ளன. நம்மைச் சார்ந்தோர்கள் என்போர் இப்போது நம்மைக் கைவிட்டு விட்டனர். கூஃபாவில் நம் ஒத்துழைப்பாளர் எவருமிலர். எனவே, உங்களில் விருப்பமுள்ளோர் இக் 'காபிலா' வினின்றும் பிரிந்து தங்கள், தங்கள் ஊர்களுக்குத் தாராளமாகச் சென்றுவிடலாம். அது குறித்து நாம் எவ்வித வருத்தமும் அடையமாட்டோம்; குற்றமும் சுமத்தமாட்டோம்; அழுக்காறும் கொள்ளமாட்டோம்.' என்று கூறிமுடித்தார்கள். இதனைக் கூடியிருந்தோர் அனைவரும் கவனமுடன் செவிமடுத்தனர். 'காபிலா' வில் செல்ல விரும்பாதவர்கள் தங்கள் ஊர்களுக்குக் கலைந்து சென்றனர், கரைந்தனர். இறுதியில் கணக்குப் பார்க்க மக்காவினின்றும் புறப்பட்டவர்களே எஞ்சி நின்றார்கள். கூஃபா

விலிருந்து வீசிய நயவஞ்சகக் காற்று அவர்களைக் கோழைகளாக்கிவிட்டது; உறுதியைக் குலைத்துவிட்டது!

பின்னர், இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின் 'காபிலா' ஜபாலா என்னும் தலத்தைக் கடந்து பத்னெ உக்பா என்னுமிடத்தை அடைந்தது. இங்கு இமாமவர்கள் ஒருவரைச் சந்திக்க நேர்ந்தது. இவரும் கூபா நகரின் நிலைமையையும் அங்குள்ள மக்களின் மனப்போக்கையும், அபாயத் தன்மையையும் எடுத்துக் கூறி அங்கு போக வேண்டாமெனத் தடுத்தார்; அதற்கு இமாமவர்கள், "நீர் கூறுவதெல்லாம் உண்மைதான், இதையெல்லாம் யானும் அறிவேன்; என்றாலும் அல்லாஹ்வின் கட்டளைக்கு விரோதமாய் நடப்பது கூடாத காரியமல்லவா?" எனச் சமாதானங் கூறினார்கள்.

## ஹுர் இப்னு எஜீது வருகை

ஹிஜ்ரி 61-ம் ஆண்டு முஹர்ரம் மாதம்!

பத்னெ உக்பா என்னும் இடத்தைக் கடந்து இமாமவர்களின் 'காபிலா' ஷர்ராப் என்னும் தலத்தை அடைந்தது. இங்கு கால்நடைகளுக்கெல்லாம் தண்ணீர் குடிப்பாட்டியபின் ஜீஹஷம் என்பதன் பக்கம் திரும்பி அங்கிருந்த ஒரு மலையடி வாரத்தில் கூடாரங்கள் அடிக்கச் சொன்னார்கள். இங்கேதான் இப்னு ஜியாதின் ஆலோசகனான ஹஸன் பின் நமிர் தைமீ, காதிஸிய்யாவிலிருந்து அனுப்பிய 1000 வீரர்களுக்குத் தலைமை தாங்கியவனாக ஹுர்இப்னுயஜீத் என்பவனும் வந்து சேர்ந்தான். இவன் ஷாம் தேசத்தைச் சேர்ந்தவன். வந்தவன் தன் கூடாரங்களை இமாமவர்களின் கூடாரங்களுக்கு எதிரே அடித்துக்கொண்டான். இவனுக்கு இடப்பட்ட கட்டளை, இமாமவர்களைப் பின்தொடர்ந்து அவர்களை வேறு பக்கங்களுக்குச் செல்லவிடாமல் அணைத்துக் காத்து கூபா கொண்டுவந்து சேர்த்து, இப்னுஜியாதிடம் ஒப்படைத்துவிடவேண்டும் என்பதாகும். ஹுருடன் வந்த வீரர்களுக்கு

குதிரைகளுக்கும் தண்ணீர் வழங்குமாறு தம்முடன் வந்தவர்களுக்குக் கருணை உள்ளம் படைத்த இமாம் அவர்கள் கட்டளையிட்டார்கள்.

இப்பொழுது நண்பகல் தொழுகைக்கான 'லுஹர்' நேரம் வந்தது. இமாம் அவர்களின் கட்டளைப்படி 'அதான்' (பாங்கு) கூப்பீடு செய்யப்பட்டது. சற்று நேரம் கழிந்ததும் இமாம் அவர்கள் லுங்கி கட்டியவர்களாகப் போர்வையும் போர்த்திக்கொண்டு காலணி அணிந்தவர்களாக கூடாரத்தை விட்டும் வெளியே வந்தார்கள். ஹுர்ருடன் வந்தவர்களின் எதிரே போய் நின்றுகொண்டு இறைவனைப் புகழ்ந்தவர்களாக இவ்வாறு கூறினார்கள்:

'ஏ, மனிதர்களே! நான் முதலில் அல்லாஹ்விடமும் பின்னர் உங்களிடமும் மன்னிப்புக் கோருகிறேன். நான் தன்னிச்சையாக எனது விருப்பப்படி இங்கு புறப்பட்டு வரவில்லை. உங்களுடைய கடிதங்களும் உங்களிடத்திலிருந்து வந்த தூதுக் குழுவினருமே என்னை இங்கு புறப்பட்டுவரச் செய்தனர். 'எங்களுக்கு நேர்வழி காட்டத் தலைவர் யாருமில்லை. தாங்கள் புறப்பட்டு வந்தால் தங்கள் கரத்தின்மீது எங்களை இறைவன் ஒருங்கிணைத்து ஒற்றுமைப்படுத்துவான்,' எனத் தொடர்ந்து எனக்கு அழைப்புவிடுத்தீர்கள். இப்பொழுதும் நீங்கள் அதே கருத்தைக் கொண்டவர்களாக இருப்பீர்கள் என்ற நம்பிக்கையில் நான் இங்கு புறப்பட்டு வந்தேன். இப்பொழுது உங்களுடைய வாக்குறுதியை நிறைவேற்றித் தருவதாயிருந்தால் நான் உங்களுடன் புறப்பட்டு வருகிறேன். ஆனால், என்னுடைய வருகை உங்களுக்கு விருப்பமற்றதும் தேவையற்றதுமாகக் காணப்படின் நான் இங்கிருந்தவாறே திரும்பிச் சென்றுவிடுகிறேன்,' என்று ஹுர்ரின் வீரர்களைக் கூஃபா வாசிகளெனக் கருதிக்கொண்டு சொன்னார்கள்.

இதனைச் செவியேற்ற அனைவரும் யாதும் கூறாது மௌனித்திருந்தனர். தொழுகை நேரம் வந்ததும்

'இக்காமத்' சொல்லச் சொல்லிவிட்டு ஹுர்ரை நோக்கி 'நீர் நம்முடைய ஜமாஅத் (கூட்டு) தொழுகையில் கலந்து கொள்கிறீரா? அல்லது தனித் தொழுகை நடத்திக் கொள்கிறீரா?' என வினவினார்கள். அதற்கு ஹுர், 'தங்கள் இமாமத்திலேயே நாங்களும் சேர்ந்து தொழுகிறோம்' என்றார். இமாமவர்களுக்கு இது ஒரு நற்சகுனமாக, நல்ல ஆரம்பமாகத் தோன்றியது. தொழுகை முடிந்து இமாமவர்களும் ஹுர்ரும் தனித் தனியாகத் தங்கள் கூடாரங்களுக்குச் சென்றனர்.

## திரும்ப அனுமதியுங்கள்

மாலை (அஸர்) தொழுகையையும் அவ்வாறே தொழுது கொண்டார்கள். பின் இமாமவர்கள் மக்களை நோக்கிக் கூறினார்கள்:

'ஜனங்களே! நீங்கள் பயபக்தியுள்ளவர்களாக நடந்துகொள்ளுங்கள். உண்மையான உரிமையாளர்களின் உரிமையை உள்ளபடி உணருபவர்கள் இறைவனின் அன்பையும் திருப்பொருத்தத்தையும் பெறுவார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் குடும்பத்தாராகிய நாங்கள்தான் அல்லாஹ்வின் தூய மார்க்கமாகிய இஸ்லாத்தின் சட்டதிட்டங்களை இவ்வவனியில் நிலைபெறச் செய்வதான கிலாபத்திற்கு (இஸ்லாமிய ஆட்சி) அதிக மதிகம் அருகதை பெற்றவர்களாவோம். கிலாபத்துக்கு உரிமை கொண்டாடியவர்களாக இன்று ஆட்சி பீடத்தைக் கைப்பற்றிக்கொண்டிருப்பவர்கள் மக்களின் உரிமைகளை மதிக்காதவர்களாக அநியாய, அக்கிரம ஆட்சி புரிகிறார்கள். இது இஸ்லாத்தின் கோட்பாடுகளுக்கு முற்றிலும் முரண்பாடானது. உண்மை நிலை இதுவேயாகும். இப்போது நாங்கள் இங்கு வந்திருப்பது உங்களுக்கு ஏற்புடையதாக இல்லாவிடின், எங்கள் உரிமையை நீங்கள் உணர்ந்துகொள்ள முடியாதவர்களாயிருப்பின், உங்கள் கடிதங்கள் மூலமாகவும் தூதவர்கள் வாயிலாகவும் விடுத்த அழைப்புகளை நாங்கள் புரிந்து கொண்டது தவறு என நீங்கள் கருதுவீர்களாயின், அதனை மகிழ்ச்சி

புடன் ஏற்ற நாங்கள் வந்த வழியே செல்லச் சித்தமாயிருக்கிறோம்.' என்றார்கள்;

## என்ன கடிதங்கள்?

இவ்வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்த ஹுர், 'என்ன கடிதங்கள்? எந்தத் தூதுவர்களைப் பற்றி நீங்கள் பிரஸ்தாபிக்கிறீர்கள்?' எனக் கேட்டான். இக்கேள்வியால் திகைப்படைந்த இமாமவர்கள், உக்பத்துப்னு ஸம்ஆனை ஏவி, தங்களுடன் கொண்டு வந்திருந்த கூபாவாசிகளின் கடிதங்கள் அடங்கிய இரண்டு மூட்டைகளையும் தூக்கி வந்து ஹுரின் முன்னால் கொட்டிக் காட்டுமாறு பணித்தார்கள்; அவ்வாறு உக்பா கொண்டு வந்து கொட்டியதைக் கண்ட ஹுர், 'இக்கடிதங்கள் வரைந்தவர்களுக்கும் எங்களுக்கும் யாதொரு சம்பந்தமும் கிடையாது. எங்களூர் (பஸ்ரா)காரர்கள் எவரும் எழுதியதில்லை. நாங்கள் வேறு மனிதர்கள்; எங்களுக்கு இடப்பட்டுள்ள கட்டளை, தங்களை நாங்கள் எங்கு சந்திக்கிறோமோ அங்கிருந்து தங்களை விட்டுப் பிரியக் கூடாதென்பதும், தங்களைக் கொண்டுபோய் இப்னு ஜியாதிடம் ஒப்படைக்க வேண்டும் என்பதாகும்' என்று கூறினான்;

## வழிமறித்தான் ஹுர்

அதைக் கேட்ட இமாமவர்கள், 'உமக்குக் கேடு காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. இது மரணத்திற்கு முன் சாத்தியமாகாது' எனக் கூறியவர்களாய் இனிக் கூபா வாசிகளை நம்புவதில் பயனில்லை எனத் தேர்ந்து, தங்கள் காபிலாவை வந்த பாதையில் திருப்புமாறு பணித்தார்கள்; ஆனால், ஹுரும் அவன் வீரர்களும் இதற்கு இடந்தராது வழி மறித்தார்கள். இமாமவர்களுக்குக் கடுங்கோபமேற்பட, ஹுரை நோக்கி,

'உமது அன்னை உமக்காக அழட்டும்! உமது விருப்பம்தான் என்ன?' என்று கேட்டார்கள். இதனைச்

செவியுற்ற ஹுர் "இறைவன்மீது ஆணையாக, அரபு நாட்டிலுஞ் சரி, வேறு நாட்டிலுஞ் சரி தங்களைத் தவிர வேறு எவராவது என் தாயை இழித்துரைத்திருப்பின் நான் அவரை ஒரு கை பார்க்காது விட்டிருக்கமாட்டேன். ஆனால் தங்கள் அன்னையாரை நான் எவ்வளவோ உயர்வாக மதிக்கும் நிலையில், குறைவான வார்த்தை என் வாயினின்று எவ்வாறு வெளிவரும்?" என்று கூறினான்.

அதற்கு இமாமவர்கள், 'சரிதான், அப்படியாயின் நீர் எதை விரும்புகிறீர் கூறும்' என்றார்கள். அதற்கு ஹுர்.

'தாங்கள் என்னோடு இப்னு ஜியாதிடம் வரவேண்டும் என்பதுதான் எனது கோரிக்கை.'

'அல்லாஹ்வின்மீது ஆணையாக நான் உம்மோடு வரப்போவதில்லை' இது இமாம் அவர்களின் பதில்.

'அவ்வாறாயின், யானும் தங்களிஷ்டப்படி செல்வதற்கு அனுமதிக்கப் போவதில்லை' இது ஹுர்ரின் மறுமொழி.

இப்படிப் பேச்சு வார்த்தைகள் நடந்தபின் ஹுர் சற்று இறங்கி வந்து,

'உங்களுடன் போர் செய்வதற்கு எனக்கு அனுமதியில்லை. தங்களைக் காணுமிடத்திலிருந்து பின்னே தொடர்ந்து சென்று கூஃபாவுக்குக் கொண்டுவந்து சேர்க்கவேண்டுமென்பது எனக்கிடப்பட்டுள்ள கட்டளை. இது தங்களுக்கு விருப்பமில்லையாயின், என் நோக்கப்படி கூஃபாவுக்கோ அல்லது தங்கள் நோக்கப்படி மதீனாவுக்கோ செல்லாத வேறொரு பாதையைத் தேர்ந்துக் கொள்ளுங்கள். இது குறித்து நான் இப்னு ஜியாதுக்கு எழுதுகிறேன்; தாங்களும் எஜீது அல்லது இப்னு ஜியாதுக்கு எழுதுங்கள்; அல்லாஹ் சுமுகமான ஒரு நல்ல வழியைக் காண்பிப்பான். இச்சிக்கல், சோதனையான நிலையிலிருந்து நானும் விடுவிக்கப் பட்டு விடுவேன்' என்று கூறினான்.

இக்கருத்தை இமாமவர்களும் ஏற்றுக் கொண்டவர்களாய் கூஃபா செல்வதை விடுத்து அஜீப், காதிஸிய்யா நகரங்களின் இடது பாரிசமாக நினேவா பாதையில் வடக்கு நோக்கிப் பிரயாணத்தைத் தொடர்ந்தார்கள். ஹுர்ரும் இமாமவர்களைப் பின் தொடர்ந்து போய்க் கொண்டிருந்தான்.

## இமாமவர்களின் பேச்சு

'காபிலா' பைலா என்னும் இடத்தை அடைந்ததும் இரு திறத்தாரையும் ஒன்று கூட்டிவைத்துக் கொண்டு இமாமவர்கள் சொற்பொழிவொன்று நிகழ்த்தினார்கள். அதில்,

''ஏ மனிதர்களே! ரசூலுல்லாஹ் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : 'அதிகாரத்திலுள்ள ஒருவன் அக்கிரமக்காரனாகவும் இறைவனால் விலக்கப்பட்டவைகளை (ஹறாமை) ஆகுமானதாக்கி (ஹலாலாக்கி)க் கொள்பவனாகவும், இறைவனின் வாக்குறுதிகளைத் தகர்ப்பவனாகவும், திருத்தூதரவர்களின் மார்க்கத்திற்கு எதிரியாய் நிற்பவனாகவும், இறைவனின் அடியார்கள்மீது அடக்குமுறையையும் பாவச் செயல்கள் புரிவதையும் கட்டவிழ்த்து விட்டவனாகவும் இருப்பதைக் கண்டும் தமது சொல்லாலோ அல்லது செயலாலோ எதிர்ப்புக் காட்டாவிடின், அத்தகைய அக்கிரம ஆட்சியாளனுக்குப் பகரமாக இவர்களையே இறைவன் தண்டிப்பான்,' என்று.

''மனிதர்களே! நீவிர் இது சமயம் விழித்துக் கொள்ளவேண்டும். இதோ பாருங்கள், இவர்களெல்லாம் ஷைத்தானின் சீடர்களாகி விட்டனர். இறைவனுக்கு மாறு செய்கின்றனர். நாட்டில் குழப்பம் அராஜகம் இவை தலைவிரித்தாடுகின்றன. இறைவனின் சட்டம் செயலற்றுக் கிடக்கிறது. பொதுநிதி (பைத்துல் மால்) அக்கிரம, அனாச்சாரக் காரியங்களுக்காகப் பயன்படுத்தப்படுகிறது.

"இறைவன் விதித்துள்ள ஹலால், ஹறாமாகவும் ஹறாம், ஹலாலாகவும் மாற்றப்படுகிறது: இவர்கள் புரியும் இவ்வித அக்கிரமங்களை நேர்மைப்படுத்துவதற்கு நானே மிகவும் கடமைப்பட்டவன், உரிமையுடையவன்; உங்களிடமிருந்து எனக்கு எத்தனையோ கடிதங்கள் வந்துள்ளன; எத்தனையோ தூதர்கள் வந்தார்கள்; நீங்களெல்லாம் என்னிடம் வாக்குப் பிரமாணம் (பைஅத்) செய்வதற்குக் காத்திருப்பதாக, வந்தவர்கள் சொன்னார்கள், எனக்கு விரோதம் செய்யமாட்டீர்கள், எதிரிகளின் கையில் ஒப்படைத்துவிடமாட்டீர்கள் என்று அவர்கள் தெரிவித்தார்கள்;

"நீங்கள் உங்களின் வாக்குறுதியைக் காப்பாற்றுவீர்களாயின், நேரான பாதையைக் கடைப்பிடித்தவர்களாவீர்கள்; நான் அலீயுடையவும், ரசூலுல்லாஹ்வின் திருக்குமாரியான பாத்திமாவுடையவும் மகனாக இருக்கிறேன்; என்து உயிர் உங்களுடைய உயிர் போன்றும், என் குடும்பத்தார் உங்களது குடும்பத்தார் போன்றும் இருக்கிறோம்; எனது வாழ்க்கை உங்களுக்கு ஓர் உதாரணமாகும்; என்னை விட்டு உங்கள் கழுத்தைத் திருப்பாதீர்கள்; மாறாக, நீங்கள் எனக்குத் தந்த வாக்குறுதிகளை மீறி அவற்றைத் தகர்த்தெறிந்து விடுவீர்களாயின், அதனை நான் ஆச்சரியமானதாகக் கருதமாட்டேன்; ஏனெனில், இதற்கு முன்பும் நீங்கள் என் தந்தையாரிடத்தும், என் சகோதரரிடத்தும், எனது சிறிய தந்தையின் மகன் முஸ்லிம் விஷயத்திலும் இவ்வாறே நடந்து கொண்டீர்கள்; அவர்களெல்லாம் உங்களை நம்பி மோசம் போனார்கள்;

"அறிந்து கொள்ளுங்கள்! இவற்றால் நீங்கள் தமக்குத் தாமே தீங்கிழைத்துக் கொண்டவர்களாகி விட்டீர்கள்; உங்களுடைய நன்மையை நாசப்படுத்திக் கொண்டீர்கள்; வாக்குறுதியை மீறுபவன் தன்னைத் தானே ஏமாற்றிக் கொண்டவனாவான்; வெகு சீக்கிரத்தில் இறைவன் என்னை உங்களை விட்டும் தேவையற்

நலனுக்கு வைக்கப் போதுமானவன்; அல்லாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரக் காத்துஹு!''

ஹுர் இப்னு யஜீது தன் வீரர்களுடன் இமாம் அவர்களின் 'காபிலா'வைப் பின் தொடர்ந்து கொண்டேயிருந்தான்; அத்துடன் நில்லாது, ''ஹுஸைன் அவர்களே, நான் இறைவனைச் சாட்சியாக வைத்துச் சொல்கிறேன், நீங்கள் யுத்தம் செய்யத் துணிவீர்களாயின், நிச்சயம் கொல்லப்படுவீர்கள்!'' என்று வேறு அடிக்கடி சொல்லிக் கொண்டே வந்தான். இதனைப் பல தடவையும் கேட்டு வந்த இமாமவர்கள், ஒரு தடவை கடுங்கோபமுற்றவர்களாக,

''நீர் எம்மை மரணத்தைக் காட்டியா பயமுறுத்துகிறீர்? என்னைக் கொன்று விடுமளவுக்கு நீங்கள் துர்ப் பாக்கியசாலிகளாகிவிட்டீர்களா? உங்களுக்கு என்ன பதில் கூறுவதென்று எனக்குப் புரியவில்லை; இப்படித் தான் ரசூலுல்லாஹ் அவர்களுக்கு உதவியாகப் போருக் குப் புறப்பட்ட ஒருவரை அவர் சகோதரர், 'நீ போக வேண்டாம், போருக்குச் சென்றால் நீ கொல்லப்படு வாய்,' எனப் பயங்காட்டித் தடுத்தார்;

''அதற்கு அவர், 'நான் புறப்பட்டுச் செல்கிறேன்; வீர இளைஞனுக்கு மரணம் இழிவு தரும் செயலல்ல; எதுவரை அவனது எண்ணம் தூயதாகவும், இஸ்லாத் திற்காகப் போரிடுவதாகவும், தன் உயிரைப் பணயம் வைத்து உத்தமர்களுக்கு உதவுவதாகவும், அக்கிரமக் காரர்கள், மோசக்காரர்கள், அழிவை நோக்கிச் செல் வோர் ஆகியோரை விட்டும் ஒதுங்கி நிற்பதாகவும் இருக்குமோ அதுவரை,' என்று பதிலளித்தார்,'' என அந்த சஹாபி பாடிய பாடலை இமாமவர்கள் ஹுர்ருக் குப் பாடிக் காட்டினார்கள்; அவன் அத்தோடு வாய் பொத்தி மௌனமாகி விட்டான்;

## தர்மாஹ் பின் அதீ

அதிபுல் ஹஜானாத் என்னும் தலத்திற்கு வந்தபின் கூபாவிலிருந்து தர்மாஹ் பின் அதீ தலைமையில் நான்கு

பேர் குதிரைகளில் வந்து சேர்ந்தார்கள்; தர்மாஹ் வாகனத்திலிருந்தவாறே ஒரு பாடலைப் பாடிக் கொண்டே வந்தார்; அவர்கள் இமாமவர்களின் ஆதரவாளர்களாக இருந்தனர். அப்பாடல் வருமாறு:—

"என் ஒட்டகையே! நான் எச்சரிப்பது உனக்குப் புரியவில்லையா? காலை உதயமாவதற்கு முன்பே நீ போய்ச் சேர்ந்திடவேண்டும்; நல்ல பிரயாணிகளைச் சுமந்து செல்! புனித பிரயாணத்திற்காகப் புறப்பட்டுச் செல்! சென்று, ஒரு புனிதமான உயர்குல மனிதரிடம் போய்ச் சேர்ந்துவிடு! அவர், கனவான்; சுதந்திர புருஷர்; விரிந்த நெஞ்சினர்; மிகவும் சிறந்த பணிக்காக வந்திருக்கிறார்! அல்லாஹ் அவரைச் சந்தோஷமாக வைப்பானாக!"

இந்தப் பாடலை தர்மாஹ் உரக்கப் பாடிக் கொண்டு வருவதைச் செவியுற்ற இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள், "அல்லாஹ் நம்மில் நன்மையையே நாடியிருப்பான் என நம்புகிறேன்; எனவே, வெற்றி கிடைத்தாலும் சரி; வெட்டுண்டு போனாலும் சரி!" என்று கூறிக்கொண்டார்கள்.

ஹுர் இப்னு யஜீது அந்த நால்வரையும் பார்த்தவுடன் இமாம் அவர்களிடம், "இவர்கள் கூஃபா வாசிகள்; உங்களைச் சார்ந்தவர்களல்லர்; எனவே, இவர்களை நான் மடக்கி என்னுடன் வைத்துக் கொள்வேன்; அல்லது, கூஃபாவுக்கே திருப்பி அனுப்பிவிடுவேன்; இவ்வாறு செய்ய எனக்கு உரிமை உண்டு," என்றான்.

இதனைக் கேட்ட இமாமவர்கள், "இவர்கள் என் உதவியாளர்கள்; இவர்கள் என்னுடன் பிரயாணம் செய்பவர்களுக்குச் சமமானவர்கள்; எனவே, எங்களைப் போலவே இவர்களையும் நான் பாதுகாத்துக் கொள்வேன்; மேலும் நீர், 'இப்னு ஜியாதின் பதில் கிடைக்கும் வரை உங்கள் விஷயத்தில் நான் தலையிட மாட்டேன்,' என்று கூறிய வாக்குறுதியின்படி நீர் நடக்கத் தவறி இவர்களிடம் முரண்டினால் உம்முடன் நான்

யுத்தம் செய்ய நேரிடும்,'' என கம்பீரமாகக் கூறினார்கள். ஹுர் எதுவும் சொல்லவும் முடியாமல் செய்யவும் முடியாமல் திகைத்து நின்றான்.

இப்போது கூஃபா வாசிகள் நால்வரிடமும் அங்குள்ள நிலைமையைப் பற்றி விசாரித்தார்கள். அவர்களில் மஜ்மஉ பின் அதீ என்பவர், 'கூஃபாவின் தலைவர்களுக்கு இலஞ்சங்கள் ஏராளமாகக் கொடுக்கப்பட்டு அவர்கள் எஜீதினால் விலைக்கு வாங்கப்பட்டு விட்டனர். எனவே, அங்குள்ள பெரும் புள்ளிகளும் அவர்களின் ஆட்களும் இப்போது முழுக்க, முழுக்க உங்களின் எதிரிகளாக, துரோகிகளாக மாற்றப்பட்டு விட்டனர். ஏழை, எளியோர் தங்கள் மீது அன்பு பூண்டு நிற்கின்றனர். ஆனால், இவர்கள் என்ன உதவியைத் தங்களுக்குச் செய்துவிடப் போகின்றனர்?'' என்று கூறினார்.

பின்னர், கைஸ் பின் மஸ்ஹரின் கதி யாதாயிற்றென இமாமவர்கள் வினவினார்கள். அவர், முன்பு விவரித்ததுபோல் உப்பரிகையிலிருந்து கீழே தள்ளப்பட்டுக் கொல்லப்பட்டார் என்பதை நிச்சயமாகக் கேள்வியுற்றதும் இமாமவர்களின் கன்னங்களின் வழியே கண்ணீர் வழிந்தோடியது. கைஸின் ஆன்ம சாந்திக்காகப் பிரார்த்தித்தார்கள்.

இதன்பின் தர்மாஹ் பின் அதீ. இமாம் ஹுசைன் அவர்களைப் பார்த்து, ''இறைவன் மீது ஆணை! நான் என் கண்களை அகல விரித்துப் பார்க்கிறேன். எவரும் தங்களுடன் ஒத்துழைப்பதாகத் தெரியவில்லை. தங்களைப் பின் தொடர்ந்து வரும் (ஹுரின்) இக்கூட்டத்தார்களை தங்களுடன் ஈடுகொடுத்துச் சமாளிக்கப் போதுமானவர்கள். நான் இங்கு புறப்பட்டு வரும்பொழுது கூஃபா பள்ளத்தாக்கில் என்றுங்காணாத திரளான மக்கள் கூட்டத்தைக் கண்டேன். விசாரித்தபொழுது இந்த ஜன சமுத்திரம் ஒரு ஹுசைனை எதிர்த்துப் போராடுவதற்காக ஒன்று திரட்டப்பட்ட வீரர் படை என்பதை அறிந்தேன். எனவே, நான் ஆண்டவனுக்காக உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

தாங்கள் இவ்விடத்தை விட்டும் கூஃபாவின் பக்கம் ஓர் அடியேனும் காலெடுத்து வைக்க வேண்டாம், அன்றி, எதிரிகளின் எவ்விதப் பயமுமின்றித் தாங்கள் இருந்துகொள்ள விரும்புவீர்களாயின், வாருங்கள் என்னுடன், பாதுகாப்பான எனது 'ஆஜா' மலையின் அடிவாரத்திற்கு இட்டுச் செல்கிறேன்; அங்கு தாங்கள் முழுப் பாதுகாப்புடன் இருந்து கொள்வதன்னியில் அருகிலுள்ள பாஜீ, ஸல்மா ஆகிய தய்யி கோத்திரத்தாரைக் கொண்டு பத்து தினங்களுக்குள் குதிரைப் படை, தரைப்படையாக உங்களுக்குப் பாதுகாப்பாக 20,000 வீரர்களையும் தயார் செய்து கொடுத்து விடுகிறேன்; அவர்கள் வாள் வீச்சில் அற்புதமானவர்கள், வல்லவர்கள்;'' என்று ஆலோசனையும் தைரியமுங் கூறினார்;

தர்மாஹ் கூறியவற்றை அமைதியுடன் கேட்டுக் கொண்டிருந்த இமாம் அவர்கள், அவரை நோக்கி, ''இறைவன் தங்களுக்கும் தங்களைச் சார்ந்தவர்களுக்கும் நன்மையைச் செய்வானாக! உங்கள் அழைப்புக்கு மிகுந்த நன்றி: ஆனால், அவர்களுக்கும் (ஹுர்ருக்கும்) நமக்குமிடையில் ஓர் உடன்பாடு (இப்னு ஜியாத், எஜீத் இவர்களின் பதில்களுக்காகத்தாமதித்திருப்பது) காணப்பட்டிருக்கிறது; அவர்கள் எங்களை வளைத்துக் கொண்டிருக்கும் நிலையில் நாங்கள் ஒரு அங்குலம் கூட வேறுதிசையில் அடி எடுத்து வைக்க முடியாது; விஷயம் எதில் போய் முடியுமோ இறைவனே அறிவான்!'' என்று கூறி முடித்தார்கள்;

இதனைக்கேட்ட தர்மாஹ், 'அப்படியாயின், தங்கள் நோக்கப்படியே காரியம் நடக்கட்டும்; நான் எனது கிராமத்திற்குச் சென்று எனது குடும்பத்தார்களைச் சந்தித்துவிட்டு, தங்கள் உதவிக்காகத் திரும்பி வந்து விடுகிறேன்,' என்று கூறி விடைபெற்றுச் சென்றார்; சில தினங்களில் அவர் திரும்பி வந்த வழியில் இமாம் ஹுஸைன் அவர்கள் தர்ம யுத்தத்தில் வீர சுவர்க்கம் புகுந்ததைக் கேள்வியுற்று ஆற்றொணாத் துயரமடைந்தார்;

**கனவு :**

அதீபுல் ஹஜானத் என்னும் ஸ்தலத்திலின்றும் புறப்பட்ட இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின் 'காபிலா' கஸ்ரெ பனீமகாத்தில் என்னும் இடத்தில் வந்து தங்கியது. தாம் மரணத்தின் பாதையில் சென்று கொண்டிருப்பது இமாம் அவர்களுக்குத் தெற்றெனப் புலனாகியது.

இரவில் அங்கு நித்திரை கொண்டிருக்கும் நேரத்தில் இமாமவர்கள் திடீரென, "இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன், அல்ஹம்துலில்லாஹி ரப்பில் ஆலமீன்" என மும்முறை மொழிந்து கொண்டு விழித்தெழுந்தார்கள். அருகில் படுத்திருந்த அன்பு மகன் ஜைனுலாபிதீன் (அலி அக்பர் எனவும் கூறுகின்றனர்) 'என்னருமைத் தந்தையே! தாங்கள் ஏன் இவ்வாறு சொல்லிக்கொண்டு எழுந்தீர்கள்?' என வினவினார். அதற்கு இமாம் அவர்கள், "நான் நித்திரையிலிருக்கும்போது கனவில், ஒருவர் குதிரையில் சவாரி செய்து போய்க் கொண்டிருக்கிறார்; அவர், 'மக்களெல்லாம் வந்துகொண்டிருக்கிறார்கள், மரணமும் அவர்களைப் பின்தொடர்ந்து வருகிறது' எனக் கூறிக்கொண்டே செல்கிறார்; இக்கனவு நம் மரணத்துக்கு முன்னறிவிப்பாகும்," என பதில் கூறினார்கள். இதைக் கேட்ட சிம்ம மனம் படைத்த தீரக் குமாரராம் ஜைனுலாபிதீன், "தந்தையே, தங்களை அல்லாஹ் அக்கொடிய வேளையினின்றும் காப்பானாக! நாம் சத்தியத்தைக் கடைப்பிடிக்கும் மார்க்கத்தில் தானே இருக்கிறோம்?" என்று மீண்டும் வினவினார். அதற்கு இமாமவர்கள், "ஆம், மகனே! இறைவன் மீது ஆணையாக, நாம் சத்தியப் பாதையில்தான் இருக்கிறோம்," என்றார்கள். "அப்படியானால் நாம் மரணமடைவதில் பாதகமொன்றுமில்லையே!" என்றார் ஜைனுலாபிதீன். பொழுது புலர்ந்தபின் இமாமவர்களின் 'காபிலா' கூடாரம் பெயர்த்துப் புறப்பட்டது.

பொருளடக்கம்



## இப்னு ஜியாதின் கட்டளை

கஸ்ரெ பனீ மக்காத்தில் என்னும் இடத்திலின்றும் புறப்பட்ட இமாம் அவர்களின் காபிலா நினேவா என்னும் இடத்தில் வந்து கூடாரமடித்துத் தங்கியது; ஹுர்ரின் படையும் பின் தொடர்ந்து சென்றது; அப்பொழுது கூஃபாவிலிருந்து ஆயுதந்தரித்த ஒரு வீரன் குதிரைமீது வந்தான்; இமாம் அவர்களைக் கண்டதும் முகத்தைத் திருப்பிக் கொண்டவனாய் ஹுர்ரை நெருங்கி, 'சலாம்' கூறி, அவன் சுமந்து வந்த கடிதமொன்றைக் கொடுத்தான்; அது இப்னுஜியாத், ஹுர்ரின் கடிதத்திற்கு எழுதிய பதிலாக இருந்தது; அதன் வாசகம் :

''இக்கடிதம் கண்டபின் ஹுஸைனை எவ்விடத்திலும் தரிக்கவிடாது, தண்ணீர் வசதி, புற்பூண்டு, கட்டிடங்கள் எதுவுமில்லாத திறந்த பொட்டல் வெளியில் கொண்டுபோய்ச் சேர்க்கவும்; உறுதியான கோட்டைகளுள்ள இடத்திலும் செழிப்பான பிரதேசங்களிலும் பாளையமிறங்க அனுமதிக்கக் கூடாது; எனது இந்தத் தூதன் உம்மைப் பின்தொடர்ந்து வருவான்; என் கட்டளையை எந்த அளவு நிறைவேற்றுகிறீர் என்பதை அவன் உன்னிப்பாகக் கவனிப்பான்,'' என்பதாக இருந்தது;

கடிதத்தின் வாசகத்தை ஹுர், இமாமவர்களுக்குப் படித்துக் காட்டிவிட்டு 'இனி நான் தங்களைப் பசுமையற்ற தண்ணீர் வசதியில்லாத, வெட்ட வெளியிலேதான் தரிப்பதற்கு அனுமதிக்க முடியும்,' எனக் கூறினான்: அதற்கு இமாமவர்களின் 'காபிலா'வைச் சார்ந்தவர்கள், ''எங்களை விட்டுவிடும்; நாங்கள் எங்களிஷ்டப்படி நினேவா, காலிரிய்யா என்ற இடத்திலோ, அல்லது ஷக்கீகா என்னுமிடத்திலோ எங்கள் கூடாரங்களை அடித்துத் தங்கிக் கொள்கிறோம்', என்று கூறினர்: அதற்கு ஹுர் ''நான் இப்னுஜியாதின் உத்தரவுக்கு மாற்றமாக நடக்க அனுமதிக்க மாட்டேன்; ஏனெனில், எனது கண்காணிப்புக் காபிலாவில்

வேவுகாரர்கள் பலர் இருக்கின்றனர்,'' என்று கூறி விட்டான்;

ஹுர்ரின் இந்த முரண்பட்ட கருத்தைக் கண்ட ஸுஹைர் பின் கைன் என்பார், இமாமவர்களிடம், 'பின்னால் வரும் பெரும் படையுடன் நம்மை ஒப்பு நோக்கும்போது ஹுர்ரின் இச்சிறு படையுடன் பொருதி எளிதில் வெற்றி கண்டுவிடலாம் போலிருக் கிறதே!' எனக் கூறினார்; அதனைச் செவிமடுத்த இமாம் அவர்கள் 'நாமாகப் போரைத் துவங்குவது முஸ்லிம்க ளுக்கு அழகல்ல; ஆனதால், போரை நான் ஆரம்பிக்க மாட்டேன்,' எனக் கூறிவிட்டார்கள்; 'அவ்வாறாயின் எதிரே தென்படும் கிராமத்திற்காயினும் சென்று அங்குள்ள கோட்டையை நாம் கைவசப்படுத்திக் கொள் வோம்; அது ஃபுராத் (யூப்ரடீஸ்) நதிக்கரையிலுள்ளது; நாம் அங்கு செல்வதற்கும் எதிர்ப்புக் காட்டுவார் களாயின் அவர்களை எதிர்த்துப் போராடுவோம்;' இவ்வாறு ஸுஹைர் மாற்று யோசனை தெரிவித்தார்; 'அந்தக் கிராமத்தின் பெயரென்ன?' என இமாமவர் கள் கேட்க, 'அக்ர்' என கூறினார்கள்; 'அக்ர்' என்றால் 'முள்' அல்லது 'கொல்' அல்லது 'பழம் காய்க்காதது' என்று பொருள்; உடனே இமாமவர்கள் 'அக்ரை' விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறேன், என்று கூறினார்கள்;

காபிலாவை அப்பால் செலுத்திக் கொண்டுபோய் நினேவா என்ற இடத்தருகேயுள்ள ஒரு வறண்ட பாலையில் வந்து நின்று கொண்டு, அவ்விடத்தின் பெய ரென்ன வெனக்கேட்டார்கள்; 'கர்பலா' (கர்புன்- துன்பமும், வ பலாவுன்-சங்கடமும்) என்றதும் அங்கு கூடாரங்கள் அடித்துத் தங்குமாறு தங்கள் 'காபிலா' வுக்குக் கட்டளையிட்டார்கள்; அன்று ஹிஜ்ரி 61 முஹர்ரம் மாதம் 2-ம் நாள் வியாழக்கிழமையாகும்;

ஒரு புறம் இங்கு, ரசூலுல்லாஹ்வின் குடும்பத்தார் எளிய நிலையில் பாலைவனத்தில் தங்கியுள்ளனர்; மறு

புறம் கூஃபாவில் இச்சிறிய புனிதக் குடும்பத்தாரை அழித்தொழிப்பதற்காக அபாரமான ஏற்பாடுகள் நடைபெறுகின்றன.

## அம்ருப்னு ஸஃது

இந்நேரத்தில் தைலமீ என்னும் வர்க்கத்தார்கள் படைதிரட்டி தஸ்தபீ என்னும் பகுதியைக் கைப்பற்றிக் கொண்டனர்; எனவே, தைலமீகளை அங்கிருந்து விரட்டுவதற்காக அம்ருப்னு ஸஃத் பின் அபீவக்காஸ், ரை நகரின் கவர்னராக நியமனம் பெற்று தமது சைன்னியத்துடன் புறப்பட்டு ஹம்மாம் அஃயுன் என்னுமிடம் வரை சென்றுவிட்டார்.

இதற்கிடையே இமாம் ஹுஸைன் அவர்கள் கர்பலா வந்துள்ள தகவல் இப்னுஜியாதுக்குக் கிடைத்துவிட்டது. எனவே, இமாம் அவர்களுடன் போர் புரிவதற்குத் தைரியமிக்க ஒருவரை அவன் ஆராய்ந்ததில் இப்னு ஸஃதுதான் அதற்கு ஏற்ற நபராக அவனுக்குத் தீர்மானிக்க முடிந்தது. உடனே அவரையும் அவரது படையையும் திரும்பி வர உத்தர விட்டான். இப்னு ஸஃத் திரும்பி வந்ததும் அவரிடம் 'தைலமீகளின் விவகாரத்தை எளிதில் தீர்த்துவிடலாம்; முதன் முதலாக ஹுஸைனின் விஷயத்தைத் தான் முடிவுக்குக் கொண்டுவர வேண்டியுள்ளது. இக்காரியத்தை நீர் முடித்துவிட்டுப் பின்னர் கவர்னர் பதவியை ஏற்றுக்கொண்டு ரை நகரம் செல்லலாம்'' என்றான் கொடியோன் இப்னு ஜியாது.

இத்தீய காரியத்திலிறங்க முடியாதென இப்னு ஸஃத் மறுத்தார், 'அவ்வாறாயின், ரையின் கவர்னர் பதவி உமக்குத் தரப்படமாட்டாது' என்றான் இப்னு ஜியாத். பதவி ஆசை யாரை விட்டது. தாம் யோசித்து முடிவு கூறுவதாக இப்னு ஸஃத் அவகாசம் கேட்டார்; கொடுக்கப்பட்டது. தம் நண்பர்கள் பலரையும் கலந்தார். ஒருவராவது இக்கொடிய செய்கைக்கு ஆதரவளிக்கவில்லை. இவ்விஷயம் இப்னு ஸஃதின் சகோதரி மகன் ஹம்ஸா பின் முகீராவுக்குத் தெரிந்ததும், அவர்

ஓட்டோடிச் சென்று, "என் மாமாவே! நான் இறைவன் மீது பிரமாணமிட்டுக் கூறுகிறேன்; தாங்கள் ஹுஸைனுக்கு எதிரியாகச் சென்று அல்லாஹ்வுக்குப் பாவியாக ஆகிவிடாதீர்கள்; நமது குடும்பத் தொடர்பைத் துண்டித்து விடாதீர்கள்; தங்களிடத்தி லிருக்கும் உலக சம்பத்துக்கள், அதிகாரங்கள் அனைத்தும் போய்விட்டாலும் பாதகமில்லை, நிரபராதி யான ஹுஸைனின் உதிரக்கறை உங்கள் கரங் களில் படியாது காத்துக் கொள்ளுங்கள்; அது பொல்லா தது, பாவமானது; இது மட்டில் உங்கள் நினைவி லிருக்கட்டும்' என்று கேட்டுக் கொண்டார்; இதைச் செவியேற்ற இப்னு ஸஃத் 'இன்ஷா அல்லாஹ், நீர் கூறிய யோசனைப்படியே காரியமாற்றுகிறேன்,' எனக் கூறினார்;

அப்துல்லாஹ் யஸார் என்பவரும் இப்னு ஸஃதுக்கு இவ்வாறான நல்ல வார்த்தைகள் கூறியபொழுது, "சரி" எனக் கூறிவிட்டுப் பின் கர்பலா செல்வதற்கே தீர்மா னித்துவிட்டார்; இந்தத் தமது முடிவை இப்னு ஜியா திடம் சென்று கூறி, 'சரி, தங்கள் கட்டளைப்படியே நான் நடந்து கொள்கிறேன்; ஆனால், நான் குறிப்பிடும் சில கூஃபா வாசிகளான தலைவர்களைத் தாங்கள் என்னுடன் அனுப்பவேண்டும்' என்று கேட் டார்; அதற்கு இப்னு ஜியாத், 'கூஃபாவின் தலைவர் களை நீர் தேர்ந்தெடுக்க வேண்டிய வேலை உமக்கில்லை; நீர் சொல்லுகிறபடி நான் நடக்க முடியாது; நான் உம்முடன் அனுப்பும் சைன்னியங்களுடனேதான் நீர் செல்லவேண்டும்; இது உமக்கு இஷ்டமில்லையாயின் அரசாங்கம் உமக்களித்த உத்தரவை ரத்து செய்து விடும்,' என்று கடுமையாகக் கூறினார்; பதவி ஆசை மேலோங்கவே-அது உந்தித் தள்ளவே- இப்னு ஸஃத் படைகளுடன் கர்பலா நோக்கிப் புறப்படத் தயாராகி விட்டார்.

மறுநாள் ஹிஜ்ரி 61 முஹர்ரம் பிறை 3-ல் வீரர் கள் நாலாயிரவருடன் இப்னு ஸஃத் நினேவா வந் தடைந்தார்; சிக்கல் நிறைந்த இப்பிரச்சினையை ஏ

படியாவது ஒருவித சுமுகமான முடிவுக்குக் கொண்டு வந்துவிடவேண்டும் என்ற எண்ணத்தில், பலரைத் தூது செல்ல அழைத்ததில் அனைவரும் இமாமவர் களைக் கூஃபா வரச் சொல்லிக் கடிதங்கள் எழுதியவர் களாக இருந்ததால், தூது செல்ல மறுத்துவிட்டனர்; இறுதியாக, நிதானப் போக்கும் நியாய புத்தியும் படைத்தவரான குர்ரா பின் ஃகைஸ் ஹன்லவீ என்ப வரை அனுப்பி, 'இமாம் அவர்கள் என்ன நோக்கத் தில் இங்கு வந்துள்ளார்கள்?' எனக் கேட்டறிந்து வரு மாறு கூறினார்; அவர் இமாம் அவர்களைப் போய்க் கண்டு விசாரித்தபொழுது, "உங்கள் நாட்டைச் சார்ந்தவர்கள் எம்மை வருமாறு கடிதங்கள் மூலமாக வும் தூதர்கள் வாயிலாகவும் அழைத்தார்கள்; அதன் காரணமாகவே யாம் இங்கு வந்துள்ளோம்; நாம் வந்திருப்பது உங்களுக்கு விருப்பமுடையதாய் இல்லை யாயின் நாம் வந்த இடத்திற்கே திரும்பிச் செல் வோம்," என்று பதில் கூறி அனுப்பினார்கள். சென்ற தூதுவர் வந்து கூறிய பதிலைக்கேட்டு இப்னு ஸஃத் மகிழ்ச்சியும் ஆறுதலும் அடைந்தவராய், உடனே இவ்விஷயத்தை இப்னு ஜியாதுக்குக் கடிதமூலம் தெரி யப்படுத்தி அவனின் பதிலுக்காகக் காத்திருந்தார்;

பதில் வந்தது: என்ன பதில் வந்தது?

'உமது கடிதம் கிடைத்தது; அதில் கண்ட விஷ யங்களைப் புரிந்துகொண்டேன்; நம்முடைய வலையில் வந்து வீழ்ந்த பிறகு திரும்பிச் செல்வதற்கோ, தப் பித்து ஓடுவதற்கோ இது தருணமல்ல.

'ஹுஸைனிடமும் அவரைச் சேர்ந்தவர்களிடமும் முதலாவதாக யஜீதுப்னு முஆவியாவைக் கலீபாவாக ஏற்றுக் கொண்டதற்கான 'பைஅத்'தைப் பெற்றுக் கொள்ளவும்; பின்னர், அவர் விஷயத்தில் நாம் எவ் வாறு நடந்து கொள்ளலாம் என்பது பற்றிக் கவனிப் போம்.'

இதைத் தவிர வேறு எவ்வித பதிலை அக்கொடி யோன் இப்னுஜியாதிடமிருந்து நாம் எதிர்பார்க்க

முடியும்? பதிலைப் படித்துப்பார்த்த இப்னு ஸஃத் அவனுக்கு அமைதியான மார்க்கத்தைக் கடைபிடிக்கும் நோக்கமில்லை என்பதை விளங்கிக் கொண்டார்.

## தண்ணீர்த் தடை

இப்னுஜியாதின் இந்த பதிலைத்தொடர்ந்து, இப்னு ஸஃதுக்கு மற்றொரு ஆக்ஞையும் வந்தது. அதில், 'அநியாயத்துக்கும் அக்கிரமத்துக்கும் உள்ளான அமீருல் மூமினீன் ஹலரத் உதுமான் (ரலி) அவர்களுக்கு செய்யப்பட்டதுபோல் ஹுஸைனுக்கும் அவரைச் சார்ந்தவர்களுக்கும் ஒரு சொட்டுத் தண்ணீர்கூடக் கிடைக்காதவாறு தடைசெய்ய வேண்டும்,' எனக் கண்டிருந்தது.

மன்னவன் எளிதை யேற்கும்
வரையவர் பிரிந்து செல்ல
என்னதான் வரினும் நீயங்
கிடமளித்திடலாகாது
அன்னவர்க் கருந்த நீரும்
அகப்படா வண்ணம் காப்பாய்
என்னவோர் முடங்க லீந்தான்
ஏற்றது கண்டு நொந்தான்.

இப்னு ஸஃத் பாவம் என் செய்வார்? உத்தரவுக்குக் கீழ்ப்படியாவிட்டால் ரையின் கவர்னர் பதவி அல்லவா கிடைக்காது போகும்! இந்த அச்சத்தில் தம் வீரர்களில் 500 பேரை அனுப்பி ஃபுராத் நதிக் கரை நெடுகிலும் காவல்புரியச் செய்தார். இது ஹிஜ்ரி 61, முஹர்ரம் 7-ம் நாளில் நிகழ்ந்தது. பொல்லாப் புலையனை அப்துல்லாஹ் பின் அபீஹஸீன் என்பவன் தாங்கள் தண்ணீரைத் தடைசெய்துவிட்டதாக இமாமவர்களைப் பார்த்துக் கிண்டலும் கேலியுமாகப் பேசினான்.

இமாம் அவர்களும் குடும்பத்தாரும், மற்றவர்களும் தண்ணீர் எடுத்துவர இயலாமல் தத்தளித்தனர். எனவே, தங்களின் மாற்றாந்தாய்ச் சகோதர

ரான அப்பாஸ் பின் அலீ தலைமையில் 30 குதிரை வீரர்களையும் 20 காலாட் படையினரையும் அனுப்பி ஃபுராத்திலிருந்து தண்ணீர் எடுத்துவரச் சொன்னார்கள். அவர்களைத் தண்ணீர் எடுக்காது அங்கு காவல் காத்து நின்ற அம்ரு பின் ஹஜ்ஜாஜ் என்பவன் தடை செய்ய முன் வந்தான். அவனை அப்பாஸ் பின் அலீ அவர்கள் விலக்கித் தள்ளிவிட்டு காலாட் படையினர் 20 பேரையும் தங்கள் துருத்திகளில் தண்ணீர் நிரப்பிக் கொள்ளுமாறு செய்து அனைவரும் வெற்றிகரமாகத் திரும்பி வந்தனர். அங்கே சிறியதொரு மோதலும் நடந்தது.

## இமாம் - இப்னு ஸஃத் சந்திப்பு

அன்று மாலை இமாமவர்கள் இப்னு ஸஃதுக்கு ஆளனுப்பி நள்ளிரவில் தங்களை வந்து சந்திக்குமாறு கூறச்சொன்னார்கள். அதன்படி அன்று குறிப்பிட்ட நேரத்தில் இருவரும் இருபது, இருபது வீரர்களுடன் வந்து சந்தித்து வீரர்களை ஓரிடத்தில் தனியாக இருக்கச் சொல்லிவிட்டு உரையாடலைத் துவங்கினர். பேச்சு வார்த்தை நீண்ட நேரம் நடைபெற்றது. இன்னது தான் பேசினார்கள் என்பது எவருக்கும் நிச்சயமாகத் தெரியாது. இருவருமே வெளியிட்டுக் காட்டவில்லை. சூசகமாகவும் தெரிந்து கொள்ள முடியவில்லை. கூறப் படுவதெல்லாம் வெறும் யூகம்; அனுமானந்தான்.

முதலாவது: "நாம் இருவரும் படைகளை இங்கேயே விட்டு விட்டு எஜீது இடம் செல்வோம்," என்று இமாமவர்கள் கூற அதற்கு இப்னு ஸஃத், "அப்படிச் செய்வேனாயின் எனது வீடு வாசல் இடித்துத் தள்ளப் படுவதுடன் என் உடைமைகள் அனைத்தும் பறிமுதல் செய்யப்பட்டு விடுமே!" என்று அச்சந் தெரிவித்ததாகவும், அதற்கு இமாம் அவர்கள், "இவற்றைவிட நல்ல வீட்டையும், ஹிஜாஸிலுள்ள என் சொத்துக்களில் அவற்றிற்கு ஈடானவற்றையும் தருகிறேன்," எனக் கூறியதாகவும், அதற்கு இப்னு ஸஃத் ஒப்புக் கொள்ளவில்லை என்றும் கூறப்படுகிறது.

இரண்டாவது: இமாம் அவர்கள், (1) "நான் எங்கிருந்து வந்தேனோ அங்கு திரும்பிச் செல்ல அனுமதி யுங்கள்; அல்லது (2) யஜீதுடன் நான் நேரில் கண்டு பேசி ஒரு முடிவு செய்ய விட்டுவிடுங்கள்; அல்லது (3) அல்லாஹ்வின் பரந்த பூமியில் நான் எங்கேனும் போய்த் தங்கி இஷாஅத் பணி செய்து கொள்கிறேன்; மக்கள் தங்கள் விருப்பப்படி எதையேனும் தீர்மானம் செய்து கொள்ளட்டும்," என்பதாகும்.

இமாமவர்கள் கூறிய இம்மூன்று சமரச கோரிக்கை களையும் இப்னு ஸஃத் தாமே இப்னு ஜியாதுக்கு எழுதினார். அதில்,

"இறைவன் குழப்பத்தை அடங்கச் செய்திருக்கிறான்; வேற்றுமைகள் அகன்றுள்ளன; ஐக்கியத்தை வலுவடையச் செய்துள்ளான். உம்மத்தின் நிலையைச் சீர்படுத்தியிருக்கிறான்! இமாம் ஹுஸைன் (ரலி) இம் மூன்றில் ஒன்றை ஏற்கத் தயாராயிருப்பதாக என்னிடம் வாக்களித்துள்ளார்கள்; இதில் உங்களுக்கும் லாபம் இருக்கிறது," எனக் கூறியிருந்தார்.

இப்னு ஸஃது, இமாம் ஹுஸைன் (ரலி) இருவரின் மூல பிதா அப்துமுனாபாக இருப்பதின் காரணமாக இருவரும் நெருங்கிய உறவினராகின்றனர். இந்த விவகாரத்திற்கு முன்பாக இருவரும் நெருங்கிய நேச பாவத்துடனும் இருந்து வந்திருக்கின்றனர். நட்பு ஒரு பக்கம் கிடக்க, இமாம் அவர்கள் ரசூலுல்லாஹ் அவர்களின் இதயக்கனி பாத்திமா நாச்சியாரின் திருப் புதல்வர் என்ற வகையில் யாதொரு சம்பந்தா சம்பந்த மும் இல்லாமலேயே முஸ்லிமாகவுள்ள எவனும் இமாம் அவர்களுக்கு தீமையோ இன்னலோ விளைவிக்க முற்பட மாட்டானல்லவா? அப்படியிருக்கும் போது மேற்கண்ட விதமான பந்த பாசங்களையுடைய இப்னு ஸஃது இமாம் அவர்களுக்கு எதிராக நின்று இன்னல் செய்ய மனங் கொள்வாரா? எனவேதான், யுத்தமில்லாமல் இச் சிக்கலை முடிவுக்குக் கொண்டு வந்துவிடும் ஆர்வத்தில் இரு தடவை இப்னு ஜியாதுக்குக் கடிதங்கள் எழுதி

அனுப்பத் துணிந்தார்; நடவடிக்கை எடுக்காமல் நாளை யும் கடத்திக் கொண்டு வந்தார்.

## ஷிமார் இப்னு தில் ஜவ்ஷான்

இப்னு ஸஃதின் கடிதம் இப்னு ஜியாதுக்குக் கிடைத் தது. அவன் படித்துப் பார்த்தான். இப்னுஸஃத் எழுதிய நிபந்தனைகள் அவனுக்கு ஏற்புடையனவா யிருந்தன. இப்னு ஸஃதைப் பாராட்டி, 'நானும் இதை ஏற்கிறேன்" என வாய் விட்டும் கூறிவிட்டான். ஆனால் அருகிலிருந்த ஷிமாருப்னு தில் ஜவ்ஷான் இதனைப் பலமாக எதிர்த்த வனாய், "ஹுஸைன் நமது வலையில் வீழ்ந்து விட்டார்; இனித் தங்களுக்குக் கீழ்ப் படியாமல் இங்கிருந்து புறப் பட்டு விட்டால், மீண்டும் அவர் கண்ணியமும் பலமும் பெற்றுக் கொள்வார்; நீங்கள் வலு விழந்து விடுவீர் கள்; எனவே, அவர் கீழ்ப்படிந்து அமீருல் மூமினீன் எஜிதுக்கு விசுவாசப் பிரமாணம் செய்யாதவரை அவரை நம்முடைய பிடியிலிருந்து நழுவ விட்டு விடக் கூடாது; ஹுஸைனும் இப்னு ஸஃதும் பல இரவுகள் இரகசியங்கள் பேசியதாக எனக்கு நம்பகமான தகவல் கிடைத்திருக்கிறது," என்று கூறினான்.

இப்னுஜியாதுக்கு மனம் மாறி விட்டது; தில் ஜவ்ஷானுக்குக் கட்டுப் பட்டவனாகி விட்டான். எனவே, அவனது நோக்கப்படியே கடிதமொன்றை எழுதி அவனையே கொண்டு செல்லுமாறு அனுப்பி வைத்தான். அக்கடிதத்தில்,

"நீர் காலதாமதம் செய்ய வேண்டுமென்பதற் காக நான் உம்மை அங்கு அனுப்பவில்லை. மேலும் நீர் ஹுஸைனுக்குப் பரிந்து பேசிக்கொண்டிருக்க வேண்டு மென்பதற்காகவும், அவருடைய நன்மையைக் கோரி அவரைச் சுகமாகவும் சௌக்கியமாகவும் இருக்கும் படி செய்யவும், அவருடைய நலன்களைப் பாதுகாப்ப தற்காகவும் நான் உம்மை நியமிக்கவில்லை. இக்கடிதம் கண்டதும், என்னுடைய கட்டளையை ஹுஸைன் ஏற்றுக்கொள்வாராயின் அவருடன் போரி டாமல் என்னிடம் அழைத்து வரவும்; அவர் மறுப்பா

ராயின் உடனே போரைத் துவங்கவேண்டியது: ஏனெனில், அவர் நம்முடன் போரிட வேண்டுமென்பதற்காகவே இங்கு வந்துள்ளார் என்பதை நீர் புரிந்து கொள்ளவேண்டும்: இக்காரியத்தைச் செய்வதற்கு உமக்கு விருப்பமில்லாவிடில் உம்மிடமுள்ள சைனியங்களை இக்கடிதம் கொண்டுவரும் தில் ஜவ்ஷான் இடம் ஒப்படைத்துவிட்டு நீர் ஒதுங்கிக்கொள்ளவும்; இவ்வாறு நடந்துகொள்வதால் உமக்கு எவ்விதக் கஷ்டமும் நஷ்டமும் இல்லை,'' என வரையப்பட்டிருந்தது.

அத்தோடு, தில் ஜவ்ஷானிடம் இப்னுஜியாத் என்ற கொலை பாதகன், 'இப்னு ஸஃத் எனது கட்டளைப்படி நடந்துகொண்டால், நீர் அவருக்குக் கீழ்ப்படிந்து நடந்து கொள்ளவேண்டும்: இன்றேல், படையை உமது கைக்குக் கீழாக்கிக்கொண்டு ஹுஸைனின் தலையை வெட்டி என்னிடம் அனுப்பிவைத்து விடவேண்டும்: மேலும் எதிரிகளின் சடலங்களின்மீது நம் குதிரைகளைவிட்டும் மிதித்துச் சின்னாபின்னப்படுத்த வேண்டும்: நான் நேரில் வந்து அங்கு யுத்தம் செய்தாலும் இவ்வாறாகவே நடந்துகொள்வேன்: எனது கட்டளைப்படி நீர் நடந்து கொள்வீராயின் உமக்குப் பரிசுகளும் அன்பளிப்புகளும் வழங்கிப் பாராட்டுவேன்; இன்றேல், உம்மைப் பதவி நீக்கம் செய்யத்தான் நேரிடும்' எனவும் எச்சரித்தான்.

## தில் ஜவ்ஷான் யார்?

தில் ஜவ்ஷானுடைய அத்தை (தந்தையின் சகோதரி) உம்முந்நபீன் பின்து ஹராம் என்ற பெண்மணியை ஹலரத் அலீ (ரலி) அவர்கள் மணமுடித்து அவர் மூலம் அப்பாஸ் அப்துல்லாஹ், ஜஃபர், உதுமான் ஆகிய நால்வரும் பிறந்தனர்: இவர்கள் இப்பொழுது இமாம் ஹுஸைன் அவர்களுடன் இருந்து வந்தனர். கர்பலாவில் போர் நிகழ்ந்தால் தன் அத்தை மக்களான அந்நால்வரும் காப்பாற்றப்பட வேண்டுமே என்பதற்காகத் தான் புறப்பட்டு வரும்பொழுது இப்னுஜியாதிடம் அவர்களுக்கு அபயம் பெற்று வந்தான் இவன்.

இவ்விஷயத்தைத் தன் பணியாள் கஜ்மான் என்பவன் மூலம் அந்நால்வருக்கும் சொல்லி அனுப்பினான். அதனைச் செவிமடுத்த அவர்கள், 'அடா, கைசேதமே! ரசூலுல்லாஹ்வின் திருப் பேரரான எங்கள் சகோதரர் ஹுஸைனுக்கில்லாத பாதுகாப்பு எங்களுக்கு என்ன தேவை! இப்னு ஸிமிய்யாவின் (இப்னு ஜியாதின்) பாதுகாப்பைக் காட்டினும் அல்லாஹ்வின் பாதுகாப்பு எங்களுக்கு மிக்க மேலானதாகும் என்பதை எங்கள் மாமன் மகன் தில் ஜவ்ஷானுக்குக் கூறிவிடு.'' என வந்தவனிடம் கூறி அனுப்பிவிட்டார்கள்.

இப்னு ஜியாதின் கடிதத்தை இப்பொழுது தில்ஜவ்ஷான், இப்னு ஸஃதிடம் கொண்டு வந்து கொடுத்தான். கடிதத்தைப் படித்துப் பார்த்துவிட்டு அவர், தில் ஜவ்ஷானை நோக்கி, "உமக்குக் கேடுகாலம் வரட்டும்; நீர் என்ன விஷயத்தை என்னிடம் கொண்டு வந்தீரோ அதற்கும் கேடுகாலம் வரட்டும். அல்லாஹ்வின்மீது பிரமாணமாகக் கூறுகிறேன். நான் இப்னு ஜியாதுக்கு எழுதிய விஷயங்களையெல்லாம் அவர் ஏற்றுக் கொள்ளாமற் போனதற்கு நீர்தான் காரணம் என நான் உறுதியாக எண்ணுகிறேன். சுமுகமான ஒரு வழியை உண்டாக்கலாம் என நான் மிகவும் பிரயத்தனம் எடுத்தேன்; ஆனால், எல்லாம் வீணாகி விட்டது. அதற்குக் காரணம் நீராகவே இருப்பீர் என எனக்குத் தோன்றுகிறது. இமாம் ஹுஸைன் எஃகு போன்ற இருதயம் படைத்தவர். அப்படிப் பட்டவரா இப்னு ஜியாதின் கட்டளைக்குத் தலைவணங்கு வார்? அதை ஏற்றுக் கொள்வாரா? அது முடியவே முடியாது. அவ்வாறு எதிர்பார்ப்பது சுத்த அபத்தம்.''

இப்னு ஸஅதின் இவ்வார்த்தைகளைக் கேட்ட தில் ஜவ்ஷான், 'நீர் சொல்வது சரிதான். நீர் இப்பொழுது ஹுஸைனுடன் போர் தொடுக்கப் போகின்றீரா? இல்லையா? அவ்வாறு செய்ய உமக்குப் பிரியமில்லாவிடில் உம் கீழுள்ள படைகளையெல்லாம் கவர்னரின்

கடிதத்தில் கண்டபடி என் வசம் ஒப்படைத்துவிடும்; நான் ஒரு கை பார்த்துக் கொள்கிறேன்' என்று எதிர் சவால் விடுத்தான்.

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் இப்னு ஸஅத் பெரும் மனக் குழப்பத்தில் சிக்குண்டார். செய்வதின்னதென்றறியாது திகைத்தார். ரையின் கவர்னர் பதவி அவரைக் கண்சிமிட்டி அழைத்தது. பகுத்தறிவைப் பறிகொடுத்தார். தில் ஜவ்ஷானை நோக்கி, 'நீர்தான் இக்காரியத்தைச் செய்ய வேண்டுமென்பதில்லை; நானே இக்காரியத்தைச் செய்து முடித்துவிடுகிறேன்; நீர் காலாட்படைகளை மட்டும் கவனித்துக் கொள்ளும்' என்று கூறினார். தில் ஜவ்ஷான் நிம்மதி அடைந்தான்.

## முஹர்ரம் 9-ம் நாள்

அன்று அஸ்ருத் தொழுகைக்குப் பின் சில வீரர்களுடன் இப்னு ஸஅத், இமாம் ஹுஸைன் அவர்கள் தங்கியிருக்கும் இடத்துக்கு வந்தார். இமாம் அவர்களும் அவரைச் சந்திக்கும் எண்ணத்தில் புறப்படத் தயாரானார்கள். ஆனால் சகோதரர் அப்பாஸ், 'தாங்கள் போக வேண்டாம், நான் அவரைக் கண்டு பேசி வருகிறேன்' எனக் கூறி, 20 குதிரை வீரர்களுடன் சென்றார். அங்கு சென்றதும் இப்னு ஸஅத், இப்னு ஜியாதின் கடிதத்தைப் படித்துக் காண்பித்தார். அதனைச் செவியேற்ற அப்பாஸ், தம் சகோதரரிடம் விஷயத்தைக் கூறி பதிலறிந்து வந்து சொல்லுவதாகக் கூறிவிட்டு, இமாம் அவர்களிடம் வந்து இப்னு ஜியாத் போர் நடத்துமாறு உத்தரவிட்டிருப்பதை எடுத்துக் காட்டினார். இதைக் கேட்ட இமாமவர்கள் அப்பாஸிடம், 'சரிதான்; இன்று இராப்பொழுது தாமதிக்குமாறு கேட்டுக் கொள்வீர். நான் எனது மனம் நிறைவுடைய இறைவனைத் தொழுது துஆ இறைஞ்ச வேண்டும். தொழுகையும் பாவமன்னிப்புகோருவதுமே எனது உயிரும் மூச்சுமாயிருக்கிறதென்பதை அந்த இறைவனே நன்கு அறிவான்,' என்று கூறியனுப்பினார்கள்.

இரவு பகல் எந்நாளும் இறையைப் போற்றி
என்பாவம் மன்னிப்பாய் எனவே கூவி
திருமறையை ஓதுவதும் தெளிவு சார்ந்த
தீன்மார்க்க அறமுறைகள் செய்து வாழ்ந்தார்.

அப்பாஸ், இப்னுஸஅதிடம் வந்து, 'இன்று நீங்கள் திரும்பிச் செல்லுங்கள் நாங்கள் இன்றிரவு விஷயத்தைக் கலந்து ஆலோசனை செய்கிறோம்; எங்களின் முடிவு என்ன என்பதை நாளைக் காலையில் உங்களுக்கு அறிவிக்கிறோம்,' என்றார். அப்பொழுது அருகிலிருந்த தில் ஜவ்ஷானிடம், 'உமது அபிப்பிராயமென்ன?' என இப்னு ஸஅத் வினவினார். 'தாங்கள் தலைவராக இருக்கும்பொழுது என்னை ஏன் கேட்கவேண்டும்?' என்றான் அவன். மற்றவர்களிடமும் அபிப்பிராயம் கேட்டார். அவர்களெல்லாம், 'ஓர் இரவு அவகாசமளிப்பதில் குற்றமேதுமில்லை' என்றனர். அதன் பின் தம் ஆட்களுடன் இப்னு ஸஅத் தமது கூடாரத்திற்குத் திரும்பி விட்டார்.

## இறுதி வேண்டுகோளும் இதயத்தை உருக்கும் பதிலும்

அவர்கள் திரும்பிச் சென்றபின் இமாமவர்கள் தங்களைச் சார்ந்தவர்களையெல்லாம் ஒன்றுகூட்டி வைத்துக்கொண்டு, இவ்வாறு கூறினார்கள்:—

"'நான் ஆண்டவனை அதிகம் துதிக்கிறேன், சுகத்திலும் துக்கத்திலும் அவனுக்கு நன்றி செலுத்துகிறேன்; இறைவா! எங்களை நபித்துவத்தைக் கொடுத்து மேன்மைப்படுத்தினாய்; எங்கள் செவியில் உண்மையை ஒலிக்கும்படிச் செய்தாய்; உண்மையைக் காணுமாறு செய்தாய்; எங்கள் இருதயங்களைத் துலக்கி வைத்தாய்; குர்ஆனை எங்களுக்குக் கற்றுக் கொடுத்தாய்; மார்க்க விஷயத்தில் விளக்கத்தை அளித்து அருள்புரிந்தாய். எனவே, உன் நன்றியறிதலுள்ள அடியார்களுள் எம்மைச் சேர்த்து வைப்பாயாக! உன்னுடைய நண்பர்களைக் காட்டினும் வேறு நண்பர்கள் நல்லவர்களாய்த் தோன்றவில்லை; உன்

ளைச் சார்ந்தவர்களின் குடும்பத்தார்களைக் காட்டி லும் வேறு குடும்பத்தார்கள் நல்லவர்களாய் எனக்குத் தோன்றவில்லை.

"இங்கு குழுமியிருக்கும் உங்களுக்கெல்லாம் அல்லாஹ் எமக்காக நன்மை புரிவானாக! இங்கு சூழ்ந்திருக்கும் பகைவர்களின் பயனாய் என் இறுதி இன்றைக்கோ நாளைக்கோ வென்று நான் காத்துக்கொண்டிருக்கிறேன். எனவே, உங்களுக்கு என் மனப்பூர்வமான சந்தோஷத்துடன் கூறுகிறேன்; நீங்கள் இந்த நேரத்திலுங்கூடத் தாராளமாகத் திரும்பிச் சென்றுவிடலாம். நான் உங்களை நிந்திக்கவில்லை; நிந்திக்கவுமாட்டேன். இரவு நேரம் இதோ நெருங்கிவிட்டது; உங்களில் ஒவ்வொருவரும் என் குடும்பத்தார்களுள் ஒருவரைத் துணைக்கு அழைத்துச் செல்லுங்கள். அல்லாஹ் உங்களுக்கு நன்மையை அளிக்கப் போதுமானவன். வந்து சூழ்ந்திருக்கும் இவ்வபாயத்தினின்றும் அல்லாஹ் விடுதலையளிக்கப் போதுமானவன். நான் உங்களுக்கு இதை ஏன் சொல்லுகிறேனென்றால், இங்கு சூழ்ந்து நிற்கும் எதிரிகளெல்லாம் என்னைத்தான் தேடுபவர்களாய் இருக்கிறார்கள். எனக்குப்பின் வேறு எவரையும் தேடமாட்டார்கள். இது நீங்களெல்லாம் அறிந்த ஒரு விஷயம்."

இமாமவர்களின் இந்த உருக்கமான பேச்சைக் கேட்ட அங்கு குழுமியிருந்த உத்தமத் தியாகிகளாம் குடும்ப உறுப்பினர்களும், உறவினர்களும், நண்பர்களும், 'தங்களுக்குப்பின் நாங்கள் உயிர்வாழ வேண்டுமென்பதற்காகவா திரும்பிச் செல்ல வேண்டும்? அத்தகைய ஒருநாளை ஆண்டவன் எங்களுக்கு ஏற்படுத்தாதிருப்பானாக!" என்று ஒரு குரலெழுப்பிக் கூறினர்.

மீண்டும் இமாமவர்கள், முஸ்லிமின் குடும்பத்தினரான பனூஉகைல்களைப் பார்த்து, "சகோதரர் முஸ்லிம் ஒருவர் கொல்லப்பட்டதே உங்களுக்குப் போதுமானது. அதுவே, பெரிய நஷ்டமாகும். மேற்கொண்டும் நீங்கள் தியாகம் செய்ய வேண்டுமென்ற அவசியமில்லை. எனவே, நீங்கள் அனைவரும் தாராளமாகத்

திரும்பிச் செல்லலாம். உங்களுக்கு நான் மனப்பூர்வ மாக அனுமதியளிக்கிறேன்." என்றனர்.

ஷுஃபெ அபூதாலிப் கணவாயினுள் பெருமானா ருக்காக மூன்றாண்டு காலம் அஞ்ஞாதவாசம் புரிந்த பனூஹாஷிம் தியாகக் குடும்பத்தினர், தங்களின் குலக் கொழுந்தான இமாம் ஹுஸைன் அவர்களைத் தனிமை யில் விட்டுப் பிரிந்து செல்ல மனங் கொள்வார்களா? எனவே அவர்கள், "நாங்கள் திரும்பிச் சென்று மக்கள் முகத்தில் எப்படி விழிப்போம்? உங்களைக் கைவிட்டு துரோகம் செய்துவிட்டு வந்துவிட்டோம் என்று கூற மாட்டார்களா? உங்களுக்காக ஒரு அம்பையேனும் நாங்கள் எய்யவில்லை என்று நிந்திக்கமாட்டார்களா? உங்களுக்காக எங்கள் கரம் வாளேந்தவில்லை என்று வெறுத்தொதுக்க மாட்டார்களா? உங்கள் நிலை யாதா யிற்றோ வென்று கவலைப்பட மாட்டார்களா? எனவே, அல்லாஹ்வின் மீது ஆணை, நாங்கள் திரும்பிச் செல்லவே மாட்டோம். எங்கள் உயிர்களையும், உடைமைகளையும், குடும்பத்தினரையும் உங்களுக்காகவே தியாகம் செய் வோம். உங்களுடனேயே நாங்கள் யுத்தம் செய்து மடிவோம்! உங்களுக்கு ஏற்படும் முடிவே எங்களுக்கும் ஏற்படட்டும். உங்களுக்குப்பின் நாங்கள் உயிர் வாழ் வது வீணான காரியமாகும்," என மனங் கசிந்து கண் ணீர் உகுத்துக் கூறினர். இவர்களைப் போன்றே முஸ்லிம் பின் ஒளஸஜா அஸதியும், ஸஃதிபின் அப்துல்லாஹ்வும், ஸுஹைர் பின் கைனும் கூறி நின்றனர்.

இவ்வாறாக, ஹிஜ்ரி 61 முஹர்ரம் 9-ம் நாள் வியாழன் மாலை மறைந்து முஸ்லிம் உலக மக்களையெல் லாம் சோக சாகரத்துள் ஆழ்த்தி இரத்தக் கண்ணீர் வடிக்கச் செய்த பயங்கர சரித்திரம் படைத்த திடுக்க மும், நடுக்கமும் தரத்தக்க 10-ம் நாள் வெள்ளிக்கிழ மையின் முன்னிரவு ஆரம்பித்துப் படிப்படியாக நகர்ந்து கொண்டிருந்தது.

ஒருபுறம் இமாம் ஹுஸைன் அவர்கள் அல்லாஹ் வின் பேரொளியைப் பெறும் வணக்கத்தில் இரவைத்

கழிக்க வேண்டியவர்களாயிருந்தார்கள்; மறுபுறம் அல்லாஹ்வின் சத்தியப் பாதையில் தங்களின் இன்னுயிரைத் தியாகம் செய்வதற்குரிய முன்னேற்பாடுகளை செய்து முடிக்க வேண்டியவர்களாகவும் இருந்தார்கள்; இந்த வகையில் முதலாவதாக, தங்களைச் சார்ந்தவர்களின் கூடாரங்களையெல்லாம் ஒரு பக்கமாக மாற்றியமைக்கச் செய்து சீர்படுத்திவிட்டு, அவற்றின் பின்புறமாகக் குழிதோண்டி அதில் அக்கினியை வளர்க்கச் செய்து எதிரிகள் பின்கூட்டி வந்து தாக்க வழியில்லாமல் செய்தார்கள்;

இமாம் அவர்களின் மகனார் ஜைனுலாபிதீன் கூறுகிறார்:—

''என் தந்தையார் ஷஹீதாவதற்கு முந்திய இரவில் நான் உட்கார்ந்திருக்கும்போது, என் அத்தை ஜைனப் எனக்குச் சிகிச்சை அளித்துக் கொண்டிருந்தார்; அப்பொழுது என் தந்தை தம்முடைய தோழர்கள், எதிர்பாராத விதமாகத் தமது கூடாரத்தில் வந்து சூழ்ந்திருப்பதைக் கண்டார்கள். அவர்கள் இறைந்து ஓதுவது என் தந்தைக்கு இதமும் உற்சாகமும் அளித்தது; அந்நேரத்தில் ஹலரத் அபூதர் கிஃபாரி (ரலி) யின் அடிமை ஹுவய் என்பவர் வாளையும் ஆயுதங்களையும் தீட்டிக் கொண்டிருந்தார். இக்காட்சியினைக் கண்ணுற்ற என் தந்தையார்,

''காலமே, நீ நாசமாகக் கடவது! நீ எத்துணை விசுவாசமற்ற நண்பனாய் இருக்கின்றாய்? காலையிலும் மாலையிலும் எத்தனை பேர் உன் கரங்களால் கொல்லப் படுகிறார்கள்! காலம் எவருக்கும் சலுகை காட்டுவதுமில்லை, எவரிடத்திலும் பிரதிபலன் பெறுவதுமில்லை; அனைத்துக் காரியங்களும் அல்லாஹ்வின் கரத்திலேயே உள்ளன; உயிர்வாழும் ஒவ்வொருவனும் மரணத்தை நோக்கியே அடியெடுத்து வைக்கிறான்,'' என்ற பாடலைப் பாடினார்;

''ஒரு முறையல்ல மூன்று நான்கு முறை இதையே அவர் பாடிக் கொண்டே இருப்பதைக் கேட்ட எனக்குச்

சகிக்க முடியவில்லை; கண்கள் குளமாயின. இனித் துன்பம் அகலக் கூடியதாயில்லை என்பதை உணரலானேன். ஆனால் என் அத்தை இக்கவிதையைக் கேட்டதும் தம்மையும் மீறி அழத்தொடங்கி விட்டார். ஹாஜி கட்கங்களைத் தீட்டுவதையும் இடையிடையே மேற்கண்ட மனதை உருக்கும் பாடலை என் தந்தை பாடுவதையும் கேட்ட அவர் தாளாத் துக்கங்கொண்டு நிலை குலைந்தார்.

"இப்பொழுதே எனக்கு மரணம் வந்துவிட்டதா? ஆ, இது சமயம் என் அன்னை பாத்திமா இங்கில்லையே! என் தந்தை அலீ இங்கில்லையே! என் அண்ணன் ஹஸன் இங்கில்லையே! இவர்களெல்லாம் சென்று விட்டார்களே! அவர்களுக்கெல்லாம் பகரமாக எங்களைப் பாதுகாக்கும் ஏந்தலாக நீங்கள் ஒருவர்தானே இருக்கின்றீர்கள்" என்றவாறு பலவதையும் கூறிப் புலம்பினார்.

"என் அத்தையின் புலம்பலைக் கேட்ட என் தந்தையார், 'ஏ, சகோதரியே! அடக்கத்தையும், கௌரவத்தையும், அறிவையும் ஷைத்தானிடம் விட்டுவிட வேண்டாம்; நப்ஸும் ஷைத்தானும் நமது ஈமானையும் உறுதியையும் விஞ்சிவிடாதிருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். பொறுமையைக் கைக்கொள்,' என்று கூறினார்கள்.

"அதற்கு என் அத்தை, 'நான் எப்படிப் பொறுமையையும் அமைதியையும் கைக்கொள்ள முடியும்? நீங்கள் உங்கள் சொந்த இனத்தவர்களால் அல்லவா கொல்லப்படப் போகிறீர்கள்! இதில் யானே உங்களுக்காக முதலில் பலியாகத் தயாராயிருக்கிறேன்,' என்று மீண்டும் கண்ணீர் வடித்துக் கூறி நின்றார்.

"அதற்கு என் தந்தை, 'ஜைனபே! இறைவனின் நாட்டம் இப்படித்தான் இருக்கிறது. என்னைச் சற்று அமைதியாக இருக்க விட்டுவிடுவாயாக!' என்றார்கள்.

"இவ்வார்த்தைகளைக் கேட்டதும் அத்தை ஜைனப் தலையிலும் கன்னத்திலும் அறைந்து கொண்டு அதிக

மகிழ்கம் அழுதவராய், "சகோதரரே! தாங்கள் எங்களை விட்டுப் பிரிந்து விடுவீர்களோ என்று நினைக்கும்போது என் இருதயம் வெடித்துவிடும் போலிருக்கிறதே!" என்று கூறியதோடு மூர்ச்சையாகிவிட்டார்;

"மூர்ச்சையாகிக் கிடந்த தங்கள் சகோதரி முகத்தில் என் தந்தை சிறிது தண்ணீரைத் தெளித்து மூர்ச்சையைத் தெளிய வைத்தார்கள்; பின்னர் அருகில் அமர்ந்தவர்களாக,

"ஏ, என் அன்புச் சகோதரி ஜைனபே! அல்லாஹ்வுக்கு அஞ்சுவீராக! அவனைப் புகழ்ந்து ஆறுதல் பெறுவீராக! பூமியின் மீதுள்ள மனிதர்களும் மற்றனைத்து வஸ்துக்களும் என்றோ ஒரு நாளில் அழிந்துவிடக் கூடியவைகளாகவே இருக்கின்றன. வானவர்களும் நிரந்தரமாக உயிர் வாழ்ந்திருக்கப் போவதில்லை; வானம் பூமியிலுள்ள சகல வஸ்துக்களும் அழிந்து இறைவன் மட்டுமே எஞ்சி நிலைத்திருக்கக் கூடிய நாள் ஒன்று உண்டு என்பதை நீ அறியக்கடவாய்! விஷயம் இவ்வாறிக்க மரணத்தை நினைத்து இந்த அளவு கவலையும் பரபரப்பும் கொள்வானேன்? இதோ பார்! நம் அன்னையும், நம் தந்தையும் நம் சகோதரரும் என்னைவிட மேலானவர்களாயிருந்தார்கள். நம் பாட்டனாரான ரசூலுல்லாஹ் அவர்கள் நமக்கும் முஸ்லிம்கள் அனைவருக்கும் அழகிய முன்மாதிரியாக விளங்குகிறார்கள்; அவர்கள் அனைவரின் முன் மாதிரிகள் நமக்கு எதைப் போதிக்கின்றன? எந் நிலையிலும் நாம் பொறுமையுடனும் உறுதியுடனும் அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தை வேண்டி அவன்மீது அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டு இருந்துவர வேண்டும் என்பதைத்தானே? நீர் அவர்களின் முன்மாதிரியினின்றும் மனச்சாந்தியைப் பெற்றுக்கொள்வீராக!"

"அல்லாஹ்வின் மீது பிரமாணமாகக் கூறுகிறேன், நான் மரணமடைந்து விட்டால், ரசூலுல்லாஹ் அவர்களின் உபதேசத்துக்கு மாற்றமாக நடந்து கொள்ள வேண்டாம்; முகத்தில் அறைந்து கொள்ள வேண்டாம்; ஒப்பாரி வைத்து அழவேண்டாம்;

''இவ்வாறு என் தந்தை என் அத்தைக்குச் சமரி தானங்கள் கூறி சாந்தப்படுத்தினர்கள்,'' என்று ஜைனுல் ஆபிதீன் கூறுகிறார்.

அதன்பின் இமாமவர்கள் கூடாரத்தினின்றும் வெளியே வந்து தற்காப்புக்கு வேண்டிய சாதனங்களை யெல்லாம் சீர்படுத்தி அமைத்தார்கள்.

பின்னர், அவர்களும் அவர்களைச் சார்ந்தவர்களும் பொழுது விடியுமட்டும் தொழுகையிலும், திக்ரு வணக்கத்திலும், துஆ கேட்பதிலும், பாவமன்னிப்புக் கோருவதிலும் கடுமையாக ஈடுபட்டிருந்தார்கள்.

இரவு முழுவதும் எதிரிப் படையிலுள்ள குதிரை வீரன் ஒருவன் இமாம் அவர்களின் கூடாரங்களைச் சுற்றிக் கொண்டு கண்காணித்துக் கொண்டிருந்தான். இதனைக் கவனித்த இமாமவர்கள் உரத்த குரலில்,

''மாறு புரிவோரே, அவர்களை நாம் விட்டுப்பிடிப்பது அவர்களுக்கு நல்லதென நினைத்துக் கொள்ள வேண்டாம். அவர்களை நாம் விட்டுப் பிடிப்பதெல்லாம் அவர்களுடைய பாவம் அதிகமாவதற்கேயாம்! இறைவன் விசுவாசிகளை இதே நிலையில் வைத்திருக்கப் போவதில்லை: அவன் நல்லதைத் தீயதிலிருந்து பிரித்து வைப்பான்,'' என்னும் திருவசனத்தை ஓதினார்கள்.

இத்திருவசனத்தைக் காதில் கேட்ட எதிரிகளில் ஒருவன், ''கஃபாவினுடைய இறைவன்மீது ஆணை! நாங்கள்தான் நல்லவர்கள்; உங்களை அவன் எங்களிடத்திலிருந்து பிரித்தறிவிக்கப் போகிறான்,' என்று திமிராகக் கூறினான்.

## ஹிஜ்ரி 61, முஹர்ரம் 10-ம் நாள்

அன்று, கி. பி. 681 அக்டோபர் மாதம் 9-ம் நாள் வெள்ளிக்கிழமை அதிகாலை. ஆதவன் செங்குருதி தோய கீழ்வானிலிருந்து வெளிக்கிளம்பி தம் பயணத்தை நிமிடத்திற்கு 15 மைல்—மணிக்கு 900 மைல்—

வேகத்தில் வான்வீதியில் துவங்குகிறது. அன்று பகல் பொழுதை அவன் 12 மணி நேரத்தில், 10800 மைல்களைக் கணவேகத்தில் கடந்து சென்று முடித்துக் கொண்டு மேற்கு அடிவானைத் தொட்டு அஸ்தமித்துப் பள்ளி கொள்ளச் செல்ல வேண்டும். இந்த 12 மணி நேர இடைவெளிக்குள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களின் திருமேனியில் கிடந்து விளையாடிய திருப் பேரர், அண்ணலார் அவர்களின் இதயக்கனி பாத்திமா நாச்சியார் அவர்களின் மணி வயிறு பெற்றெடுத்த பாசமலர், மங்காச் சுடர்வீசும் மாசில்லா மாணிக்கம், ஆணழகு ஒளியொத்த மாவீரர், அறிவின் தலைவாயில், ஹலரத் அலீ கர்ரமல்லாஹு அவர்களின் அன்புத் திருமகனார் இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின், முடி ஆட்சியாகிய ஏதேச்சாதிகார ஆட்சியை எதிர்த்து மக்கள் ஆட்சியாகிய ஜனநாயக ஆட்சி நிலை பெறுவதற்குப் போராடிய வீரவரலாறு—இறுதித் தீர்ப்பு நாள் வரை ஏற்றம் பெற்று நிற்க வேண்டிய அந்தத் தியாக வரலாறு—நடந்து, முடிந்து சரித்திரத்தில் பொன்னெழுத்துகளால் பொறிக்கப் பெற்றுப் பேரொளி வீசிப் பிரகாசிக்க வேண்டியுள்ளது. அதனைக் கண்டு காண்போம்:—

'அன்று காலை பஜ்ருத் தொழுகைக்குப் பின் இப்னு ஸஅத் தம் 4000 வீரர்களைக்கொண்ட படையை நான்கு பிரிவாகப் பிரித்து நடத்திக்கொண்டு கர்பலா போர்க்களம் வந்து நின்றார். அதுபோல் இமாம் ஹுஸைன் அவர்களின் 32 குதிரை வீரர்களையும், 40 காலாட் படையினரையும், மொத்தம் 72 பேரைக் கொண்ட சிறிதினும் சிறியதான படை வந்து அதன் எதிரே நின்றது.

இமாம் ஹுஸைன் அவர்கள் யுத்த களம் செல்ல ஆயத்தமாகி வாகனத்தின் மீதேறிக் குர்ஆனைத் தங்கள் முன்பாக வைத்துக்கொண்டு இரு கரமேந்தி இவ்வாறு பிரார்த்தித்தார்கள்:

"இறைவா! எனது ஒவ்வொரு சங்கடத்திலும் எனக்கு நீ கை கொடுப்பவனாய், ஒவ்வொரு கஷ்டத்தின்

போதும் எனக்கு நீ துணை நிற்பவனாய், எனக்கு வந்த ஆபத்துகளுக்கெல்லாம் நீயே பாதுகாவலனாய் இருந்து வந்தாய். ஒரு சில விபத்துகளின்போது மனம் பலவீனமடைந்து விடுகிறது; வெற்றிக்கான ஏற்பாடுகளும் சாதனங்களும் குறைந்துவிடுகின்றன; சிநேகிதர்களென்போர் சிலர் கைவிட்டு விடுகின்றனர்; விரோதிகளோவெனில் வாயில் வந்தபடி மிகவும் நிந்தனை செய்கின்றனர்; எனினும், நான் இத்தகைய தர்ம சங்கடமான நேரங்களில் மற்றவர்களை யெல்லாம் விட்டு விட்டு உன்னையே பற்றிப் பிடித்து நிற்கிறேன். இத்தகைய குறைபாடுகளை யெல்லாம் உன்னிடமேதான் நான் தெரியப்படுத்தி இருக்கிறேன்; நீயே இத்தகைய கஷ்டங்களையெல்லாம் நிவர்த்தி செய்து எனக்கு உண்மையான ஆதரவாளனாக இருந்து வந்திருக்கின்றாய்; நீயே ஒவ்வொரு அருட்கொடைகும் எஜமானாக இருக்கிறாய்; ஒவ்வொரு நன்மைக்கும் சொந்தக்காரனாக இருக்கிறாய்; ஒவ்வொரு எண்ணத்துக்கும் அவாவுக்கும் நீயே முடிவானவனாக விளங்கி நிற்கின்றாய்,'' என்று இறைஞ்சினார்கள்.

இப்பிரார்த்தனையை முடித்துக்கொண்டு இமாம் அவர்கள் திரும்பினார்கள். அங்கே தில்ஜவ்ஷான் எதிரிப் படையிலிருந்து குதிரையின்மீது வந்து நின்று கொண்டிருந்தான். இமாமவர்களின் சிறிய படையை ஒரு முறை பார்த்தான். அங்கு கூடாரங்களுக்குப் பின்னே எரிந்துகொண்டிருந்த அக்கினியைக் கண்டதும், ''ஏ, ஹுஸைனே! கியாமத் வருவதற்கு முன்பே நீர் நெருப்பை ஏற்றுக்கொண்டுவிட்டீரா?'' என்று பெருங் குரலெடுத்துக் கேட்டான்.

இதனைச் செவிமடுத்த இமாமவர்கள், ''அட, இடையன் மகனே! நீ தான் நரகத்திற்கு அதிகப் பொருத்தமானவன்,'' என்றார்கள். அருகில் நின்ற முஸ்லிம் பின் ஔஸஜா என்பவர், ''இப்போது ஷிம்ரு (தில் ஜவ்ஷானை) எனக்கு நேர் பார்வையில் வசமாக நிற்கிறான்; தாங்கள் அனுமதியளித்தால், ஒரே அம்பில் அவன் உயிரைக் குடித்துவிடுகிறேன்,'' என்று

கேட்டார்; அதற்கு மனிதாபிமானம் மிக்க மாமேதை—மாவீரர்—இமாம் ஹுசைன் அவர்கள், "வேண்டாம்; முதன் முதலாக நாம் சண்டையை ஆரம்பித்தோம் என்று ஆகக்கூடாது," எனக் கூறித் தடுத்துவிட்டார்கள்;

## ஷாம்வாசிகளை நோக்கி

எதிரிப் படை மிக நெருங்கிவந்தபொழுது இமாமவர்கள் ஷாம் தேசப் படையணி அருகே சென்று தங்களின் கம்பீரமான உரத்த தொனியில், அவர்களை விளித்து,

"மக்களே! அவசரப் படாதீர்கள்; நான் கூறுவதைச் சற்று கேளுங்கள், நான் சிறிது விளக்கமாகக் கூறச் சந்தர்ப்ப மளியுங்கள்; நான் இங்கு ஏன் வந்தேன் என்பதற்கான காரணத்தையும் உங்களுக்குத் தெளிவு படுத்திவிடுகிறேன்; நான் கூறும் காரணம் நியாயமானதாகவும் உங்களுக்கு ஏற்புடையதாகவும் இருந்தால் எனக்கு நீதி செலுத்துங்கள்; அது உங்களுக்கு நற்பேறாக அமையும்; என்னை எதிர்ப்பதினின்றும் தவிர்ந்து கொள்வீர்கள்; என்னுடைய பேச்சை முழுமையாகக் கேட்டதன் பின்னரும் நான் கூறும் காரணத்தை நீங்கள் ஏற்க முடியாது போயின், நீங்கள் மேற்கொள்ள விருக்கும் காரியம்பற்றி உங்கள் கூட்டாளிகளுடன் கலந்து யோசித்துப் பாருங்கள்; அப்போது உங்கள் காரியம் எவருக்கும் மறைவான தாயிருக்காது. அதற்குப்பின் உங்கள் தீர்மானத்தை எனக்குப் பட்டவர்த்தனமாக அறிவித்து விடுங்கள், மேற்கொண்டும் நீங்கள் தாமதிக்க வேண்டிய தில்லை; சர்வ நிலைகளிலும் என் எஜமானனும் நண்பனுமான அந்த இரட்சகன் மீதே நம்பிக்கை கொண்டிருக்கிறேன்; அவனே நல்லோர்களின் பாதுகாவலன்," என்று கூறினார்கள்;

இவ்வாறு இமாமவர்கள் கூறிக்கொண்டிருக்கும் பொழுது கூடாரத்திலிருந்த சகோதரிகளும் திருக்

குமாரிகளுமான பெண்மணிகள் கோவெனக் கதறி அழ ஆரம்பித்துவிட்டனர். உடனே இமாமவர்கள் தங்கள் சகோதரர் அப்பாஸ் அவர்களையும் திருப்புதல்வர் அலீ அக்பரையும் அழைத்து, "அவர்களை யெல்லாம் அழா திருக்குமாறு செய்யுங்கள்; அவர்கள் அழ வேண்டியது இன்னும் அதிகம் பாக்கியிருக்கிறது," என்று கூறி அனுப்பினார்கள். அவர்கள் இருவரும் அவ்வாறே கூடாரத்துக்குள் சென்று சமாதானப்படுத்தி அழாது அமர்த்தி விட்டுத் திரும்பினர்.

இத்தருணத்தில் இமாமவர்கள் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களை நினைவு கூர்ந்தவர்களாய், "இறைவன் இப்னு அப்பாஸின் ஆயுளை நீடிக்கச் செய்வானாக!" என்றார்கள். இவ்வாறு கூறக் காரணம், இப்னு அப்பாஸ் அவர்கள், இமாமவர்கள் மக்காவிலிருந்து புறப்படும்பொழுது பெண்களையும் குழந்தைகளையும் உடனழைத்துச் செல்ல வேண்டாமென எவ்வளவோ தடுத்தும் அதனை இமாமவர்கள் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. இப்பொழுது பெண்களின் பரிதாப நிலையைப் பார்த்ததும் அவர் கூறியது அவர்களின் நினைவுக்கு வந்துவிட்டது.

இமாமவர்கள் மீண்டும் தமது பேச்சைத் தொடர்ந்தார்கள்:—

"மக்களே! எனது குடும்பத்தையும் அதன் தகுதியையும் நினைத்துப்பாருங்கள். உங்கள் நெஞ்சங்களையே நீங்கள் கேட்டுப் பாருங்கள்; என்னைக் கொல்லுவதும், என்னை அவமானத்துள்ளாக்குவதும் உங்களுக்கு அழகாயிருக்குமா என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். நான் உங்கள் திருநபியின் திருக்குமாரியான பெண்கள் நாயகி பாத்திமாவின் திருக்குமாரனல்லவா? பெருமானாரின் பெரிய தந்தையின் புதல்வர் அலீயின் மகனல்லவா? 'துல்ஜனாஹைன்' என்ற சிறப்புப் பெயர் பெற்ற ஹலரத் ஜஃபர் தய்யார் என் பெரிய தந்தையாரல்லவா? என் சகோதரரையும் என்னையும் குறித்துப் பெருமானார் (ஸல்) அவர்கள், 'இவர்கள் இருவரும்

சுவர்க்கத்து இளைஞர்களின் இருபெருந் தலைவர்கள்' என அருளிய பொன்மொழி உங்களின் நினைவுக்கு வர வில்லையா? நான் உண்மையைச் சொல்லுகிறேன்; நான் எப்பொழுதும் உண்மையே பேசுபவன். அல்லாஹ்வின் மீது ஆணையாக, எனக்கு விபரந் தெரிந்த நாள் முதல் இன்று வரை நான் பொய் பேசியதே கிடையாது.

''இவ்வாறிருக்க, நீங்கள் என்னை உருவிய வாளு டனு வரவேற்க விரும்புகிறீர்கள்? என் பேச்சில் உங்க ளுக்கு நம்பிக்கை இல்லையாயின், இன்று உயிருடனிருக் கும் நபித் தோழர்களான பெரியார்கள், ஜாபிருப்னு அப்துல்லாஹ் அன்ஸாரி, அபூஸயீத் குத்ரீ, ஸஹ்லு பின் ஸஃதுஸ்ஸாயிதீ, ஸைத் பின் அர்க்கம், அனஸ் பின் மாலிக் முதலியோரைக் கேட்டுப் பாருங்கள். அவர்கள் சொல்லுவார்கள் என்னைக் குறித்தும் என் சகோதர ரைக் குறித்தும் நபிகள் பிரான் யாது கூறி னார்களென்று. எனது இரத்தத்தைச் சிந்துவதி னின்றும் உங்களைத் தடுத்து நிறுத்த இது ஒன்றே போதாதா? அல்லாஹ்வின் மீது ஆணை! இப்பூவுலகிலே நபியுடைய திருப்புதல்வியின் மகன் என்னைத் தவிர வேறு யார் இருக்கின்றார்கள்? நானல்லவா நபிகளாரின் நேர் வாரிசு? என்ன? எவருடைய உயிரையும் பறித் தேனா? எவரையும் வெட்டி வீழ்த்தினேனா? எவருடைய பொருளையும் அபகரித்தேனா? பின்னர் ஏன் என்னை அழிக்க முன்வந்துள்ளீர்கள்? சொல்லுங்கள், நான் செய்த குற்றந்தான் என்ன?''

இமாமவர்கள் இப்படித் திரும்பத் திரும்பக் கேட் டார்கள். எவரும் எந்தவித பதிலும் கூறவில்லை.

இமாமவர்களின் பேச்சினூடே தில் ஜவ்ஷான் மட்டும் அடிக்கடி கேலியும் கிண்டலும் பேசிச் சிரித் துக் கொண்டிருந்தான். இதனைக் கண்ட ஹபீப் பின் மல்ஹர் என்பார், ''அடா, அறிவிலியே! இமாமவர்கள் கூறுவதை உன்னால் எப்படி விளங்கிக் கொள்ளமுடியும்? உன்னுடைய இருதயத்தைத்தான் அல்லாஹ் இருளாக்கி விட்டானே'' என்றார்.

## கூஃபா வாசிகளை நோக்கி

அப்பால், கூஃபாவின் பிரமுகர்கள் சிலரின் பெயர்களைக் கூவி அழைத்தவர்களாய், இமாமவர்கள்,

“ஏ, ஷீஷ் பின் ரூப்யீ! ஏ, ருஜ்ஹான் பின் அப்ஜர்! ஏ, கைஸ் பின் அஷ்கஷ், ஏ, எஜீத் பின் ஹாரித்! நீங்களெல்லாம் எனக்குக் கடிதங்கள் எழுதவில்லையா? ‘பழம் பழுத்துக் குலுங்குகிறது; நிலம் பச்சைப் பசேலென்றிருக்கிறது; நதிகள் பெருக்கெடுத்து ஓடுகின்றன; வீரமிக்க சைனியங்கள் தயாராக இருக்கின்றன; நீங்கள் உடனே புறப்பட்டு வாருங்கள்,’ என்றெல்லாம் நீங்கள் எழுதவில்லையா?” என்று இடித்துக் கேட்டார்கள். அப்போதுதான் அவர்கள் வாய் திறந்து “அவ்வாறெல்லாம் நாங்கள் எதுவும் எழுதவில்லையே!” என்று பதில் கூறினார்கள்.

அதனைக் கேட்டு ஆச்சரியமுற்ற இமாமவர்கள் “சுப்ஹானல்லாஹ்! ஆண்டவன் மகா தூய்மையாளன்; இது எவ்வளவு பெரிய பொய்! அல்லாஹ்வின் மீது பிரமாணமாக, நீங்கள்தான் எனக்கு இவ்வாறு எழுதினீர்கள்.” என்று கூறிவிட்டு. மீண்டும் உரத்தகுரலில் “ஏ, மனிதர்களே! நான் இங்கு வந்தது உங்களுக்குப் பிடிக்கவில்லையாயின், என்னை விட்டு விடுங்கள். நான் வந்த இடத்திற்கே திரும்பிச் சென்று விடுகிறேன்; அல்லது, பூமியின் அமைதியான ஏதேனுமோர் பாகத்தில் போய்த் தங்கிவிடுகிறேன்.” என்று சொன்னார்கள்.

இதனைக் கேட்டதும் கைஸ் பின் அஷ்கத் என்பவர், “உங்கள் சகோதரர் வார்த்தையை நீங்கள் ஏன் ஏற்றுக் கொள்ளக் கூடாது? ஏற்றுக் கொண்டால் உங்கள் விரோதமும் அபிப்ராய பேதமும் நீங்கிவிடுமே! பின்னர் அசம்பாவிதம் எதுவும் நிகழாதல்லவா?” என்று கூறினார். இதைச் செவிமடுத்த இமாமவர்கள்,

“நீரும் அவர் சகோதரர்தானே! உமது விருப்பமென்ன? பனூஹாஷிம் வம்சத்தார் முஸ்லிம் பின்

உகையின் கொலையோடு நில்லாது, மற்றவர்களின் இரத்தத்திற்கும் பழிக்குப்பழி கோரவேண்டுமென்று விரும்புகிறீர்?''

[தீர்க்க தரிசனமாக, உமய்யாக்களின் ஆட்சிக்குப் பின் அப்பாஸியாக்கள் (பனூ ஹாஷிம்கள்) ஆட்சிக்கு வந்தபொழுது உமய்யாக்கள் எவ்வாறு கருவறுக்கப் பட்டார்கள் என்ற விபரங்களைச் சரித்திரத்தில் காண லாம்.]

''அல்லாஹ்வின்மீது பிரமாணமாக, யான் மிக மிகக் கேவலமான ஒரு நிலையில் அவர் (யஜீது) கையில் என் கரத்தை வைக்கமாட்டேன்; ஓர் அடிமையைப் போல் அவரின் முன் வாக்குறுதிப் பிரமாணஞ் செய்து கொடுக்க மாட்டேன்'' என்று கூறி,

''நீங்கள் கல்லெறிந்து என்னைக் கொல்லுவதை விட்டும், உங்களுடைய இரட்சகனும் என்னுடைய இரட்சகனுமான (அல்லாஹ்வாகிய) அவனிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன். இறுதிக் கணக்கு நாளைக் கொண்டு நம்பிக்கைக் கொள்ளாமல் அகம்பாவம் படைத்து நிற்பவர்கள் எல்லாரினின்றும் உங்களுடைய இரட்சகனும் என்னுடைய இரட்சகனுமான அவனிடம் பாதுகாவல் தேடுகிறேன்,'' என்ற திருவசனத்தையும் ஓதிக் காண்பித்தார்கள்.

அதன்பின் இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் தங்கள் வாகனத்தினின்றும் கீழே இறங்கினார்கள்; ஷாம், கூஃபா வாசிகள் இமாம் அவர்களை முன்னோக்கி நெருங்கினார்கள்.

## ஸுஹைர் பின் கைன் பேச்சு

அவர்கள் வரும் நோக்கத்தை அறிந்த ஸுஹைர் பின் கைன் தம் குதிரையைச் செலுத்திக் குறுக்கே வந்து நின்று கொண்டு, கூஃபா வாசிகளை நோக்கி உரத்தக் குரலில்,

''ஏ, கூஃபாவாசிகளே! அல்லாஹ்வின் தண்டனைக் கும் வேதனைக்கும் அஞ்சுங்கள், ஒரு முஸ்லிம் தன்

சகோதர முஸ்லிமுக்கு நன்மையை எடுத்துக் கூற வேண்டியது கடமையாகும்; நாம் இதுகாறும் ஒருவருக்கொருவர் சகோதரராகவும், ஒரே மார்க்கத்தைப் பின்பற்றக் கூடியவர்களாகவும் ஒரே இனத்தைச் சார்ந்தவர்களாகவும் இருக்கிறோம். நம்முடைய வாட்கள் உறையினின்றும் வெளிவராதிருக்கும் மட்டும் யுத்தம் வராமல் தடுக்க நாம் ஒருவருக்கொருவர் உபதேசம் செய்ய உரிமையுண்டு; நம்மிடையே வாட்கள் மோதி விடுமாயின், பின்னர் நமக்கிடையேயுள்ள சகோதரத்துவமெல்லாம் பறந்து மறைந்து விடும்; உறவு அறுந்து நீங்களும் நாமும் இரு பிரிவினராகப் பிரிந்து விடுவோம். இதோ பாருங்கள், இது சமயம் உங்களையும் எங்களையும் ரசூலுல்லாஹ் அவர்களின் குடும்பத்தார் விஷயத்தில் இறைவன் சோதிக்கிறான்; நாம் அவர்களை எந்த முறையில் நடத்துகிறோம் என்பதை அவன் காண விரும்புகிறான்.

''எனவே, நீங்களெல்லாம் ரசூலுல்லாஹ் அவர்களின் குடும்பத்தாருக்கு ஆதரவாக மாறவேண்டும்; கொடுமைக்காரனாகிய இப்னுஜியாதுக்கு ஒத்துழைப்புக் கொடுக்கக்கூடாது என அழுத்தமாகக் கூறி உங்களை எங்கள்பால் அழைக்கிறேன். இப்னுஜியாதைக் கொண்டு உங்களுக்கு ஒருபோதும் ஒரு நன்மையும் கிடைக்காது; உங்களுக்குத் தீமைதான் அதிகரிக்கும். அவன் உங்களை அங்கஹீனப்படுத்திச் சித்திரவதை செய்வதில் ஆனந்தங் கொள்பவன். ஹுஜ்ர் பின் அதீ, ஹானீ பின் உர்வா ஆகிய உங்கள் தலைவர்களைப் போன்று மீதமுள்ள உங்களின் தலைவர்களையும் கொன்று குவிப்பான்,'' என்று கூறினார்.

ஸுஹைரின் இவ்வார்த்தைகளைக் கேட்ட கூஃபா வாசிகள் அவரை வாயில் வந்தபடி வசைமொழி பாடினார்கள். இப்னு ஜியாதை வானளாவப் புகழ்ந்து பேசினார்கள். அத்துடன் நில்லாது உரத்த குரலில், 'இறைவன்மீது ஆணை! நாங்கள் ஹுஸைனையும் அவரைச்

சார்ந்தோரையும் கொன்று குவிப்போம்; அல்லது, அவர்களைச் சிறைபிடித்து விலங்கிட்டு எங்கள் கவர்னர் இப்னு ஜியாதின் முன் கொண்டுபோய் நிறுத்துவோம்; அவ்வாறு செய்யாமல் நாங்கள் இந்த இடத்தை விட்டு நகரப் போவதில்லை,' என்றார்கள்.

பணம் பாதாள மட்டும் பாய்ந்திருப்பது, பைத்துல்மால் — முஸ்லிம்களின் பொதுநிதி—பெருமானார் (ஸல்) அவர்களின் திருப்பேரருக்கும் அவர் தம் குடும்பத்தாருக்கும் விரோதமாகப் பயன்படுத்தப்பட்டுள்ள விந்தையும் கூஃபாவாசிகளின் வாக்குமாறும் துரோகப் புத்தியும் நம் சிந்தனைக்குரியவை.

கூஃபாவாசிகளின் இந்தப் பச்சைத் துரோகத்தைக்கண்ட ஸுஹைர், மீண்டும் அவர்களைப் பார்த்துக் கூறினார்:

''அல்லாஹ்வின் அடியார்களே! ஸமிய்யாவின் மகனை (இப்னுஜியாதை) க்காட்டிலும் பாத்திமா நாச்சியாரின் புதல்வர் (இமாம் ஹுஸைன்) உங்களின் உதவிக்கும் ஒத்தாசைக்கும் மிகவும் அருகதையுடையவர் என்பதை நீங்கள் அறிந்துகொள்ளவேண்டும். நீங்கள் அவருக்கு உதவிபுரியாவிடினும் பரவாயில்லை; அவரைக் கொல்லாமலாவது விட்டுவையுங்கள்; ரசூலுல்லாஹ்வின் குடும்பத்தார்மீது கத்தி படாமல் காத்துக் கொள்ளுங்கள். அவருடைய விஷயத்தை அவரின் (ஒன்றுவிட்ட) சகோதரருடன் (யஜீதுடன்) சந்திக்க விட்டு இருவரையும் பேசித் தீர்த்துக்கொள்ளுமாறு விட்டு விடுங்கள்! அவர் (யஜீது) அதில் சந்தோஷமே அடைவார். இறைவன்மீது ஆணையிட்டுக் கூறுகிறேன், யஜீதைச் சந்தோஷப்படுத்துவதற்காக நீங்கள் ஹுஸைனின் இரத்தத்தை ஓட்டவேண்டுமென்ற கட்டாயமோ அவசியமோ இல்லை.''

ஸுஹைர் பின் கைன் இவ்வாறு கூறிக்கொண்டிருக்கும்போது தில்ஜவ்ஷான் ஸுஹைர்மீது ஒரு அம்பை எய்தவனாய், 'உமது வாயை ஆண்டவன்

அடைக்கட்டும்? ஏதேதோ உளறிக் கொட்டி மன தைக் கலக்கின்றீரே!" என்றான்.

உடனே ஹுஸைன், 'அடா, கேடு கெட்டவனே! உன்னைப்பார்த்து நான் கூறவில்லையே; நீயோ மிரு கம், திருக் குர் ஆனின் திருவசனங்களின் அர்த்த மென்ன என்பதைக் கூட நீ அறியமாட்டாயே!' என்றார்.

அதற்கு ஷிம்ரு (தில்ஜவ்ஷான்), 'உன்னையும் உன் னைச்சார்ந்தவர்களையும் ஒன்றாகவே சாகும்படி ஆண்ட வன் செய்யட்டும்!' என்றான்.

'அடா, பாவிப் பயலே! நீ மரணத்தைக் காட் டியா என்னை அச்சமூட்டுகிறாய்? நான் உன்னுடன் நெடுங்காலம் உயிர் வாழ்வதைக் காட்டினும், இப் பொழுதே ஹுஸைனுடன் மரணமடைவதையே மேலானதாகக் கருதுகிறேன்,' என்று சுடச் சுடக் கூறி னார் ஹுஸைன்.

பின்னும் கூபாவாசிகளை நோக்கி, 'ஏ, மனிதர் களே! மீண்டும் சொல்லுகிறேன், கல் நெஞ்சம் படைத்த இவனுடைய வார்த்தைகளில் சிக்கிக்கொள் ளாதீர்கள். அல்லாஹ்வின் மீது பிரமாணமாகக் கூறுகிறேன்: முஹம்மது (ஸல்) அவர்களுடைய குடும் பத்தார்களையும் சந்ததியார்களையும் கொன்று குவிப் பீர்களாயின், இறுதி நாளில் நீங்கள் ரசூலுல்லாஹ் வின் 'ஷபாஅத்'தை (மன்றாட்டத்தை)ப் பெற்றுக் கொள்ள மாட்டீர்கள்' என உரத்த குரலெடுத்து கூவி னார் ஹுஸைன்.

கூபாவாசிகளின் கண்கள் திரையிடப்பட்டுவிட் டன; இருதயங்கள் மூடி முத்திரையிடப்பட்டு விட் டன. எனவே, இமாம் ஹுஸைன் அவர்களும் அவர் களைச் சார்ந்தோரும் கூறிய வார்த்தைகள் பாலையில் பெய்த மழையாகிவிட்டது. ஹுஸைன் பின் கையை இமாமவர்கள் திரும்ப அழைத்துக்கொண்டார்கள்.

## ஹுர்ரின் மனமாற்றம்

இப்போது யஜீது படையின் மகாதளபதி அம்ருப்னு ஸஃத் தமது இராணுவத்தை உஷார்படுத்தினார். அப்போது ஹுர் இப்னு யஜீது அவரை நெருங்கி 'இறைவன் தங்களுக்கு அருள்புரிவானாகை! உண்மையிலேயே நீங்கள் (ஹுஸைன்) அவர்களுடன் சண்டை செய்யப் போகிறீர்களா?'

'ஆம்: அல்லாஹ்வின்மீது ஆணை! அது எத்தகைய போராக இருக்குமென்றால், குறைந்தபட்சம் அதில் சிரசுகள் துண்டிக்கப்படும்; கைகள் வெட்டுண்டு புஜத்திலிருந்து கீழே விழும்' இது மகா தளபதியின் பதில்.

'என்ன! அவர்கள் சமர்ப்பித்த நிபந்தனைகளில் எதுவும் ஏற்கத் தக்கதாக இல்லையா?' ஹுர்ரின் அடுத்த வினா.

'அதில் எனக்கு அதிகாரமிருந்தால் அதனை நான் நிச்சயமாக ஏற்றுக் கொள்வேன். என் செய்வது? உங்கள் கவர்னர் (இப்னு ஜியாத்) அதை ஏற்க மறுக்கின்றாரே!' இது இப்னு ஸஃதின் மறுபதில்.

இந்த பதிலைக் கேட்ட ஹுர், ஸஃதை விட்டும் நகர்ந்தார். அருகாமையில் நின்று கொண்டிருந்த தமது கோத்திரத்தைச் சேர்ந்த குர்ரா இப்னு கைஸிடம் 'உன் குதிரைக்குத் தண்ணீர் காட்டினாயா?' என்று கேட்டார். ஹுர்ரின் கேள்வியிலிருந்து அவர் சண்டையில் பங்கு கொள்ள விரும்பவில்லை, தன்னை நகர்த்தி விடுவதற்கு இவ்வாறு கேட்கிறார் என்பதைப் புரிந்து கொண்ட குர்ரா, 'இதோ போகிறேன்' என்று கூறி விட்டு ஒருபுறமாகச் சென்றார்.

உடனே ஹுர், இமாம் அவர்களின் அணியை நோக்கி மெதுவாக முன்னேறிச் சென்றார். ஹுர் வருவதைக் கண்ட இமாம் அவர்களின் 'காபிலா'வைச் சேர்ந்த மஹாஜிர் பின் அவ்ஸ் என்பவர், 'என்ன,

 

ஹுஸைனைத் தாக்குவதற்கா வருகிறீர்?' எனக் கேட்டார்.

ஹுர் பதில் கூறவில்லை. மஹாஜிருக்குச் சந்தேகம் பிறந்தது. ஹுர்ரை நோக்கி, 'இதற்கு முன் எந்தச் சண்டையிலும் இப்படி நீர் மவுனம் சாதிக்க வில்லையே! கூஃபாவிலே சுத்த வீரன் யார் என்றால், உமது பெயர்தானே என் நாவில் வரும்; இப்போது நீர் என்ன செய்யவிருக்கிறீர்? கூறும்,' என்றார் மஹாஜிர்.

ஹுர் தமது மௌனத்தைக் கலைத்து, அடக்கமுடன், 'இறைவன்மீது ஆணை! நான் சுவர்க்கத்தையோ, அல்லது நரகத்தையோ, எதைத் தேர்ந்தெடுப்பது என்று யோசித்தேன்; உண்மையிலேயே இப்பொழுது நான் சுவர்க்கத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன்: இனி என்னைத் துண்டு துண்டாக வெட்டிக் கூறு போட்டாலும் சரிதான்' என்று கூறியவராய் குதிரையைச் சட்டெனச் செலுத்தி ஒரே பாய்ச்சலில் இமாமவர்களின் படையில் வந்து இணைந்து கொண்டார்.

வந்தவர், இமாம் அவர்களின் முன்னிலையில் சென்று, 'ரசூலுல்லாஹ்வின் திருப்பேரரே! தங்களைத் திரும்பிச் செல்லவிடாது தடுத்த துரோகி நான்; வழி நெடுகத் தங்களைப் பின் தொடர்ந்து வந்தேன்; இந்தப் பாலையில் இறங்குமாறு பலவந்தம் செய்தேன். இறைவன்மீது சத்தியமாக இவர்கள், தாங்கள் கூறும் நிபந்தனையை ஏற்கமாட்டார்களென்று நான் கனவிலும் நினைக்கவில்லை; எதிரிகள், தங்கள் விஷயத்தில் இவ்வித மனிதாபிமானமற்ற விதமாக நடந்து கொள்வார்கள் என்பது எனக்கு முன்கூட்டியே தெரிந்திருந்தால், நான் தங்களிடம் இவ்வளவு கண்டிப்புடன் நடந்து கொண்டிருக்க மாட்டேன். நான் எனது தவறை நினைந்து மனம் வருந்தியவனாகவும், என் ஆன்மாவைத் தங்களுக்கு அர்ப்பணித்தவனாகவும் இங்கு தங்கள் முன் வந்து நிற்கிறேன்.

தங்கள் மலரடிக் காணிக்கையாக நான் வெட்டுண்டு வீழ்ந்தலாவது எனக்குப் பாவமன்னிப்புக் கிடைக்காதா என ஏங்குகிறேன்,' என்று கதறியழுதார்.

இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் ஹுர்ரை நோக்கி, 'இறைவன் உம்முடைய தவ்பாவை ஏற்று மன்னிப்பானாக!' என்று ஆறுதல் கூறியவர்களாய், 'உமது பெயரென்ன?' எனக் கேட்டார்கள். அதற்கு இப்னு யஜீத், 'ஹுர்' என்றார். உடனே இமாமவர்கள், 'ஓ, ஹுர்ரே! (சுதந்திரப் புருஷரே) உம் தாய் உமக்குப் பெயரிட்டிருப்பதுபோல் நீர் இம்மையிலும் மறுமையிலும் இன்ஷா அல்லாஹ் சுதந்திரப் புருஷரே!' என்று நன்மாராயங் கூறினார்கள்.

## ஹுர்ரின் பேச்சு

ஹுர் இப்னு யஜீது இமாமவர்களின் அணியில் வந்து சேர்ந்து கொண்டதன் பின்னர், எதிரிகளான கூஃபா, ஷாம் வாசிகளின் அணியை நெருங்கிச் சென்று பின்வருமாறு அவர்களுக்கு எடுத்துரைத்தார்:—

'ஏ, மனிதர்களே! ஹுஸைன் கூறும் மூன்று விஷயங்களில் எதையேனும் நீங்கள் ஏன் ஏற்றுக் கொள்ளக் கூடாது? அவ்வாறு நீங்கள் ஏற்றுக் கொண்டால் அவருடன் யுத்தம் செய்யாமல் அல்லாஹ் உங்களைக் காத்துக் கொள்வானல்லவா?'' என்றார்.

அதற்கு அவர்கள், 'எங்கள் தளபதி அம்ருப்னு ஸஃத் இதோ இருக்கிறார்; அவர் பதிலளிப்பார்,' என்று கூறினார்கள்.

இதைக் கேட்ட இப்னு ஸஃதி, 'நான் என் மனப்பூர்வமாக இதையே விரும்புகிறேன்; ஆனால், என்னால் அவ்விதம் நடக்க முடியவில்லையே! என் செய்வேன்?' என்றார்.

அப்பால், ஹுர் வீராவேசத்துடன் கூஃபா வாசிகளை நோக்கி, ''ஏ, கூஃபா வாசிகளே! முதன் முதலாக

ஹுஸைனை நீங்கள்தான் அழைத்தீர்கள்; உங்கள் அழைப்புக்கிணங்கவே அவர் இங்கு வந்தார். இப்போது அவரை நீங்கள் கைவிட்டுவிட்டீர்கள். மேலும், நீங்களெல்லாம் அவருடன் சேர்ந்து யுத்தம் செய்வீர்களெனப் பெரிதும் எதிர்பார்த்திருந்தார். ஆனால் நீங்களோ, அவருக்கு நேர் விரோதிகளாக மாறி விட்டீர்கள்; அத்தோடு நில்லாது இது சமயம் நீங்கள் அவரையே கொல்லவும் துணிந்து விட்டீர்கள். அவரை நாலு பக்கங்களிலும் சுற்றி வளைத்துக் கொண்டீர்கள். ஆண்டவனின் பரந்த பூமியில் ஏதேனுமொரு பக்கத்திற்குச் செல்ல அவரை நீங்கள் விடுகின்றீர்களில்லை. இது சமயம் ஹுஸைன் ஒரு கைதியைப் போல் உங்களிடம் சிக்கிக் கொண்டிருக்கிறார். அவர் தமக்குத் தாமே எவ்வித நன்மையையும் செய்து கொள்ள முடியாதவராகவும், தம்மைக் காப்பாற்றிக் கொள்ள வகையில்லாத நிலையிலும் நின்று தவிக்கிறார்.

"நீங்களோ ஃபுராத் நதியில் ஓடும் தண்ணீரைக் கூட அவருக்குத் தடை செய்துவிட்டீர்கள். அதில் ஓடிக்கொண்டிருக்கும் நீரை யூதர்களும், கிறிஸ்தவர்களும், அக்கினி வணக்கக்காரர்களான மஜூஸிகளும்-ஏன் கிராமங்களில் திரியும் நாய்கள், பன்றிகளுங்கூட-தாராளமாய்க் குடித்துக் கொண்டிருக்கின்றன. ஆனால், ஹுஸைனும் அவருடைய குடும்பத்தார்களும் அவரைச் சார்ந்தவர்களும் இவ்வாற்றில் ஓடிக் கொண்டிருக்கும் நீரைப் பருக முடியாமல் தாகத்தினால் தவித்துக் கொண்டிருக்கின்றனர்.

"முஹம்மது நபி (ஸல்) அவர்களுக்குப்பின் அவர்களுடைய குடும்பத்தார்களை எவ்வளவு 'நல்விதமாக' (மோசமாகக்) கவனித்தீர்கள் என்பதைச் சற்றே நிதானமாகக் கவனித்துப் பார்க்க மாட்டீர்களா? நீங்கள் உங்களுடைய எண்ணங்களையும் கொள்கைகளையும் செயல்களையும் மாற்றிக் கொண்டு ஆண்டவனிடம் பாவமன்னிப்புத் தேடுங்கள். இல்லையேல் இறுதி நாளான 'கியாமத்'தில் நீங்கள் எல்லாம் தாகத்

ற்றால் துடிதுடித்துக் கொண்டிருக்கும்படி ஆண்டவன் செய்வான் என்பது ஞாபகத்தில் இருக்கட்டும்,'' என்று ஹுர் எடுத்துக்காட்டி எச்சரித்தார்.

அறவைவிலை விசாரிக்கும் அற்பர் தாமும்
 அறிவொளியின் மாண்பதனை அறிகுவாரோ?
விரைகமழும் மலர்மாண்பைக் குரங்கு ஓரா;
 விலைமாது இல்வாழ்க்கை இன்பம் ஓராள்,
கறையறுநல் வைரவொளி குருடன் காணான்;
 கழுதைசெங் கரும்புருசி காணாதே போல்
மறையறியா மூடர்களும் ஹுர்ரின் சொல்லை
 மனத்திருத்திக் கொண்டவரை எதிர்க்கலானார்.

## யுத்தம்

ஹுர் தமது பேச்சை முடித்ததும் தளபதி அம்ருப்னு ஸஃத் கொடியை உயர்த்திப் பிடித்துக் கொண்டு வில்லைத் தூக்கிப்பிடித்தவராய் இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின் படை வீரர்கள் நிற்கும் திசையை நோக்கி, ''நீங்கள் சாட்சியாயிருங்கள், முதன் முதலில் நானே அம்பு எய்கிறேன்,'' எனக் கூறி அம்பொன்றையெய்து யுத்தப் பிரகடனம் செய்தார். உடனே இருதரப்பிலிருந்தும் அம்புமாரி பொழிந்து கொண்டிருந்தது.

இதற்கிடையில், முற்கால யுத்த மரபுப்படி இரு தரப்பிலிருந்தும் வீரர்கள் களத்தில் குதித்து பலப் பரீட்சை செய்து காட்டுவதுபோல், யஜீதின் படையிலிருந்து ஸியாத் இப்னு உமய்யா, இப்னுஜியாதின் அடிமை யஸ்ஸார், ஸாலிம் ஆகிய மூவரும் களத்துக்கு வந்து சூளுரைத்தனர்.

இமாமவர்களின் படையிலிருந்து அப்துல்லாஹ் பின் உமைர் கல்பீ என்பவர் முன்வந்து அனுமதி கோரினார். இவர் கூஃபாவிலிருந்து தம் மனைவியுடன் இமாம் அவர்களுக்கு ஒத்துழைப்பு நல்குவதற்காகக் கால்நடையாக வந்தவர்; கருநிறமுடையவர்; நல்லு

பருமனும் விரிந்த மார்பும் உடையவர்; அவருடைய எடுப்பான தோற்றத்தைக் கண்ட இமாமவர்கள் அவரைக் களத்துக்கு அனுப்பினார்கள்; அவர் புலியெனப்பாய்ந்து யஸ்ஸாரையும் ஸாலிமையும் ஒரு நொடியில் கொன்றொழித்தார்; ஸியாத் பின்வாங்கி விட்டான்; இப்னு உமைரின் மனைவி உம்மு வஹப் தன் கணவருக்கு உதவியாகக் கூடாரத்தின் கழியொன்றைப் பிடுங்கிக் கொண்டு ஓடோடி வந்தாள்; இப்னு உமைர் வரவேண்டாமெனத் தடுத்தும் கேட்கவில்லை; அவளின் ஆவேசத்தைக் கண்ட இமாமவர்கள், மிகுந்த அனுதாபத்துடன், "இறைவன் அல்லாஹ் பைத்துகளின் பொருட்டாக உமக்கு நற்கூலியளிப்பானாக! பெண்கள் யுத்தத்தில் கலந்து கொள்வதற்கு அனுமதிக்கப்பட வில்லை; எனவே, நீர் கூடாரத்துக்குத் திரும்பிச் செல்வீர்," என அதட்டலாகக் கூறி அனுப்பிவிட்டார்கள்;

இமாமவர்களின் சிறிய படையின் வலப்புற அணிக்கு ஸுஹைர் பின் கைனும் இடப்புற அணிக்கு ஹபீப் பின் மஸ்ஹரும் தலைமை தாங்கி நின்றனர். கொடியைத் தம் சகோதரர் அப்பாஸ் பின் அலீயின் கையில் கொடுத்திருந்தார்கள்;

வீரராஞ் சுஹைறு வென்பார்
வலவணி யெய்தி நிற்பத்
தீரராங் கஅபு ஆர்த்து
இடவணி சார்ந்து நிற்ப
வீர நற்றுவஜ மேந்தி
விளங்கும் அப்பாசு நிற்ப
நேரிலா நபியார் பேரர்
நின்றனர் அணி முன்னாக!

இதன் பிறகு இப்னு ஸஃத் வலப்புறமாகத் தாக்குதல் தொடுத்து மிகவும் நெருங்கி வந்தபொழுது இமாமவர்களின் வீரர்கள் தரையில் முழங்காலிட்டு ஈட்டிகளைத் தூக்கிப் பிடித்து நின்றார்கள்; அது ஒரு வேலியைப் போல் அமைந்து எதிரிகளைத் தடுத்து

நின்றது. எனவே, அவர்களின் குதிரைகள் அவ்வீட்டின் வேலியைத் தாண்டிச் செல்ல இயலாது பின் வாங்கின. இதை இமாமவர்களின் படையினர் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டு அம்புமாரி பொழிந்து எதிரிகளில் அநேகரைக் கொன்றொழித்தார்கள்; பலரை படுகாயப்படுத்தினார்கள்.

## துஷ்டன் இப்னு ஹவுஜா

இதில் ஷாம் தேசத்தைச் சேர்ந்த இப்னு ஹவுஜா என்பவன், "ஹுஸைன் இருக்கிறாரா?" என்று சப்தமிட்டுக் கொண்டு வந்தான். இருமுறை அவனுக்குப் பதில் கிடைக்கவில்லை. மூன்றாவது முறையாக, "ஆம்; இருக்கிறார்கள்," என்ற பதில் வந்தது. இதைக் கேட்ட அந்த நீசப் பயல், "ஹுஸைனே! உமக்கு நரகத்தைக் கொண்டும் மாராயம் கூறுகிறேன்," என்றான். அதற்கு இமாமவர்கள், "நான் நரகத்துக்குச் செல்ல மாட்டேன்; ஆனால், அருளாளனும் அன்புடையோனும் அத்தியந்தப் பிரியமுடையோனுமான இரட்சகனின் சமூகத்திற்கே நான் செல்வேன்," என்று கூறியவாறு, "உன் பெயரென்ன?" என்று வினவினார்கள். அவன், "இப்னு ஹவுஜா!" என்றான். உடனே இமாமவர்கள், "இறைவா! இவனை நரகத்தில் சேர்ப்பாயாக!" என்று கூறினார்கள். சற்று நேரத்தில் அவன் ஏறியிருந்த குதிரை வெருண்டு துள்ளியது. மேலே இருந்த இப்னு ஹவுஜா கீழே சாய்ந்தான்; அவனுடைய பாதம் குதிரையினுடைய சேணத்தின் கால் வளையத்தில் மாட்டிக் கொண்டது. குதிரை திசைக்குத் திசை ஓடியது; தலை கீழாகத் தொங்கிக் கொண்டிருந்த இப்னு ஹவுஜாவின் தலை பாறாங்கற்களில் மோதி, பலவாறாகச் சிதறுண்டு போயிற்று.

இதன்பின் யஜீது படையினின்றும் யஜீத் பின் மஃகல் வந்தான். ஹுஸைனி படையினின்றும் பர்பர் பின் ஹுலைர் அவனை எதிர்த்தார். சிறிது வாக்குவாதத்துக்குப் பின் எஜீத், பர்பரைத் தாக்கினான்; அவர் வெட்டுப் படாது தவிர்ந்துக் கொண்டார். அதன்பின் பர்பர்

எஜ்ஜைத் தாக்கினார். அவனது தலை இரண்டு துண்டாகிக் கீழே சாய்ந்தான். இப்போது யஜீது படையைச் சேர்ந்த ரஜீ பின் முன்கித், பர்பரைத் தாக்கினான். அவர் விலகிக் கொண்டு ரஜீயைத் தாக்கினார். அவன் கீழே விழுந்தான். அவனின் உதவிக்கு வந்த கஃப் பின் ஜாபிர் இஜ்தீ என்பவன் பர்பரைத் தாக்கினான்.

இதன் பின் ஹுர் பின் யஜீது (யஜீது படையிலிருந்து ஹுசைனீ படையில் வந்து சேர்ந்து கொண்டவர்) வந்தார். அவருடன் யஜீது பின் சுப்யான் வந்து மோதினான். ஹுர் அவனை ஒரே வீச்சில் மாண்டு மடியச் செய்தார். இதுவரை தனிப்பட ஒருவர் மற்றொருவரைத் தாக்கும் பலப் பரீட்சையே நடைபெற்று வந்தது. இதில் ஷாம் தேச சைனியத்தினின்றும் களத்துக்கு வந்த எவரும் மீண்டு செல்லமுடியவில்லை.

இதனைக் கண்ட யஜீது படையின் வலது அணித் தளபதி அம்ருப்னுல் ஹஜ்ஜாஜ் என்பான் தன் வீரர்களை நோக்கி,

“ஏ, அறிவீனர்களே! இப்படியே ஒவ்வொருவராக நம்மில் கொல்லப்பட்டுக் கொண்டிருந்தால் யார் தான் மிஞ்சுவார்? அனைவரும் மடிந்து நிர்மூலமாக வேண்டியது தான்! அவர்கள் (ஹுசைனீகள்) சொற்ப எண்ணிக்கையினராக இருந்தும் தங்கள் உயிர்களைப் பரித்தியாகம் செய்து போரிடுகின்றனரே! அவர்களைக் கல்லால் அடித்துக்கூட ஒழித்துக் கட்டிவிடலாமே! எனவே, இந்தப் போர்முறை சரியில்லை.

“ஏ, கூபாவாசிகளே! ஒழுக்கத்தையும் அணி வகுப்பு முறையையும் சரியான முறையில் வைத்துக் கொள்ளுங்கள். அந்த மனிதர் கொல்லப்படுவார் என்பதில் எத்தகைய சந்தேகமும் வேண்டாம். அவ நம்பிக்கைக்கு இடமளிக்காதீர்கள். அவர் மார்க்கக் கொள்கைகளைக் கைவிட்டு விட்டார். இப்போதுள்ள

கலீபாவுக்கு விரோதியாக இருக்கிறார்." என்று சப்தமிட்டுக் கூவினான். இப்னு ஹஜ்ஜாஜின் பேச்சு, மகா தளபதி இப்னு ஸஃதுக்கு மிகவும் பிடித்தமாக இருக்கவே படைகளைப் பொது யுத்தத்திலிறங்குமாறு கட்டளையிட்டார். தனிப்பட்ட நபர் பலப் பரீட்சையைத் தடுத்துவிட்டார்.

பொதுவான கைகலப்பு ஆரம்பமாயிற்று. ஹஜ்ஜாஜ் தன் படையினருடன் இமாம் அவர்கள்மீது பாய்ந்தான். சிறிது நேரம் வரை ஒரே குழப்பமாக இருந்தது. இதில் ஹுஸைனி படையைச் சேர்ந்த முக்கியஸ்தரான முஸ்லிம் பின் ஒளஸஜா ஷஹீதானார். ஷஹீதுகளில் இவரே முதன்மையானவர். இவரது மரணச் செய்தி எதிரிப் படையினருக்கு எட்டியதும் ஆறுதல் பெருமூச்சு விட்டுக்கொண்டனர்.

இதற்குப் பின் எதிரிப்படையின் இடது அணித் தளபதியான ஷிம்ரு பின் தில்ஜவ்ஷான் ஹுஸைனி படையினரை இடது பக்கத்திலிருந்து தாக்கினான். பின்னர் எல்லாப் படையினரும் ஹுஸைனி படையின் மீது தாவி விழுந்து தாக்கத் தலைப்பட்டனர்.

இப்பொழுது ஹுஸைனி படையில் 32 வீரர்கள் மட்டுமே எஞ்சி நின்றனர். எனினும், அவர்கள் எப்பக்கம் திரும்பினார்களோ அப்பக்கம் எதிரிகள் பிணக்குவியலாகவே விழுந்து மடிந்து கொண்டிருந்தனர். காலாட் படையின் பக்கல் திரும்பினால் அவர்கள் கால் வாங்கித் தலை தெறிக்க ஓடினர்; குதிரை வீரர்களின் பக்கல் திரும்பினால் இவர்களும் இவர்களின் வாகனங்களும் சிதறிச் சின்னாபின்னப் பட்டு ஓடிக் கொண்டிருந்தனர். எதிரிகளின் குதிரைப் படைத் தலைவனான அஜ்ரா பின் கைஸுக்கு இதைக் காணச் சகிக்கவில்லை; நிலைகுலைந்தான். விரல் விட்டு எண்ணக் கூடிய ஒரு சிறிய கூட்டம் தன் குதிரை வீரர்களைச் சிதறடிப்பதை அவன் சகிக்க இயலாது சிந்தை நொந்தான்.

எனவே, சில காலாட் படையினரையும் வில் வீரர்களையும் அனுப்பித் தருமாறு மகா தளபதி இப்னு ஸஃதுக்குத் தகவலறிவித்தான். அவ்வாறே 500 வீரர்கள் வந்தனர். வந்தவர்களை ஹுஸைனி படையினர் மீது அம்பு மாரி பொழியுமாறு அஜ்ரா இப்னு கைஸ் உத்தரவிட்டான்; சிறிது நேரத்தில் ஹுஸைனி படையிலிருந்த குதிரைகளெல்லாம் படுகாயமுற்றுப் பயனற்றுப் போயின. எனினும், அவர்கள் தரையிலிறங்கி நின்று கொண்டு நண்பகல் வரை மிக்க வீரதிரத்துடன் ஷாம் சைனியங்களை சம்ஹாரம் செய்து கொண்டிருந்தனர்.

## கூடாரங்களுக்குத் தீ வைத்தனர்

சண்டை நண்பகலுக்கு மேல் நீடித்துக் கொண்டு போவதைக் கண்ட ஷாம் தேசப்படையினர் சங்கடமுற்றவர்களாய், அதை விரைவில் முடிவுக்குக் கொண்டு வந்துவிட வேண்டுமென்ற ஆர்வத்தால் துடித்தனர். இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் தங்கள் குடும்பத்தாரின் கூடாரங்களையும் அன்பர்களின் கூடாரங்களையும் அதிக முன்னெச்சரிக்கையுடன் அமைத்திருந்தார்கள். அதன் காரணமாக எதிரிகள் ஒரு முனையில் மட்டுமே நின்று போரிட வேண்டிய நிலைமையாக—நிர்ப்பந்தமாக—இருந்தது. நாலு பக்கங்களிலிருந்தும் ஹுஸைனி படையினரைத் தாக்க முடியாமல் தவித்தனர். இச்சங்கடத்தைக் கண்ட இப்னு ஸஃத், ஹுஸைனி படையினரின் கூடாரங்களையெல்லாம் பிடுங்கி எறிந்து விடுமாறு உத்தரவிட்டார். அதற்கொப்ப ஷாமி படையினர் கூடாரங்களை நோக்கி ஒடுக்கமான ஒற்றையடிப் பாதையில் சென்று கொண்டிருந்தனர். இவர்கள் ஒவ்வொருவராக வர, வர ஹுஸைனி படையினர் கொன்றொழித்துக் கொண்டேயிருந்தனர். இதனைக் கண்ட மகாதளபதி இப்னு ஸஃத் அக்கூடாரங்களையெல்லாம் தீக்கிரையாக்கிவிடுமாறு உத்தர விட்டார். எனவே, அவை கொளுத்தப்பட்டன. இதனைக் கண்ட இமாமவர்கள்,

"இதுவும் நமது நன்மைக்கேயாகும்; இனி எதிரிகள் நம்மைப் பின்புறமாகத் தாக்க முடியாமல் அது பாது காப்பாக அமைந்து விட்டது," எனக் கூறித் தம் படை யினரை உற்சாகப் படுத்தினார்கள்; அது உண்மையாக வும் ஆகிவிட்டது. இதற்கு முன்னர் தில் ஜவ்ஷான் இமாமவர்களின் குடும்பத்தார் (பெண்களும் குழந்தை களும்) தங்கியிருந்த கூடாரத்தின் பக்கல் அம்பொன்றை எறிந்து. "இதற்குள்ளிருக்கும் ஜனங்களுடன் இக் கூடாரத்தையும் தகனம் செய்து விடுகிறேன்," என்று உரத்த குரலில் கூவினான். இவ்வார்த்தைகளைக் கேட்ட இமாமவர்களின் குடும்பத்தார் கலக்கத்துடன் கூடா ரங்களினின்றும் வெளியே ஓடிவந்தனர்; தங்கள் குடும் பத்தாரைச் சார்ந்த பெண்மணிகள் வெளியே வரு வதைக் கண்ட இமாமவர்கள், ஷிம்ருவை அதட்டிய வர்களாக, "நீ என் குடும்பத்தாரை அக்கினிக்கு இரை யாக்கவா விரும்புகிறாய்? அல்லாஹ் நரகத்தின் நெருப் பில் உன்னை எரிக்கப் போதுமானவன்" என்று கூறி னார்கள்; இவ்வார்த்தைகள் மற்றும் பலரின் மனது களிலும் தைத்தன; எனவே, அவர்கள் ஷிம்ருவை இத்தகைய காரியத்தில் இறங்க வேண்டாமெனத் தடுக்கவே, அவனும் தன் எண்ணத்தை மாற்றிக் கொண்டு அங்கிருந்து அகன்றான்; அவன் சென்றதின் பின் அங்கு வந்திருந்த ஷாம் வீரர்களையெல்லாம் ஸுஹைர் பின் கைன் அகற்றி விட்டார்;

இதன் பின்னர் ஸுஹைர் பின் கைன், தில் ஜவ்ஷான் மீது பலங்கொண்டு தாக்கினார்; அதனால் அவனது படை கலகலத்துப் போயிற்று; ஆனாலும் சிறிது நேரத்தில் மீண்டும் எதிரிப் படையினர் ஒன்று கூடி முன்னேறி வந்தனர்; முன்னர் குறிப்பிட்ட கூஃபா வின் வீரர், கருநிறத் தோற்றமுடைய ஆஜானுபாகு வான அப்துல்லா ஹிப்னு உமைருல் கல்பீ இப்போது ஷஹீதாகிவிட்டார்; அவரை அவரின் மனைவி உம்மு வஹப் தம் மடிமீது தூக்கிவைத்து அவர் முகத்திலி ருந்த மண்ணைத் துடைத்தவாறு, "உங்களுக்கு இனிச் சுவர்க்கம்தான்" என்று கூறிக்கொண்டிருந்தாள்.

இதனைப் பார்த்த கொடியோன் நிம் ஜவ்ஷான் அவ்வம்மையாரையும் வெட்டிச் சாய்த்து விட்டான்.

## தோழர்களின் பரித் தியாகம்

இப்பொழுது இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின் படையில் பலர் தியாகமாகி விட்டனர்; சிலரே எஞ்சி நின்றனர். ஆபத்தும் அபாயமும் அதிகமாகிக் கொண்டே வந்தது. இதை உணர்ந்த அம்ருபின் அப்துல்லாஹ் ஸாயிதீ என்பவர் இமாமவர்களை அணுகி, "என் ஆன்மா தங்களுக்குத் தியாகமாகக் கடவது! இது சமயம் ஷாம் தேசப் படையினர் நம்மை நெருங்கிக் கொண்டே இருக்கின்றனர்; எந்தச் சமயத்திலும் அவர்கள் நம்மைத் தாக்கலாம். எனவே, தங்களுக்கு முன் நான் அவர்களை எதிர்த்து நின்று உயிர்த் தியாகம் செய்யலாமென்று தீர்மானித்துள்ளேன். இதற்குப் பின் அவர்கள் தங்களிடம் வரட்டும்; இன்னும் நான் தொழவில்லை; நேரம் பிந்துகிறது; தொழுது முடிந்ததும் அல்லாஹ்விடம் செல்லலாமென நினைக்கிறேன்." என்று கூறினார். இதைக் கேட்டதும் இமாம் அவர்கள், "அதுவும் நல்லதுதான், எதிரிகளைப் பார்த்து யுத்தத்தைச் சிறிது நேரத்துக்கு ஒத்தி வைக்கும்படி சொல்லுங்கள்; அதற்கிடையில், நாம் 'லுஹரை'த் தொழுது முடித்துக் கொள்ளலாம்" என்றார்கள்.

இத்தகைய வேண்டுகோளைக் கேட்டுக் கொண்டிருந்த ஹஸீன் பின் நமீர் ஷாமி என்பவன், "உங்களுடைய தொழுகை ஏற்றுக்கொள்ளப்படத்தக்கதல்ல." என்றான். அருகே நின்ற இமாமின் இடது அணித் தளபதியான ஹபீப் பின் மஸ்ஹர் என்பவர், "ஏ, கழுதையே! என்ன சொன்னாய்? ரசூலுல்லாஹ்வின் வம்சத்தார் தொழுகை ஏற்றுக் கொள்ளப்பட முடியாதது, உன்னுடைய தொழுகைதான் அல்லாஹ்வால் ஏற்றுக் கொள்ளப்படக்கூடியதோ?" என்றார். ஹஸீன் கடுங்கோபமுற்றவனாய் ஹபீபைத் தாக்கினான். அவர் சும்மா இருப்பாரா? அவன் ஏறியிருந்த குதிரையின்

முகத்தில் கடுமையாகத் தாக்கினார்; குதிரை தனது முன்னங்கால் இரண்டையும் உயரத் தூக்கியது; ஹஸீன் மல்லாந்து விழப்போனான்; அருகில் நின்ற அவனைச் சார்ந்தோர் அவன் கீழே விழாது தாங்கிக் கொண்டனர். ஹபீப், அவர்களுடன் போரிட்டு ஷஹீதானார்; இவருடைய மரணம் இமாமவர்களுக்கு ஒரு கை முறிந்தது போலாயிற்று.

ஹபீபுக்குப் பிறகு ஹுர் பின் யஜீது முன் வந்து, மிகுந்த ஆவேசத்துடன்,

"நான் பலரைக் கொன்றொழித்துவிட்டுத்தான் கொல்லப்படுவேன்; நான் இறப்பதாயினும் முன்னேறிச் சென்று தான் இறப்பேன்; எதிரிகளை வாள் வீச்சினால் தொடர்ந்து தாக்குவேனேயன்றிப் புறமுதுகுக் காட்டவோ, வெருண்டோடவோ மாட்டேன்; இது சத்தியம்!" என்று பாடிக்கொண்டே எதிரிப்படை அணிகளில் புகுந்து அவர்களைத் துவம்சம் செய்தார்; சிறிது நேரத்தில் அவரும் படுகாயமுற்று வீழ்ந்து ஷஹீதானார்.

ளுஹர் வக்து கடந்து கொண்டிருந்தது. எனவே, இமாமவர்கள் தம் ஆதரவாளர்களுடன் சேர்ந்து அதனை 'ஸலாத்துல் கவ்ஃப்' (அச்சத் தொழுகையாக) தொழுது முடித்தார்கள். தொழுகைக்குப் பின்னர் எதிரிகளின் தாக்குதல் உச்சக்கட்டத்தை அடைந்தது; இத்தருணத்தில் இமாமவர்களின் வலது படையணித் தளபதி ஸுஹைர் பின் கைன் களத்திலே புகுந்து வீராவேசத்துடன் போராடினார். அப்போது அவர்,

"நான் ஸுஹைர்! கைனின் புதல்வன். வாள் முனையால் நான் அவர்களை (எதிரிகளை) ஹுஸைனை விட்டும் அப்புறப்படுத்துவேன்," என்று பாடியவாறு தமது வாளைச் சுழற்றினார். எதிரிப் படைகள் அணி சிதறி ஓடலாயின. மீண்டும் இமாம் அவர்களிடம் வந்தார். அவர்களின் புஜத்தின்மீது கை வைத்தவாறு, மிகுந்த ஆவேசத்துடன்,

[ 8 ]

"முன்னேறுவீராக! இறைவன் உமக்கு நல்வழியைக் காட்டியிருக்கிறான். இன்று உம் பாட்டனாராகிய நபிகள் நாதர் அவர்களையும், சகோதரர் ஹஸனையும், தந்தை அலீ முர்தலாவையும், வீரபராக்கிரமமிக்க பெரிய தந்தை ஜஃபரையும், பிராணத் தியாகி ஹம்ஸாவையும் தரிசிக்கப்போகிறீர்," என்று பாடினார். மீண்டும் அவர் களம் நோக்கிச் சென்று உக்கிரமாகப் போராடிய பின் ஷஹீதானார்.

இப்பொழுது கூஃபாவின் துரோகிகள் கடல் அலைகளைப் போல் கரை புரண்டு வந்து கொண்டிருந்தனர். இமாமவர்களின் அருகிலும் வந்து விட்டனர். அம்புகள் வெட்டுக்கிளிகளைப்போல் கூட்டங் கூட்டமாக வந்து தைத்துக்கொண்டிருந்தன.

அன்புத் தோழர் ஹனபீ என்பவர் இமாமவர்கள் முன்பாக நின்றுகொண்டு, வந்த அம்புகளையெல்லாம் தம் உடம்பின் மீது வாங்கிக்கொண்டிருந்தார். அது சல்லடையாகி விட்டது. அவரும் கீழ சாய்ந்து ஷஹீதானார்.

இவருக்குப்பின் நாபீஃ பின் ஹிலால் பிஜ்லீ என்பவரின் முறை வந்தது. இவர் கூஃபாவைச் சேர்ந்த பன்னிரண்டு கொடியவர்களைக் கொன்றொழித்துவிட்டு ஷஹீதானார்.

இறுதியாக, இமாமவர்களின் படையில் எஞ்சி நின்ற விரல் விட்டு எண்ணக்கூடிய சிலர், இனி எதிரிகளைத் தாக்குப் பிடிப்பது இயலாத காரியம் என்பதனை உணர்ந்துகொண்டவர்களாய், ஒருவர் பின் ஒருவராகச் சென்று ஷஹீதாகி விடுவதென்ற முடிவுக்கு வந்தனர்.

முதன்முதலாக பனூ கஃப்பார், பனூ தஸ்னார்களைச் சார்ந்த ஸைஃப் பின் ஹாரித், மாலிக் பின் அப்த் என்ற இரு வாலிபர்களும், "நாங்கள் நீரோட்டம்

போன்ற வாளின்முனை கொண்டு எதிரிகளைத் துண்டு துண்டாக்கி வீழ்த்தப் போகிறோம். எங்கள் அருமைச் சமூகமே உங்களின் வாள்களினாலும் வேல்களினாலும் உத்தமர்களைக் காப்பாற்ற முன்வாருங்கள்.'' என்று பாடிக் கண்ணீர் வடித்துக்கொண்டே களம் சென்ற னர். இதனைக் கண்ட இமாம் அவர்கள், ''என் அருமைச் சகோதரரின் புதல்வர்களே! ஏன் அழுகிறீர்கள்? இன்னும் சிறிது நேரத்தில் உங்களின் கண்கள் குளிரப் போகின்றன.'' என்றார்கள். அதற்கு அவ்விருவரும், ''எங்கள் உயிருக்காக நாங்கள் அழவில்லை; உங்களை நினைத்துத்தான் அழுகிறோம்; எதிரிகள் தங்களை நாற் புறமும் சூழ்ந்து கொண்டனரே; தாங்கள் இக்கட் டான நிலையிலிருக்கிறீர்களே! என்பதை நினைத்தே அழுகிறோம்,'' என்று கூறிக் கதறினர். இமாமவர்கள், ''அல்லாஹ் உங்களிருவரையும் பரிசுத்தவாதிகளின் கூட்டத்தில் சேர்ப்பானாக!'' என ஆசீர்வதித் தார்கள். அவர்கள் நகர்ந்து செல்லும்பொழுது 'அஸ்ஸலாமு அலைக்க யப்னு ரசூலில்லாஹ்' என்று உரக் கக் கூவிக்கொண்டே சென்றனர். அதற்கு இமா மவர்கள் 'வ அலைக்குமுஸ்ஸலாம் வ ரஹ்மத்துல் லாஹ்' என்று பதில் கூறினார்கள். இளைஞர்களிருவரும் களம் புகுந்து வீராவேசத்துடன் போரிட்டு ஷஹீதா னார்கள்.

அடுத்து ஹன்லலா பின் அஸ்அத் என்பவர் கிளம்பி இமாம் அவர்கள் முன் வந்து நின்றுகொண்டு எதிரி களை உரக்கக் கூவி 'ஜனங்களே! ஆத், தமூத் கூட் டத்தார் சந்திக்க நேர்ந்த கெட்ட நாளை நீங்களும் சந்திக்காதிருப்பீர்களாக! நீங்கள் அழிந்துவிடக் கூடாதே என நான் அஞ்சுகிறேன். ஜனங்களே! ஹுஸைனைக் கொல்லாதீர்கள். அவ்வாறாயின் உங்கள் மீது இறைவன் கொடிய தண்டனையை இறக்கிவிடு வான்' என எச்சரித்தார்.

ஹன்லலாவைப் பார்த்து இமாமவர்கள், 'இத் தகைய வார்த்தைகளை இப்போது இங்கு கூறுவது பயனற்றது' என்றார்கள். 'தங்களுக்கும் தங்கள்

குடும்பத்தாருக்கும் இறைவன் சாந்தியும் சமாதானமும் அளிப்பானாக!' எனக் கூறியவராய் ஹன்லலா களத்தில் புகுந்து கடும் போரிட்டு வீர மரணம் அடைந்தார்.

இவருக்குப்பின், ஆபிஸ் பின் ஷபீப், சோதப் இருவரும் களம் புகுந்தனர். ஆபிஸ் ஒரு பிரபல வீரர். அவரை எதிர்க்க எவரும் முன்வரவில்லை. ஆனாலும், விரோதிகள் நாலா புறங்களிலிருந்தும் கல்லெறிந்து தாக்கினர். பேடித்தனமான இம்முறையைக் கண்ட ஆபிஸ் தம்மீது அணிந்திருந்த கவசத்தைக் களைந்தெறிந்து விட்டு எதிரிகளின் கூட்டத்துள் நுழைந்தார். ஆட்டு மந்தைக்குள் ஓநாய் புகுந்ததைப் போல் அவர்கள் அங்கு மிங்கும் சிதறி ஓடினர். எனினும், அவர்கள் அவரைப் பலவாறாகத் தாக்கி உயிர் போக்கி ஷஹீதாக்கினர்.

இவருக்குப்பின் அம்ருப்னு காலித், ஜப்பார் பின் ஹாரித், ஸஃத், மஜ்மஃ பின் உபைதுல்லாஹ் ஆகியோர் ஒருவர் பின் ஒருவராகக் களம் புக்கி ஷஹீதானார்கள். இறுதியில் சுவைத் பின் அபில் மதாவிஉ என்ற பெரியார் மட்டிலும் எஞ்சி நின்றார்.

## நபி வீட்டார் பரித் தியாகம்

மேற்கண்டவாறு இமாமவர்களின் பக்தர்களும் தோழர்களும் ஷஹீதானதின் பின்னர் பரிசுத்த குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் மட்டுமே எஞ்சி நின்றனர். இப்பொழுது நபித்துவ குடும்பத்தினரான பனூ ஹாஷிம்கள் களம் நோக்கிச் செல்ல வேண்டிய தருணம் வந்தது.

முதன் முதலாக இமாமவர்களின் மூத்த புதல்வர், நபிகுலச் சுடர் விளக்கு அலீ அக்பர் களம் புகுந்தார்.

வெள்ளைநற் கலையுடுத்தி
வீரவாள் கரத்திற் றாங்கப்

புல்லராம் பகைவர் நிற்கும்
போர்க்களம் நோக்கி வீறுய்
வெல்லுவான் பரியிவர்ந்து
விரிமணம் மிகவும் வீசத்
தெள்ளிய நிலவை யொத்த
திடவலி அக்பர் வந்தார்.

அவர் எதிரிகளின் முன்னிலையில் நின்றுக்கொண்டு 'நான் தான் ஹலரத் அலீ அவர்களின் திருப்புதல்வர் இமாம் ஹுஸைன் அவர்களின் மைந்தன்; என் பெயரும் எனது பாட்டனாரின் திரு நாமமான அலீயே யாகும். கஃபாவின் இரட்சகன்மீது ஆணையாக! நாங்கள்தாம் நபியவர்களின் குடும்பத்தைச் சார்ந்தவர்கள்; மிக்கத் தகுதியும் உரிமையும் வாய்ந்தவர்கள். தந்தை பெயர் அறியாத ஒருவன் எங்கள்மீது ஆட்சி புரிய நாங்கள் எப்படிச் சம்மதிக்க முடியும்—இடந்தர முடியும்? அதற்கு நாங்கள் ஒருக்காலும் இணங்க மாட்டோம்' என்று கனல் பொறி பறக்க உரக்கக் கூறியவாறு நின்றுகொண்டிருந்தார்.

அப்போது முர்ரா பின் முன்கித் தமீமீ என்பவன், "அலீ அக்பர் என் பக்கம் வந்தால் ஹுஸைனைச் சந்ததியற்றவராகச் செய்துவிடுவேன்" என்றான். அதனைச் செவியேற்ற அல்லாஹ்வின் புலியின் பேரர் எப்படிச் சகிப்பார்? இல்லை. அவன் பக்கமே சென்றார். அவன் அலீ அக்பர் மீது அம்பொன்றை எய்தான். அது அவரின் உடம்பில் பாய்ந்தது. அவர் கீழே சாய்ந்தார். உடனே ஷாம் தேசச் சதிகாரச் சண்டாளர்கள் அந்த இளந்தளிரை சிதைத்துச் சின்னாபின்னப்படுத்தினர்.

இமாமவர்களின், பேரொளி சிந்தும் திருவதனத்தை யுடைய சகோதரி ஜைனப் நாச்சியார் இச் சோகச் சம்பவத்தைக் கூடாரத்தின் சாளரத்தின் வழியே பார்த்துக்கொண்டிருந்தார். எனவே, அவர் அங்கிருக்க நிலைகொள்ளாது வெளியேறி 'என் மகனே, மருனே' எனக் கதறியவராய் ஓடிவந்து அலீ அக்பரின்

உடலின்மீது விழுந்து கோவென்று கதறி அழுதார். தம் சகோதரியின் பரிதாப நிலையைக் கண்ட இமாம வர்கள் ஜைனபைக் கையைப் பிடித்து அழைத்து வந்து கூடாரத்தில் சேர்த்தார்கள். பின்னர் அலீ அக்பரின் சடலத்தைத் தூக்கிக் கொண்டு வந்து கூடாரத்துள் கிடத்தினார்கள்.

இது ஒரு நூதன உலகமாகக் காட்சியளிக்கிறது. தங்களைச் சார்ந்த அன்பர்களும், நண்பர்களும், உறவினர்களும் மரணமடைந்து விட்டார்கள். ஒரு புறம், தன்னைச் சார்ந்த தியாகிகளின் உடலங்கள் எதிரே கிடந்து துடிதுடித்துக் கொண்டிருக்கின்றன. மற்றொரு புறம், தங்கள் கட்டழகுக் காளையான தனயர் அலீ அக்பர் சிதைக்கப்பட்டுக் கூடாரத்தினுள் கிடத்தப்பட்டிருக்கிறார். இன்னொரு புறம், தங்களின் அன்புச் சகோதரி ஜைனப், தமக்கு நேர்ந்துள்ள திக்கற்ற பரிதாப நிலையைக் கண்டு திகைத்தவராய் தாங்கொணாத் துயரத்தால் மூர்ச்சை யுற்றுக் கிடக்கிறார். என்னே உலகமிது!

இந்நிலையில், உலக இரட்சகர், அகிலங்களுக்கோர் அருட்கொடை வள்ளல், எம்பெருமானார் முஹம்மது முஸ்தபா, அஹ்மது முஜ்தபா ரசூல் (ஸல்) அவர்களின் இதயக்கனி பாத்திமா நாச்சியார் பெற்றெடுத்த மாணிக்கச்சுடர் இமாம் ஹுசைன் (ரலி) அவர்கள் ஒருமுறை வானத்தை அண்ணாந்து பார்க்கிறார்கள், பெருமூச்சு விட்டவர்களாக, "என் ஆண்டவனே! உன்னுடைய பூரண பக்தர் இப்ராஹீமுடைய மார்க்கத்தைப் பின்பற்றி யான் செய்திருக்கும் இந்த தியாகத்தை அன்பு கூர்ந்து ஏற்றுக் கொள்வாயாக!" என நன்றிப் பெருக்கோடு கூறி நிற்கிறார்கள்.

இமாம் அவர்களின் திருப்புல்வர் அலீ அக்பர் ஷஹீதானதின் பின் முஸ்லிம் பின் உகைலின் புதல்வரான அப்துல்லாஹ் களத்துக்கு வருகிறார். அவரை அம்ருப்னு சபீஹ் ஷஹ்தாதீ என்பவன் அம்பெய்து ஷஹீதாக்கி விடுகிறான். இவருக்குப் பின் அவ்ன் பின்

அப்துல்லாஹ் பின் ஜஃபர் தய்யார் வருகிறார்; இவர் அம்ருப்னு நஹ்ஷல் என்பவனின் கரத்தால் நியாகியாகி விடுகிறார்; பின்னர் உகைலின் குமாரர் அப்துர் ரஹ்மான் மைதானத்துக்கு வருகிறார்; இவர் அப்துல்லாஹ் பின் உர்வா என்பவனின் வாளினால் ஷஹாதத்துப் பெற்று விடுகிறார். தம் சகோதரர் வெட்டுண்டு துடிதுடிப்பதைக் காணப் பொறாத அவரின் சகோதரர் அப்துல்லா பின் உகைல் ஓடி வருகிறார்; அவரை லக்கீத் பின் நாஸிர் என்பவன் தன் அம்பை எய்து ஷஹீதாக்கி விடுகிறான்;

## காஸிம் பின் ஹஸன்

திடீரெனக் களத்திலே ஓர் இளைஞர் தோன்றுகிறார்; அவரை ரஃனு என்று அழைக்கின்றனர்; அவர் சட்டையும் லுங்கி(கைலி)யும் அணிந்திருக்கிறார்; கால்களில் நடையன்களிருக்கின்றன; ஆனால் ஒரு செருப்பின் வார் அறுந்திருக்கிறது; அவரின் ஒளி சிந்தும் திருவதனம் பூரணச் சந்திரனை நிகர்த்திருக்கிறது, அடலேறு போன்று அணிகளைக் கிழித்துக் கொண்டு செல்கிறார்; எதிரிகள் அந்த இளைஞரைச் சூழ்ந்து தாக்குகின்றனர்; அவரும் வீறு கொண்டு எதிர்த்துத் தாக்குகின்றார்; எதிரிகளில் பலர் மண்ணைக் கவ்வுகின்றனர்; இறுதியில் அம்ருப்னு அஸ்தீ என்பான் தனது வாளினால் இளைஞரின் சிரசில் தாக்குகிறான்; "அந்தோ என்னருமைச் சிறிய தந்தையே!" எனச் சப்தமிட்டவராய் ரஃனு தரையில் வீழ்கிறார்;

இடிநாதம் போன்ற இக்குரலைக் கேட்ட இமாமவர்கள் பசி கொண்ட புலியைப்போல் சப்தம் கேட்ட திசையை நோக்கிப் பாய்ந்து செல்கிறார்கள்; ஆவேசத்துடன், இளைஞரை வெட்டிய அக்கொடியோனைத் தங்களின் வாளால் தாக்குகிறார்கள்; அவனது கரம் முழங்கையோடு வெட்டுண்டு வீழ்கிறது; அவன் பெருஞ் சப்தமிட்டுக் கூப்பாடு போடுகிறான்; அவனைக் காக்க எதிரிவீரர்கள் விரைகின்றனர்; ஆனால், அவனைக் காப்பாற்றுவதற்குப் பதிலாக நெருக்கடியில் அவனை

இன்னதென்றறியாமல் மிதித்து, நசுக்கி உருக்குலையச் செய்து விடுகின்றனர்.

இந்தக் காட்சியை நேரில் பார்த்த ஒருவர் கூறுகிறார் :

''வானுயர நின்ற புழுதிப்படலம் அகன்றது; ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்க முடிந்தது. அப்போது தான் இமாம் ஹுஸைன் அவர்கள் அந்த வீர இளைஞரின் தலைமாட்டில் நின்று கொண்டிருந்ததை கண்டேன். இளைஞர் தம் குதிக்கால்களை உதறியவராக உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தார். அவரை நோக்கியவாறு இமாமவர்கள், 'உன்னைக் கொலை செய்தவர்கள் அழிந்து படுவது உறுதி. நாளை நியாயத் தீர்ப்பு நாளன்று உன் பாட்டனாரின் (ரசூலுல்லாஹ்) முகத்தில் இவர்கள் எவ்வாறு விழிக்கப்போகிறார்கள்? உன் சிறிய தந்தைக்கு இது ஒரு நெருக்கடியான நேரம். நீ அவரை அழைத்தும் அவர் எப்படி பதிலளிக்காமல் இருப்பார்? அவ்விதம் பதிலளித்தும் உனக்கு அவர் என்ன உதவியைச் செய்துவிட முடியும்? அந்தோ, உன் சிறிய தந்தைக்கு விரோதிகள் பெருகிவிட்டனரே! ஒருவர் கூட நண்பராக இல்லையே!'

''இப்படிக் கூறியவர்களாக இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் அந்த இளைஞரின் ஒளி சிந்தும் சடலத்தை எடுத்து நெஞ்சோடு அணைத்தவாறு கால்கள் தரையில் இழுபடத் தூக்கிக்கொண்டு கூடாரத்திற்கு வந்து அலீ அக்பரின் சடலத்துக்கு அருகில் கிடத்தினார்கள். அந்த இளைஞர் யார் என நான் விசாரித்த பொழுது ஹலரத் அலீ (ரலி) அவர்களின் பேரர்-இமாம் ஹஸன் (ரலி) அவர்களின் அருபுத் திருமைந்தர்-காஸிம் என்பது புலனாயிற்று.'' என்பதாகும்.

காஸிமுக்குப் பின் அவர் சகோதரர் அபூபக்கர், அப்துல்லாஹ் பின் உக்பாவின் கரத்தால் மாண்டார். இவ்வாறாகத் தங்கள் குடும்பத்தினர் ஒவ்வொருவரும் களத்துள் சென்று உயிர்த்தியாகம் செய்து கொண்டிருப்பதையும், இறுதியில், தங்களின் உயிருக்

குமான அருமைச் சகோதரர் இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் தனியராகப் பகைவர்களை எதிர்த்து நிற்க வேண்டிய நிலை ஏற்படுமென்பதையும் மாற்றுந் தாய் உம்முந் நபீன் அம்மையாரின் மகனான அப்பாஸ் பின் அலீ உணர்ந்தார். எனவே, தம் அன்பு அண்ணன் இமாம் அவர்களைக் காக்கத் தம் சகோதரர்களான அப்துல்லாஹ், ஜஃபர், உதுமான் ஆகிய மூவரையும் அழைத்து நால்வருமாகச் சேர்ந்து இமாமவர்களுக்கு முன்பாக வளையமிட்டு நின்று கொண்டார்கள்.

சரமாரியாக வந்த எதிரிகளின் அம்புகளை நால்வரின் பொன்மேனிகளும் வாங்கி வாங்கி, தாங்கித் தாங்கிச் செம்மேனிகளாயின; குருதியைச் சிந்திச் சிந்தி அவை பலவீனப்பட்டுச் சோர்வுற்றன. கேவலம், ஒரு கொசுக்கடிக்கு ஈடு கொடுக்க முடியா மனித சரீரம் வீறுகொண்டு பறந்து வரும் ஈசல் கூட்டம் போன்ற அம்புகளில் எத்தனையைத்தான் ஏற்றுக் கொள்ள முடியும்? எனவே, ஒரு தாய் மக்களான அந்நால்வரும் தங்களின் இன்னுயிர் அண்ணனுக்காகத் தங்களை அர்ப்பணித்தவர்களாக வீர சுவர்க்கம் புகுந்தனர்.

## சிசுவின் ஷஹாதத்து :

காஸிம் பின் ஹஸனின் உடலை அலி அக்பரின் சடலத்திற்குப் பக்கத்தில் கிடத்திவிட்டு இமாமவர்கள் கூடாரத்தை விட்டும் வெளியே நின்றுகொண்டிருந்தார்கள். அத்தருணத்தில் கூடாரத்தில் ஆண் மகவு ஒன்று பிரசவமானது. பிரசவித்த சிசுவை இமாமவர்களிடம் கொண்டுவரப்பட்டது. அதனை பெற்று இமாமவர்கள் தம் மடிமீது வைத்தவர்களாய் அதற்கு அப்துல்லாஹ் என நாமம் சூட்டி சிசுவின் காதில (பாங்கு) சொல்லி ஊதிக் கொண்டிருந்தார்கள். எதிர் பாராத விதமாய் எதிரிகளில் கொடியவனொருவன் குறிவைத்துவிட்ட அம்பு குழந்தையின் குரல்வளையில் வந்து பாய்ந்தது. அக்கணமே, பாலைச் சூழ்ந்த இப்

பாருலகை-பாவி உலகை-கண் திறந்து பாரா அப் பச்சிளஞ் சிசு துடி துடித்து உயிர் விட்டுப் பிரிந்தது.

தைத்த அம்பை உருவி எடுத்தார்கள் இமாமவர்கள்; இரத்தம் தோய்ந்த தங்கள் கரங்களைக் குழந்தையின்மீது தடவியவர்களாக, 'இறைவன்மீது ஆணை! குழந்தையே நீ நபி ஸாலிஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் ஒட்டகையைவிட இறைவன் திருநோக்கில் சிறந்தவன்; ஹலரத் முஹம்மது (ஸல்) அவர்கள் ஸாலிஹ் (அலை) அவர்களைவிடச் சிறந்தவர்கள்; இறைவா! நீ எங்கள் மீது வெறுப்புக் கொள்ளவில்லையாயின், எது நன்மையோ அதை எங்களுக்கு அருளுவாயாக;' என இறைஞ்சினார்கள்;

## தாகம் மேலோங்கியது

இப்பொழுது அஹ்லபைத்துகளில் இமாமவர்களும், நோயால் படுக்கையில் கிடக்கும் அவர்களின் அன்புத் திருமகனார் ஜைனுல் ஆபிதீனும் மட்டுமே எஞ்சியுள்ள ஆண்கள்; எனவே, தன்னந்தனியராக இமாமவர்கள் களத்தில் நின்றுக்கொண்டிருக்கிறார்கள்; இப்னுஜியாதின் ஆணைக்கொப்ப முஹர்ரம் 9-ம் நாளிலிருந்து ஃபுராத் நதியிலிருந்து தண்ணீர் எடுப்பது தடை செய்யப்பட்டுவிட்டது; அப்பாஸ் பின் அலீ உயிரோடிருந்தவரை உயிரைத் திரணமாக மதித்து நதியிலிருந்து தண்ணீர் எடுத்து வந்து கொடுத்துக் கொண்டிருந்தார்; அவருக்குப் பின் சுவர்க்கத்து 'ஹவுலுல் கவ்தர்' ஆற்றுப் பானத்தின் அதிபரான முஹம்மதீ (ஸல்) அவர்களின் பேரருக்கு தண்ணீர் கொண்டுவந்து கொடுப்பதற்கு எவருமில்லை; தங்களின் கூடாரங்களிலிருந்த தண்ணீரெல்லாம் தீர்ந்துவிட்டது;

இறுதி நேரத்தில் இமாமவர்களுக்கு நாவறட்சி ஏற்பட்டது; தொண்டை காய்ந்துவிட்டது. புனிதமான உதடுகளும் உலர்ந்துபோயின. குடும்ப ஆண்களெல்லாம் கூண்டோடு கொல்லப்பட்ட, கொடுமையின் துக்

கம் தொண்டையை அடைக்க, மனமும் மாய உலகை வெறுத்துவிட்டது. இமாமவர்களுக்குத் தாங்க முடியாத தாகம் மேலோங்கிவிட்டது. ஆற்றுக்குத் துணிந்து சென்று தண்ணீர் அருந்துவதைத் தவிர வேறு வழியில்லை. எதுவரினும் வரட்டும் எனத் துணிந்தார்கள்; 'ரஹ்வார்' என்னும் தங்கள் குதிரையின் மீதேறி ஆற்றை நோக்கிச் செலுத்தினார்கள்; எதிரிகள் விடுவார்களா? தடுத்தார்கள்; யாரைத் தடுத்தார்கள்?

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் எங்கேயோ போய்க் கொண்டிருக்கிறார்கள்; பாத்திமா நாச்சியாரின் இல்லத்தினின்றும் குழந்தைகள் அழும் சப்தம் கேட்கிறது; உடனே வீட்டினுள் நுழைந்து, 'என் குமாரர்கள் ஏன் அழுகிறார்கள்?' என்று வினவுகிறார்கள்; 'தண்ணீர் இல்லை; தாகத்தால் குழந்தைகள் அழுகின்றன' என மகள் பாத்திமா (ரலி) பதில் கூறுகிறார். அக்கம் பக்கத்தில் கேட்டும் எங்கும் தண்ணீர் தட்டுப்பாடுதான்! ஹஸன், ஹுஸைன் இருவருக்கும் தங்கள் நாக்கை நீட்டிச் சுவைக்கச் சொல்கிறார்கள் ரசூலுல்லாஹ்; குழந்தைகள் நாவறட்சி நீங்கி அழுவதை நிறுத்தின; அந்தப் பாக்கியம் பெற்ற உதடும் தொண்டையுந்தான் இதுசமயம் கர்பலா பாலைவனத்தில் தாகத்தால் தண்ணீருக்காகத் தத்தளிக்கின்றன.

மக்கமா நகரில் மழை பெய்யாமல் வறட்சி தாண்டவமாடி மக்கள் தண்ணீருக்காகத் துடியாய்த் துடிக்கிறார்கள்; மக்களும் மாக்களும் மாளுகின்றனர்; இஸ்லாத்தின் கொடிய விரோதியான அபூசுப்யான் ஓடோடி வருகிறார்! அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இல்லந்தேடி; 'ஏ, முஹம்மதே! எல்லோரும் சகோதரர்களாக வாழவேண்டுமெனப் போதனை செய்கின்றீரே! உம்முடைய சமூகத்தார் இப்பொழுது தண்ணீரின்றித் தவித்து மாளுகின்றனரே! நீர் மழைக்காக உம் அல்லாஹ்விடம் பிரார்த்திக்கக் கூடாதா?' என்று இரந்து நிற்கின்றார். கருணை வடிவான காத்தமுந் நபியவர்கள் அவ்வாறே மழைக்காக இறைவ

னிடம் இருகரமேந்திப் பிரார்த்திக்கின்றார்கள்; கார்மேகங்கூடி நின்று ஏழு நாட்கள் கனமழை பெய்து மக்கள் தண்ணீர்ப் பஞ்சம் நீங்கி வாழுகிறார்கள். அந்த ரஹ்மத்துன்லில் ஆலமீனின் திருப்பேரருக்கு இன்று நாயும், நரியும், சுயேச்சையாகச் சென்று அருந்தும் ஃபுராத் நதித் தண்ணீர் தடங்கல் செய்யப்படுகின்றது! காலத்தின் கோலத்தைப் பாருங்கள்; மனிதப் பிறவி என்போர் மிருகத்திலும் கேடுகெட்டத்தனமாக நடந்து கொள்கின்ற விந்தையைக் காணுங்கள்!

இஸ்லாம் தோன்றிய நாளிலிருந்து இற்றை நாள் வரை முஸ்லிம்கள் தங்களின் எதிரிகளுக்குத் தண்ணீர் கிடைக்கவிடாமல் தடைசெய்தனர் என்ற ஏதாவதொரு சிறு சம்பவத்தைச் சரித்திர ஏட்டிலிருந்து எவராவது காண்பிக்க முடியுமா? அத்தகைய கொடுமையான உத்தரவைப் பிறப்பித்தான் நாயினும் கடையனை இப்னு ஜியாத் என்பான்; என்னினும், அவன் தன்னை ஒரு முஸ்லிம் என்று கூறிக்கொண்டான்—ஈமானற்றவன், மனிதத்தன்மை மருந்துக்கும் இல்லாதவன்;

இறுதியாகத் தடைகளை மீறி இமாமவர்கள் நதிக் கரையை அடைந்து விட்டார்கள்; ஆற்றில் இறங்கித் தங்கள் கரங்களைக் கிண்ணமிட்டு நீரை அள்ளி வாய்க்குக் கொண்டு சென்றார்கள்; ஒரு முடக்குத் தானும் குடிக்கவில்லை; இதனைக் கவனித்துக் கொண்டிருந்த ஹஸீன் பின் நமீர் என்னும் கொடியோன் அம்பொன்றை விடுத்தான்; அது நேரே வந்து இமாம் அவர்களின் நாவில் (தொண்டையில்) தைத்தது; அதைப் பிடுங்கி எடுத்தவுடன் இரத்தம் கொப்பளித்து கிளம்பியது; அதைத் தங்களின் சிரங்கையில் பிடித்தார்கள்: 'யா அல்லாஹ்! உன் திருத்தூதரின் பேரனார் விஷயத்தில் இவர்கள் நடந்து கொள்ளும் விதத்தையும் அவர்கள் சிந்தியுள்ள இவ்வுதிரத்தையும் நீயே பார்த்துக்கொள்; இதனை நான் உன்னிடமின்றி வேறு யாரிடம் முறையிட்டுக் கொள்வேன்?' என்று கூறியவர்களாக அதனை வானத்தின் பக்கல் விசிறி

எறிந்துவிட்டு ஆற்றினின்றும் தங்கள் கூடாரத்தை நோக்கிப் புறப்பட்டார்கள்;

அண்ணல் நபிகளாரின் திருப்பேரர் இமாம் ஹுசைன் (ரலி) அவர்கள் இப்போது அதிகத் தளர்ச்சியுற்றுவிட்டார்கள் என்பதையும் இனி அவர்கள் தங்களுடன் அதிகம் ஈடு செலுத்த முடியாது என்பதையும் கொடியோனான ஷிம்ருப்னு தில் ஜவ்ஷானும் அவனது ஷாம் துரோகிகளும் நன்கு விளங்கிக் கொண்டனர்; எனவே, இமாமவர்களைப் பரிசுத்த கூடாரங்களின் பக்கல் செல்லவிடாது தடுக்க முனைந்தனர்; அத்தோடு அவன் தன் ஆட்களைப் பெண்கள் கூடாரத்தின் பக்கல் அனுப்பவும் செய்தான்; அவனது தீய எண்ணத்தையும், நீசத்தனத்தையும் புரிந்து கொண்ட இமாமவர்கள் அவர்களை விளித்து, 'உங்களுக்கு மார்க்கம் என்பது எதுவுமில்லையா? ஈமான் என்ற நன்னம்பிக்கையுமில்லையா? இறுதி நாள் (கியாமத்) ஒன்று இருக்கிறது என்ற எண்ணமும் உங்கள் மனதிலிருந்து எடுபட்டு விட்டதா? குறைந்த பட்சம் இவ்வுலகக் கண்ணியத்தின் மீதாவது நிலைத்திருக்கக் கூடாதா? இந்த துஷ்டர்களையும் அறிவீனர்களையும் என் வீட்டார் தங்கியிருக்கும் கூடாரத்தின் பக்கல் போக ஒட்டாமல் தடை செய்யமாட்டீரா?' என்று ஆக்ரோஷத்துடன் கூறினார்கள். இதனைக் கேட்ட ஷிம்ரு 'அவ்விதமே நாங்கள் உங்களின் கூடாரங்களைப் பாதுகாக்கிறோம்' என்றான்.

## "ஏன் தாமதம்? வேலையை முடியுங்கள்"

இப்படியே நேரம் நகர்ந்து கொண்டிருந்தது: இமாமவர்களைப் படுகொலை புரியக் கருதியிருப்பின் வெகு நேரத்திற்கு முன்பே காரியம் முடிந்து போயிருக்கும்: ஆயினும், இந்தப் பழியைச் சுமக்க எவரும் துணிவு பெறவில்லை: இறுதியாக, காலங் கடந்து செல்கிறது என்ற ஆயாசத்தில் தில் ஜவ்ஷான் கூக்குரலிட்டான்: 'உங்களுக்கு என்ன கேடுகாலம் பிடித்தது? உங்கள் தாய்மார்கள் உங்களுக்காக அழட்டும்! ஏன்

தாமதிக்கிறீர்கள்? சீக்கிரம் வேலையை முடியுங்கள்," என்றன்ர மீண்டும் படை சூழ்ந்தது. இந்நிலையினைக் கண்ட இமாமவர்கள், "என்னைப் படுகொலை செய்வதற்காகப் பிறரைத் தூண்டுகிறீர்களா? நினைவிருக்கட்டும்! அல்லாஹ்வின் மீது ஆணையாக, என்னைப் படுகொலை செய்வதால் இறைவனுக்கேற்படும் அதிருப்தியைப் போன்று எவர் விஷயத்திலும் ஏற்படமாட்டாது என்பதனை நான் உங்களுக்கு எச்சரிக்கிறேன்," என்றார்கள்.

எந்தச் சொல்லும் எதிரிகளின் செவிகளில் ஏறுவதாக இல்லை. கொலை பாதகர்கள் இமாமவர்களைத் தாக்க ஆரம்பித்தனர்! இமாமவர்கள் இடையில் லுங்கியும், உடம்பில் சட்டையும், தலையில் தலைப்பாகையும் அணிந்தவர்களாகத் தங்களின் வாளைச் சுழற்றினார்கள். அது கார்மேகத்தினூடே மின்வெட்டுவது போன்று பளிச் பளிச்சென்னச் சுழன்று எதிரிகளை நெருங்கவொட்டாது செய்து கொண்டிருந்தது. சுற்றி வளைத்திருந்தவர்கள் சிங்கத்தைக் கண்டோடும் ஆட்டு மந்தையைப் போல இமாமவர்களின் ஒளிவீசும் பார்வை பட்டதும் வெருண்டு ஓடிக்கொண்டிருந்தார்கள். இந்த நிலை வெகு நேரம் வரை நீடித்தது.

இதனிடையே ஜைனப் பின்து பாத்திமா–இமாமவர்களின் சகோதரி–கூடாரத்தினின்றும் வெளிவந்தார். "வானமிடிந்து பூமியில் வீழட்டும்," என்று உரக்கக் கூவினார். இந்த நேரத்தில் இப்னு ஸஅதை அங்கு கண்டார். ஜைனப், இப்னு ஸஃதை நோக்கி, "ஓ, அம்ரே! உமது கண் முன்னாலும் அபூ அப்துல்லாஹ் கொல்லப்படுவாரா?" என்று பரிதாபமாகக் கேட்டார். இவ்வார்த்தைகளை ஸஃதால் தாங்க முடியவில்லை. முகத்தைத் திருப்பிக் கொண்டார். ஆனாலும், கன்னங்களிலும் தாடியிலும் கண்ணீர் பெருகி வடிந்து கொண்டிருந்தது.

## சிறுவரின் தீரம் :

ஆயிரக்கணக்கான எதிரிகளின் மத்தியில் மனமுடைந்து, பலமிழந்து, தாகத்தால் தவிக்கும் ஜீவனுக

இமாமவர்கள் சிக்குண்டு நின்றார்கள்; இதனைத் தனக்கு வாய்த்த நல்ல தருணமாகக் கொண்டு பஹ்ருப்னு கஃப் என்பவன் இமாமவர்களைத் தாக்க எத்தனித்துக் கொண்டிருந்தான்; அந்நேரத்தில் இமாமவர்களின் இக்கட்டான நிலையைக் கண்டு தாளமாட்டாத சிறுவர் ஒருவர் ஆவேசத்துடன் கூடாரத்தின் முளைக்கம்பொன்றைப் பிடுங்கிக்கொண்டு களம் நோக்கி ஓடி வந்தார்; உள்ளே புகுவதற்கு வலப்புறமும் இடப்புறமும் வழி பார்த்து நின்றார்; இதைக் கண்ணுற்ற ஜைனப் (ரலி) ஓடோடிவந்து சிறுவரைப் பிடித்துக் கூடாரத்திற்கு இழுத்தார்; இதனைப் பார்த்த இமாமவர்களும் அவரைக் கூடாரத்திற்கு அழைத்துச் செல்லுமாறு தங்கையிடம் கூறினார்கள்;

எனினும், அச்சிறுவர் விசும்பித் தன்னை விடுவித்துக் கொண்டு ஓடிச் சென்று இமாமவர்களின் பக்கத்தில் நின்று கொண்டார்; இந்தச் சமயத்தில் பஹ்ரு, இமாமவர்களைத் தாக்கத் தன் உடைவாளை உருவிக் கொண்டு நெருங்கினான்; உடனே அச்சிறுவர் குறுக்கிட்டு, 'அடா கொடியவளின் மகனே! நீ என் தந்தையை (சிறிய தந்தையை) வெட்டவா துணிகின்றாய்?'' என்றார்; அதைக் கேட்டு வெகுண்டெழுந்த அந்த இரக்கமற்ற காதகன் தனது உடைவாளைச் சிறுவர்மீது வீசினான்; அவர் கரத்தால் தாங்கவே, கை வெட்டுண்டுத் தொங்கியது; சிறுவர் வேதனை தாங்க மாட்டாது அலறினார்; உடனே இமாமவர்கள் சிறுவரைத் தூக்கி மார்போடு அணைத்தவர்களாய், ''ஏ, மகனே! பொறுமையாக இருப்பாய். அல்லாஹ் நிச்சயமாக இதற்கு கூலி கொடுப்பான்; அவன் உன்னையும் உன் உத்தம மூதாதையருடன் கொண்டுபோய் சேர்ப்பான். ரசூலுல்லாஹ் அவர்களையும் அலீ, ஹம்ஸா, ஜஃபர், ஹஸன் ஆகியோரையும் நீ காண்பாய்.'' என ஆறுதல் மொழி பகர்ந்தார்கள்; சற்று நேரத்தில் அம்பொன்று பறந்து வந்து சிறுவரைத் தாக்கிற்று; அவர் உயிர் நீத்தார்;

கர்பலா மைதானம் பெரிதும் குமுறிக் கொண்டிருக்கிறது. வாட்கள் மின்னலைப் போன்று ஒளிவீசுகின்றன. இமாமவர்கள் தங்கள் கரத்திலிருந்த கட்கத்தை சுழற்றிக் கொண்டே "இன்று நீங்களெல்லாம் என்னை கொல்லுவதற்கு இங்கு கூடியிருக்கின்றீர்கள்; அல்லாஹ்வின் மீது பிரமாணமாக, எனக்குப் பின் இவ்வளவு பெரிய மகத்தான கொலையை நீங்கள் செய்ய மாட்டீர்கள். அல்லாஹ் உங்களை இழிவாக்குவான்; என்னை மேன்மையாகவே ஆக்கிவைப்பான்; எப்படி தண்டிக்கப்படுகிறோம் என்பதை இன்று நீங்கள் உணரமுடியாத வகையில் அல்லாஹ் உங்களைத் தண்டிப்பான்; உங்கள் மீது அல்லாஹ்வின் கடுமையான வேதனை இறங்கும்; உங்களுக்குள்ளேயே சண்டையால் உதிரம் ஓடும்; அல்லாஹ் உங்களைத் தண்டிக்காமல் விடப்போவதில்லை," என்று சொல்லிக் கொண்டு இருந்தார்கள்.

## இமாமின் ஷஹாதத்

எதிர்பாராத விதமாக பாவி மாலிக் பின் ஷபர் கந்தீ என்பவன் இமாம் அவர்களின் தலையில் தன் வாளை வீசினான். அது அவர்கள் அணிந்திருந்த தலைப் பாகையையும் தொப்பியையும் வெட்டிக் கொண்டு சிரசில் இறங்கியது. அதனின்று உதிரம் பெருகி வந்தது. அது இமாமவர்களின் தலைப்பாகையையும் நனைத்துச் சிவப்பு நிறமாக்கியது.

இமாமவர்களின் நிலைமை நிமிடத்துக்கு நிமிடம் மோசமாகிக் கொண்டே வந்தது. நாவறட்சியுடன் உடம்பு பூராவும் அம்புக் காயங்களின் உதிரப்போக்கு வேறு. இந்நிலையிலும் எவரும் அவர்களை நெருங்கி மரண அடிகொடுக்கத் துணியவில்லை; பின்னடைந்தே நின்றனர். ஷிம்ரு மீண்டும் சப்தமிட்டான், அப்போது தான் ஷாமீ படையினர் இமாமவர்கள் மீது பாய்ந்து விழுந்தனர். ஒருவன் எய்த அம்பு நேரே இமாமவர்களின் கழுத்தில் வந்து பாய்ந்தது. அந்த அம்பைக் கரத்தால் பிடுங்கி எடுத்து அப்பால் வீசி எறிந்தார்கள்.

அந்த நேரத்தில் ஜுர்ஆஃ பின் ஷரீக் தமீமி என்பவன் இமாமவர்களின் வலதுகரத்திலும் பின்னர் கழுத்திலும் தாக்கினான்; இங்ஙனம் அடிக்குமேல் அடிவிழவே இமாமவர்கள் எதிர்த்துத் தாக்க முடியாமல் பலவீனமுற்று நிலைகுலைந்தார்கள். அவையவங்கள் செயலிழந்தன. ஜனங்கள் பீதிகொண்டு பின்வாங்கலாயினர். இப்பரிதாபகரமான நேரத்தில் படுபாவி ஸினான் பின் அனஸ் நஜஃபீ என்பவன் முன்னேறி வெகு வேகமாக ஈட்டியால் குத்தினான்.

## சிரசைத் துண்டித்தனர்

மாமேரு போன்று மண்ணில் வீழ்ந்து கிடந்த மாசற்ற மாணிக்கச்சுடர் இமாம் ஹுஸைன் அவர்களின் திருச்சிரசைக் கொய்தெடுக்க பொல்லப் புலையனான கூலீ பின் எஜீத் என்பான் முன்னோக்கி வந்தான்; ஆனால், அவன் கரங்கள் நடுக்கங் கொள்ளவே அத்தீய காரியத்தை செய்ய வொண்ணாது பின் வாங்கிவிட்டான்; ஆனால் ஈட்டியெய்து அவர்களின் ஆருயிரைக் காவு கொண்ட கொடியோனான ஸினான் என்பவனே பயித்தியம் பிடித்த துணிச்சலுடன் பாய்ந்து சென்று இமாமவர்களின் திருச் சிரசைத் துண்டிதெடுத்துத் தன் கையிலேந்தி வந்தான். சிலர் ஷிம்ருவே இக்காரியத்தைச் செய்தான் எனக் கூறுகின்றனர்.

அந்த ஹிஜ்ரி 61-ம் ஆண்டு முஹர்ரம் மாதம் 10-ம் நாளில் பூமியும் அதிர்ந்தது; வானமும் குமுறியது; காற்றும் மௌனித்து விட்டது; தண்ணீரும் தேக்கமடைந்தது; தண் நிலவும் தரையில் பிரகாசித்திலது; விண்ணவரும் மண்ணவரும் விம்மி அழுதனர்!

ஜஃபர் பின் முஹம்மத் பின் அலி கூறுகிறார்:

'இந்தப் படுகொலைக்குப் பின் இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின் புனித மேனியைக் கவனித்தபோது அதில் அம்புக் காயங்கள் முப்பத்தி மூன்றும் வாள் கொண்டு தாக்கப்பட்ட படுகாயங்கள் முப்பத்தி நான்கும் இருக்கக் கண்டேன்'' என்று. அப்பொழுது இமாமவர்களின் வயது 56-ம் 5 மாதமும்.

ஹலரத் ஹுஸைன் (ரலி) அவர்கள் மரணமடைந்ததும் கூஃபாவின் கொடிய துரோகிகள் அவர்களின் பரிசுத்த (தலையற்ற) பொன் மேனிமீது கிஞ்சிற்றும் மரியாதை காட்டினார்களில்லை. ஆடைகளைக் களைந்து விட்டு அதன்மீது தங்கள் குதிரைகளைச் செலுத்தி மிதித்து நசுக்கினர். கொடியோன் இப்னுஜியாதின் உத்தரவை 'மகாதளபதி' இப்னு ஸஃத் சிரமேற்கொண்டு வன்னெஞ்சக் குதிரை வீரர்கள் பத்துப் பேரைக் கொண்டு இக்'கைங்கரியத்தை' திறம்பட நடத்தி முடித்து அந்த ஈமான் கெட்டவனின் 'நன்மதிப்பை' வாரிக் கட்டிக் கொண்டார். அப்துமுனாப் கிளையிலுதித்தவரின் இரத்தபாசமிது! ரை நகரின் கவர்னராக வருவதற்கான நுழைவுத் தேர்வில் அம்ருப்னு ஸஃது ஈட்டிய முதல்தரமான வெற்றி வாகை!

## ஜைனுலாபிதீன்

இமாமவர்களின் பரிசுத்த மேனியை நசுக்கித் தீர்த்தபின் அக்கொடியவர்கள், பரிசுத்த குடும்பத்தாரான பெண்கள் தங்கியிருந்த கூடாரங்களின் பக்கம் தங்கள் நடையைச் செலுத்தினர். காலியாகக் கிடந்த கூடாரங்களில் இருந்த சாமான்களையெல்லாம் சூறையாடினர். மற்றொரு கூடாரத்தில் இமாமவர்களின் திருப்புதல்வர் சிறுவர் அலீ அஸ்கர் ஜைனுலாபிதீன் நோயில் படுத்திருந்தார். அதனுள் ஹலரத் அலீ (ரலி) அவர்களின் மைத்துனர் மகனான ஷிம்ருப்னு தில் ஜவ்ஷான் தன் ஆட்களுடன் நுழைந்தான். அங்கு ஜைனுலாபிதீன் படுத்திருப்பதைக் கண்டதும் கிஞ்சிற்றும் இருதயமற்றவனாக, 'இவரை மட்டில் ஏன் விட்டு வைக்க வேண்டும்? ஒழித்துக் கட்டுங்கள்' என்றான். அருகில் நின்ற ஹமீத் பின் முஸ்லிம் என்னும் ஷாமீ வீரனின் மனதில் அல்லாஹ் இரக்க எண்ணத்தைப் போட்டான். எனவே அவன், ''சுப்ஹானல்லாஹ்! இவர் சிறுவராயிற்றே! சிறுவயதுப் பையன்களையுமா கொல்லப் போகின்றீர்கள்?'' என்றான்.

அவ்வாறு கூறிக் கொண்டிருக்கும்போதே, அங்கு 'மகாதளபதி' இப்னுஸஃத் வந்தார்; "பரிசுத்த குடும்பத்தார் தங்கியிருக்கும் கூடாரங்களில் நீங்கள் எவரும் உள்ளே பிரவேசிக்கக் கூடாது. எச்சரிக்கை! மேலும் நோயுற்றுக் கிடக்கும் இவரை எவரும் நெருங்கக் கூடாது. சூறையாடப்பட்ட பொருள்கள் அனைத்தையும் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும்," என்று அதிகாரத் தொனியில் கூறினார். இப்னு ஸஃதின் இவ்வார்த்தைகளைக் கேட்ட ஜைனுலாபிதீனுக்கு ஆச்சரியம் மேலிட்டது. அவர் மெல்லிய குரலில், "இறைவன் உமக்கு நன்மையை அளிப்பானாக! உமது கட்டளையால் இன்று நாங்கள் பாதுகாப்புப் பெற்றோம்" என்று தமது நன்றியைத் தெரிவித்துக் கொண்டார்; ஆனால் சூறையாடப்பட்ட பொருட்கள் எதுவும் திருப்பிக் கொடுக்கப்படவில்லை. அவற்றை அவர்கள் மறைத்து அபகரித்துக் கொண்டனர்;

கர்பலாவில் இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் தரப்பில் 72 ஆண்கள் ஷஹீதாயினர்; இவர்களில் அஹ்லபைத்துகளென்னும் இமாமவர்களின் குடும்பத்தாரைச் சார்ந்தவர்கள் 17 பேர்; இவர்களைத் தவிர்த்து உயிருடனிருந்தவர்கள். இமாமவர்களின் மகனான ஜைனுலாபிதீனும், இமாம் ஹஸன் அவர்களின் மக்களான ஹஸனுல் முதன்னாவும் உமரும் ஆவர்.

இவ்வாறு கர்பலா பாலைவன யுத்தகளத்தில் சர்வாதிகார முடியாட்சியை எதிர்த்து ஜனநாயக மக்களாட்சிக்காகப் போரிட்டு தியாக மூர்த்திகளாகிய நபிகள் நாதரின் ஹாஷிம் கிளையைச் சார்ந்த அஹ்லபைத்துகள்-நபிவழித் தோன்றல்கள்-வருமாறு:—

1) அப்துல்லாஹ் பின் உகைல்
2) அப்துர்ரஹ்மான் பின் உகைல்
3) அப்துல்லாஹ் பின் முஸ்லிம் பின் உகைல்
4) முஹம்மது பின் அபூஸயீத் பின் உகைல்
5) அப்பாஸ் பின் அலீ
6) ஜஃபர் பின் அலீ

7) அப்துல்லாஹ் பின் அலீ
8) உதுமான் பின் அலீ
9) முஹம்மத் பின் அலீ
10) அபூபக்கர் பின் அலீ
11) காஸிம் பின் ஹஸன்
12) அபூபக்கர் பின் ஹஸன்
13) அப்துல்லாஹ் பின் ஹஸன்
14) அவ்ன் பின் அப்துல்லாஹ் பின் ஜஃபர்
15) முஹம்மத் பின் அப்துல்லாஹ் பின் ஜஃபர்
16) அலீ அக்பர் பின் ஹுஸைன்
17) அப்துல்லாஹ் பின் ஹுஸைன் (சிசு)

இந்த நிலையில் கர்பலாவில் ஷஹீதானவர்களின் பரிசுத்த உடலங்கள் அங்கு இரண்டு நாட்கள் வரை அப்படியே கிடந்தன. மூன்றும் நாள் காலிரிய்யா என்னும் கிராமத்தைச் சேர்ந்தவர்கள் அவற்றை எடுத்து நல்லடக்கம் செய்து கௌரவித்தனர். இமாமவர்களின் புனித சிரசையும் மற்ற ஷஹீதுகளின் சிரங்களையும் வெட்டி ஈட்டிமுனைகளில் ஷிம்ருவும், அம்ருப்னுல் ஹஜ்ஜாஜும், முர்ரா இப்னு கைஸும் கூஃபாவுக்கு எடுத்துச் சென்றனர்.

## இப்னு ஜியாதின் அவமதிப்பு

அந்தப் புனிதமிக்க தலைகள் கொடியோன் இப்னு ஜியாதின் முன்பாகக் கொண்டுபோய் வைக்கப்பட்டன. அந்த மண்டபத்தில் மக்கள் கூட்டம் நிறைந்து வழிந்தது. இப்னு ஜியாத், இமாம் அவர்கள் சிரத்தின் உதடுகளையும் பற்களையும் தன் கைத்தடியால் அடிக்கடி தடவிக் கொண்டும் தட்டிக்கொண்டும் இருந்தான். இந்த அவமரியாதைச் செயலைக் காணப் பொறாத ஆங்கிருந்த ஜைத் பின் அர்கம் (ரலி) அவர்கள் அந்தக் கொடுமையாளனை நோக்கி 'ஏ, இப்னுஜியாதே! உனது கைப்பிரம்பை அப்பாலாக்கு. அல்லாஹ்வின் மீது பிரமாணமாக, ரசூலுல்லாஹ் அவர்களின் உதடுகள் இந்தச் சிரசின் புனித உதடுகளில் முத்தமிடுவதை இந்த என் இரு கண்களா

றும் கண்டிக்கிறேன்' என்று அழுதுகொண்டே கூறினார்: இதனைக் கேட்ட உன்மத்தன் வெகுண்டெழுந்து 'அல்லாஹ் உம்மைச் சதா அழுதுகொண்டே இருக்கு மாறு செய்வானாக! நீர் கிழடு தட்டித் தளர்ந்து போய் மட்டும் இல்லாதிருந்தால் உமது கழுத்தை இந்த இடத்திலேயே துண்டித்திருப்பேன்' எனத் துடுக்காகப் பேசினான். மரியாதைக் கேடனின் இவ்வார்த்தைகளைக் கேட்டதும் ஜைத் அவர்கள்,

'அராபியர்களே! இன்று முதல் நீங்கள் அடிமை என்ற பேடி விலங்கை மாட்டிக்கொண்டீர்கள்: நீங்கள் இப்னு (மைஸூனா) மர்ஜானாவின் (எஜீதின்) ஆக்ஞைப்படி இப்னு சுமய்யாவின் (இப்னுஜியாதின்) சொல் கேட்டு பாத்திமா (ரலி)வின் திருப்புதல்வர் ஹுஸைனைக் கொலைசெய்துவிட்டீர்கள்: இப்னு மர்ஜானா அநேகப் பெரியோர்களையும், நல்லவர்களையும் கொன்றொழித்துவிட்டான்; கௌரவம் மிக்கவர்களை யெல்லாம் அடிமைகளாக்கிவிட்டான்: இந்தக் கேவல மான காரியங்களைச் செய்ய நீங்கள் ஒத்துழைத்தீர்கள். இழிவைத் தேடிக்கொண்டீர்கள்; இழிவை ஏற்றுக் கொண்டவர்களை இறைவன் அழியச் செய்வானாக! இத்தகைய கேவலமானவர்களை விட்டும் விலகி எட்டத்திலிருப்பதே மிகவும் நன்மையாகும்' எனக் கூறியவராய் அவ்விடத்தினின்றும் அகன்றார்.

## பரிசுத்த குடும்பத்தார் பரிதாபம்

கர்பலா யுத்தம் முடிந்த இரண்டாம் நாள் இமாமவர்களின் இல்லத்துப் பெண்களும், குழந்தைகளும், பணிப்பெண்களும் கூஃபாவுக்குக் கொண்டு செல்லப் பட்டனர்: பிரயாணக் 'காபிலா' ஷுஹதுகளின் சடலங்கள் கிடந்த பாதை வழியே சென்றது; அப்பொழுது அவை எடுத்து நல்லடக்கம் செய்யப்படாத நிலையில் கிடந்தன. இக்கோரக் காட்சியினைக்கண்ட பெண்கள் கோவெனக் கதறி அழுத சத்தம் விண்ணைப் பிளந்தது; பீபீ ஜைனப் (ரலி) துக்கம் மீறிய ஆத்திரத்துடன், 'என் அருமைப் பாட்டனாரகிய

முஹம்மது (ஸல்) அவர்களே! இங்கு வாருங்கள்; இக் காட்சியைப் பாருங்கள்! ஹுஸைனுடைய புனித மேனி இத்திறந்த மைதானத்தில் சின்னாபின்னமாக் கப்பட்டு, உதிர வெள்ளத்தில் புரண்டு கிடக்கிறது; தங்கள் குமாரிகளெல்லாம் கைதிகளாக நிற்கிறோம்; உங்களுடைய சந்ததியாரெல்லாம் கொல்லப்பட்டு இதோ, இந்த மணல் வெளியில் கிடக்கின்றனர்; இவர்கள்மீது காற்று மண்ணை வாரி வீசிக்கொண்டிருக் கிறது' என்று அபயங் கோரிக் கதறினார்; உள்ளத்தை உருக்கும் இவ்வார்த்தைகளைக் கேட்ட நேசர்களும், பெண்களும் மற்றவர்களும், ஏன் அந்தக் கொடிய கூஃபா வாசிகளும்கூட மனமிளகி அழலானார்கள்.

'காபிலா' வழி நடந்து சென்று கூஃபா நகரத்தை அடைந்தது. நபிகள் நாதரின் குடும்பத்துப் பெண் களும் குழந்தைகளும் கொடியோன் இப்னுஜியாதின் முன் கொண்டுவந்து நிறுத்தப்பட்டனர். பீபீ ஜைனப் கந்தலான அழுக்கடைந்த ஆடைகளுடன் காலணி யின்றி வெற்றுக் காலுடன் நின்றிருந்தார். அவரை இனங்கண்டு கொள்ள முடியாதவனாய் சுமய்யாவின் மைந்தன் அவரைச் சுட்டிக்காட்டி, 'இவ்வித கேவல மான நிலையில் காணப்படும் இப்பெண்மணி யார்?' எனக் கேட்டான். பீபீ ஜைனப் பதில் ஏதும் கூற வில்லை. மீண்டும், மீண்டும் கேட்டான். பதிலில்லை, அதன்பின் ஒரு பணிப்பெண், 'இவர் பாத்திமாவின் திருப் புதல்வி ஜைனப்' என்றாள்.

## இப்னு ஜியாத்-பீபீ ஜைனப் விவாதம்

இப்னுஜியாத் ஏளனச் சிரிப்பொன்றை வெடித்த வனாக, 'எல்லாப் புகழும் இறைவனுக்கே! அவன் உங்களை இழிவுக் காளாக்கினான்! அழிவுறச் செய் தான்; உங்களின் தாவாக்களைப் பொய்யென நிரு பித்தான்; உங்களின் பெயர் நாமத்தின் மீது கறை படியச் செய்தான்,' என்றான்.

உடனே பீபீ ஜைனப், 'அல்லாஹ் தஆலாவிற்கே ஆயிரமாயிரம் புகழ்! அவன் எங்களுக்கு முஹம்மது

(ஸல்) அவர்கள் வாயிலாக கண்ணியமளித்தான்; எங்களைப் பரிசுத்தமானவர்களாக்கினான். நீர் கூறுவது முற்றிலும் தவறு; துன்மார்க்கர்களே இழிவை அடைபவர்கள். பாவிகளின் பெயர் நாமத்திலேதான் கறைபடியும்; பொய்யர்களும் இவர்கள்தான்!' எனச் சுடச் சுட பதில் கூறினார்.

இப்னு ஜியாத்: 'ஆண்டவன் உம் குடும்பத்தார் விஷயத்தில் எவ்வாறு நடந்து கொண்டான் என்பதைப் பார்த்தீரா?'

ஜைனப்: 'இறைவன், அவர்களுடைய விதியாக மரணம் அடைய வேண்டுமென்று எழுதியிருந்தான்; அவ்வாறே அவர்கள் களம் வந்தார்கள்; ஷஹாதத்தைப் பெற்றுக் கொண்டார்கள். வெகு சீக்கிரத்தில் ஆண்டவன் உம்மையும் அவர்களையும் ஓரிடத்தில் சந்திக்க வைக்கத்தான் போகிறான். அப்பொழுது அவர்கள் அல்லாஹ்விடம் உன் விஷயத்தில் நியாயம் கோரவே செய்வார்கள்.'

கடுமையான இவ்வார்த்தைகளைக் கேட்ட சுமய்யாவின் மைந்தனின் கண்கள் சிவந்தன; அவன் கோபமடைவதைக் கண்ட அம்ருப்னு ஹரீத் தலையிட்டு, 'இறைவன் அமீருக்குப் பொறுமையைத் தருவானாக! இவர் ஒரு பெண்; பெண்களின் பேச்சை நாம் பொருட்படுத்தலாகாது,' என்றார்.

சற்று நேர மவுனத்திற்குப்பின் இப்னு ஜியாத், "உமது மூர்க்கத்தனமான, சொற்கேளாத் தலைவரையும் நபித்துவக் குடும்பக் குழப்பக்காரர்களையும் கொலைச் செய்து இறைவன் என் கோபத்தைத் தணிய வைத்து, கண்களைக் குளிரச் செய்தான்," என்றான்.

அக்கொடியான், தம் அன்புச் சகோதரர் இமாம் ஹுசைன் (ரலி) அவர்களைத்தான் இவ்வாறு சொல்லம்பு கொண்டு தாக்குகிறான் என்பதைப் புரிந்து கொண்ட பீபி ஜைனப் (ரலி), வாய்விட்டு அலறி அழுதவராய்,

 

"நீர் எங்கள் பெரியோர்களைக் கொன்று குவித்தீர்; எங்கள் இல்லத்தார்களை யெல்லாம் வெளிப்படுத்தி விட்டீர்; எங்கள் கிளைகளை யெல்லாம் துண்டித்தீர்; எங்களின் அடிவேர்களை யெல்லாம் பிடுங்கி எறிந்தீர்; இவ்வளவையும் செய்து முடித்ததின் பின்னர்தான் உமது கண் குளிருகிறதென்றால், அது நன்றாகக் குளிரட்டுமே!" என்றார்.

இப்னு ஜியாதுக்குக் கோபம் கொப்பளித்துக் கொண்டு வந்தாலும் அதை அடக்கிக் கொண்டு, ஏளனமாக,

"ஆகா! இதுவல்லவோ வீரம். ஏன் நீர் பேசமாட்டீர்? உம் தந்தைதான் மாபெரும் வீரரென்பது உலகப் பிரசித்தமாயிற்றே!" என்று குத்தலாகக் கூறினான்.

இதற்கு பீபீ ஜைனப், 'பெண்ணுக்கும் வீரத்திற்கும் என்ன சம்பந்தம்? என்னைச் சூழ்ந்து நிற்கும் துன்பத்தில், வீரத்தைப்பற்றி நான் நினைத்துப் பார்க்கத்தான் முடியுமா? இப்பொழுது நான் பேசுவதெல்லாம் எனது உள்ளத்தில் பற்றி எரிகிற நெருப்பாகும்,'' என்று கூறி முடித்தார்.

## இப்னு ஜியாதும் ஜைனுலாபிதீனும்

இப்பொழுது சுமய்யா மைந்தனின் பார்வை அங்கு நின்றிருந்த இமாம் ஹுஸைன் அவர்களின் குலக் கொழுந்தான ஜைனுலாபிதீன் மீது விழுந்தது. அவரை நோக்கி,

இப்னு ஜியாத்: "உமது பெயரென்ன?"

ஜை. ஆபிதீன்: 'என் பெயர் அலீ பின் ஹுஸைன்.'

இ. ஜியாத்: 'அப்படியா! அலீ பின் ஹுஸைனை ஆண்டவன் ஏன் கொல்லாது விட்டு வைத்தான்?'

ஜைனுலாபிதீன் பதில் கூறாமல் மௌனித்து நின்றார்.

இ. ஜியாத்: 'ஏன், ஏதும் பதிலளிக்காமல் நிற்கின்றீர்?'

ஜை. ஆபிதீன்: 'என் மற்றொரு சகோதரரின் பெயரும் அலீதான். அவரை ஜனங்கள் வெட்டிக் கொன்று விட்டார்கள்.'

இ. ஜியாத்: 'இல்லை, இல்லை, ஜனங்கள் கொல்லவில்லை; ஆண்டவன்தான் கொன்று விட்டான், அப்படியானால் இறைவன் அவரை மட்டும் ஏன் கொன்றான்?''

ஜைனுலாபிதீன் மௌனமாக நின்றார்.

இ. ஜியாத்: 'மீண்டும் ஏன் மௌனமாக நிற்கின்றீர்?'

ஜை. ஆபிதீன்: 'அல்லாஹ்தான் ஒவ்வொரு மனிதனையும் அதற்குரிய தருணத்தில் மரணிக்கச் செய்கிறான்; மேலும், அல்லாஹ்வின் அனுமதியின்றி எந்த மனிதனும் மரணம் அடைவதில்லை.' இந்தத் திருவசனத்தை அந்தக் கடையிழந்தவனுக்கு ஓதிக் காண்பித்தார்.

இதனைக் கேட்ட இப்னுஜியாத் இடியேறுண்ட நாகம் போல் அதிர்ச்சியடைந்தவனாய்,

'அப்படியானால், நீயும் அவர்களைச் சேர்ந்தவனே!' எனச் சீறினான்.

பின்னர், ஜைனுலாபிதீனுடைய வயதை விசாரித்து இவர் தக்க வாலிபத்தை அடைந்துள்ளார் என்பதை அறிந்ததும், அவரையும் கொன்று விடுமாறு உத்தரவிட்டான் அக்கொடியோன் இப்னுஜியாத்.

இதனைக் கேட்ட ஜைனுலாபிதீன், ''என்னுடனிருக்கும் இப்பெண்மணிகளை யார் வசம் ஒப்புவிக்கப் போகிறீர்?'' என்று மட்டும் கேட்டார்.

இப்னுஜியாதின் இக்கொடிய உத்தரவு செவியில் பட்டதும் பீபீ ஜைனப் பாய்ந்து வந்து ஜைனுலாபிதீனைக் கட்டிப் பிடித்துக் கொண்டு அப்பாபாதகனை

நோக்கி, "இன்னமும் உமக்கு எங்கள் மீதிருக்கும் இரத்த வெறித்தாகம் தீரவில்லையா? எங்களுக்குத் துணையாக இருக்க ஒருவரையாவது நீர் பாக்கியாக விட்டு வைக்கக் கூடாதா? இறைவனை முன்னிறுத்தி உம்மிடம் கேட்கிறேன், நீர் ஒரு மூமினாக இருப்பது உண்மையானால், இந்த இளைஞரைக் கொல்லத்தான் வேண்டுமென நீர் தீர்மானித்தால், இவரோடு என்னையும் சேர்த்துக் கொன்றுவிடும். இதற்கு மேலும் நான் இந்தக் கொடுமை நிறைந்த உலகில் வாழவேண்டுமென்ற அவசியமில்லை;" என்று கதறினார்.

ஜைனுலாபிதீன் சிறிதும் மனங்கலங்காத சிங்கமென நின்றுகொண்டு சுமய்யாவின் மகனை நோக்கி,

"நீர் என்னைக் கொல்லவேண்டுமென்றிருந்தால், நீர் தாய்க்குலத்தின்மீது ஏதும் மதிப்பும் மரியாதையும் கொண்டிருந்தால், என்னைச் சார்ந்த இப்பெண்களையெல்லாம் கண்ணியமான பெருந்தன்மை வாய்ந்த ஒருவரிடம் நீர் ஒப்புவித்து, பக்தியொழுக்கமுள்ள பெண்கள் துணையுடன்—அவர்கள் இஸ்லாமிய முறைப்படி இப்பெண்களிடம் நடந்துகொள்பவர்களாக இருக்கவேண்டும்—நல்ல முறையில் ஊருக்கு அனுப்பிவைக்கவேண்டும். இந்த ஒரு பேருதவியைத் தான் செய்யுமாறு நான் உம்மை கேட்டுக்கொள்கிறேன்," என்று கூறி முடித்தார்.

இப்னுஜியாத் வெகுநேரம் வரை பீபி ஜைனபை இமை கொட்டாமல் பார்த்துவிட்டு அங்கு குழுமியிருந்த மக்களை நோக்கி, "பார்த்தீர்களா, இரத்த பாசம்தான் எவ்வளவு ஆச்சரியகரமானது; வலுவானது! உண்மையிலேயே இந்தப் பெண்ணும் அந்த இளைஞருடன் சேர்த்துக் கொல்லப்படுவதையே விரும்புகிறார், சரி போகட்டும். அவரை விட்டு விடுங்கள்; அவரும் தம் குடும்பத்தாரின் பாதுகாப்புக்காகவே சேர்ந்து செல்லட்டும்;" என முடிவாகக் கூறினான்; அல்ஹம்துலில்லாஹ்! இதுசமயம் இறைவன் அவனது பசுமையற்ற பாறையொத்த உள்ளத்தில்

இரக்கமென்ற பசுந்தளிரை முளையிடச் செய்துவிட் டான்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு இப்னு ஜியாத் நகர மக்களனைவரையும் கூஃபாவின் ஜும்ஆ மஸ்ஜிதில் ஒன்றுகூடச் செய்து அவர்கள் மத்தியில் பின்வருமாறு பேசினான்:

''எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன் சத்தியத்தை வெளிப்படுத்தி உண்மையாளிகளுக்கு வெற்றியைத் தந்தான். அமீருல் மூமினீன் எஜீதிப்னு முஆவியாவும் அவர்தம் அணியினரும் வெற்றி பெற்றார்கள். பொய்யரின் மகன் பொய்யர் ஹுசைன் இப்னு அலீயும் அவரின் ஆதரவாளர்களும் கொல்லப் பட்டுப் போனார்கள்,'' என்றான்.

அங்கிருந்து இவ்வார்த்தைகளைக் கேட்ட அப்துல் லாஹ் இப்னு அபீப் அஸ்தீ என்ற பெரியார் (இவர் ஹலரத் அலீ (ரலி) அவர்களின் தலைசிறந்த நண்பர், ஜமல், ஸிப்பீன் யுத்தங்களில் பங்கு கொண்டு வீரதீரத் துடன் போராடிப் படுகாயமுற்றுத் தமது இரு கண் களையும் இழந்திருந்தவர்) உடனே எழுந்து நின்று, ''இறைவன் மீது ஆணையாக! சுமய்யாவின் புதல்வனே! பொய்யனின் மகன் பொய்யன் நீதான்; ஹுசைன் இப்னு அலீ அல்ல,'' என்று மிக்க ஆவேசத்துடன் கூறி னார். உடனே அன்னாரைப் பிடித்துக் கொன்றுவிடு மாறு இப்னு ஜியாத் உத்தரவிட்டான்.

## எஜீதிடம் பரிசுத்த குடும்பத்தார்:

நபிகள் பெருமானார் (ஸல்) குடும்பத்தாரின் விவ காரங்களையெல்லாம் கேட்டுத் தெரிந்தபின், அவர்களை யெல்லாம் இப்னு ஜியாத் ஷாம் தேச திமிஷ்க் பட்ட ணத்துக்கு எஜீதிடம் அனுப்பிவைத்தான். முற்கூட் டியே இமாம் ஹுசைன் அவர்களின் சிரசை ஓர் ஈட்டி யில் குத்தி ஜுஹர் பின் கைஸ் என்பவனிடம் கொடுத்தனுப்பினான். பரிசுத்த குடும்பத்தினர்கள் அனைவரும், போதும், போதும் பட்ட துன்பங்கள்.

இத்துடனாவது இந்த 'முஸீபத்' ஒருவாறு நீங்கிற்றே என்று அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தி ஆறுதல் பெருமூச்சுவிட்டவர்களாக ஆங்கிருந்து புறப்பட்டனர்.

மேன்மை பெற்ற குடும்பத்தாரிடத்து சுமய்யாவின் மகன், பேசிய அவமானகரமான புண்படுத்தும் பேச்சுகளும் இழிவான நடவடிக்கைகளும் அவனது கொடிய சொந்தக் கருத்துகளைச் சார்ந்தவையாகும். கர்பலாவில் நடந்த அக்கிரமங்களுக்கும் எஜீதுக்கும் நேர் தொடர்பு இல்லையாயினும், எஜீதின் நன்மைக்காகவும் அவரது அன்பைச் சம்பாதித்துக்கொள்ளும் சுயநலத்தின்மீதும் இப்னுஜியாத் கடைப்பிடித்த முகடு முட்டிய அக்கிரமத்தின் வெறியாட்டமாகும் அவை. உண்மை விளக்கமானதின் பின்னும், முஸ்லிம்களின் தலைவர் என்னும் கலீபா பதவியில் வீற்றிருந்த எஜீது, அக்கிரமக்காரர்களை உரிய முறையில் தண்டிக்க முன்வரவில்லை; ஒப்புக்கு வாயால் சபித்ததோடு சரியாகிவிட்டது.

கர்பலாவில் நடந்த அக்கிரமக்கொலைகளெல்லாம் இப்னுஜியாதின் உத்தரவை சார்ந்தவையாகும். ஹஸரத் இமாம் ஹுஸைன் அவர்களைக் கொல்லுவதற்கு எஜீது கட்டளையிடவில்லை; நடந்தது எஜீதுக்குத் தெரியாது. அவ்வாறு கொலை செய்வதற்கு இப்னுஜியாத் எழுதிக் கேட்கவில்லை. உத்தரவு கேட்டிருந்தால் எஜீது அது நடக்காதவாறு தடுத்தே இருப்பார். கர்பலாவில் நடந்த நபி குடும்பத்தாரின் பாதகக் கொலைகள் பற்றிய விஷயம் எஜீதின் வாழ்நாள் பூராவும் மனதை அறுத்துக்கொண்டே இருந்திருக்கிறது.

## எஜீதின் துக்கம் :

ஜுஹர் பின் கைஸ், யஸீதின் தர்பாருக்கு வந்ததும் 'என்ன சேதி?' எனக் கேட்டார்.

அவன் மகிழ்ச்சி பொங்க வளைந்து நெளிந்து அபிநயத்துடன்,

''அமீருல் முமினீன்! வெற்றியின் நற்செய்தியைத் தாங்கி வந்திருக்கிறேன்; ஹுஸைன் இப்னு அலீ, தம்முடன் தம் குடும்பத்தாரில் பதினெட்டுப் பேர்களையும், அழைத்துக்கொண்டு வந்திருந்தார். நாங்கள் அவரை முன்னேறிச் சென்று தடுத்தோம்; சரணடையுமாறும் இல்லாவிடில் போர்மூளுமென்றும் எச்சரித்தோம்; அவர் சரணடைய மறுத்துச் சண்டைக்குத் தயாரானார்; எனவே, நாங்கள் முஹர்ரம் 10-ம் நாள் சூரியோதயத்திற்கு முன்பே போர்ப் பிரகடனம் செய்தோம். எங்களுடைய வாட்கள் அவர்களின் சிரங்களுக்குமேல் உயர்ந்ததுமே, இராஜாளிகளைக் கண்ட புறாக்கள் பறந்து சென்று பதுங்குவதைப்போல் சிதறி ஓடத் துவங்கி மரங்களுக்குப் பின்னாலும், பாழுங்குழிகளிலும் ஓடிப்போய்ப் பதுங்கலானார்கள். பிறகு நாங்கள் அவர்களை முறியடித்தோம்; இன்று அவர்களின் சடலங்கள் நிர்வாணமாகச் சிதறிக் கிடக்கின்றன; அவர்களின் ஆடைகள் இரத்தத்தில் தோய்ந்திருக்கின்றன; அவர்களின் வதனங்கள் புழுதிபடிந்து அழுக்கடைகின்றன. அவர்களின் உடல்கள் வெய்யிலின் கொடுமையாலும் காற்றின் தாக்குதலாலும் உலர்ந்து காணப்படுகின்றன; கழுகுகளுக்கு அவர்கள் இரையாகி வருகிறார்கள்'' என்று கூறி முடித்தான். ஜுஹர் பின் கைஸின் நோக்கம், தான் இவ்வாறு கூட்டிக் குறைத்துக் கூறினால் எஜீது அதை நன்கு ரசித்துச் சன்மானம் வழங்குவார் என்பதாகும்.

ஜுஹர் கூறியவற்றைக் கேட்டுக் கொண்டிருந்த எஜீது மனம் நொந்து கண்ணீர் உகுத்தவாறு, 'நீங்கள் ஹுஸைனைக் கொல்லாமல் இருந்திருந்தால் நான் சந்தோஷம் அடைந்திருப்பேன். உங்களின் கடமை உணர்ச்சியைப் பாராட்டி இருப்பேன். இப்னு சுமய்யா (இப்னு ஜியாத்) மீது அல்லாஹ்வின் 'லஃனத்' (கோபப்பார்வை) விழட்டும்; அல்லாஹ்வின் மீது ஆணையாக, நான் அங்கு (கர்பலாவில்) இருந்திருப்பேனாயின், ஹுஸைனைக் கொல்ல அனுமதித்திருக்க மாட்டேன்; மன்னித்திருப்பேன்; ஆண்டவன் ஹுஸைனுக்கு ரஹ்மத் செய்தருள்வானாக!' என்று கூறினார்.

இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின் சிரசை ஜுஹர் மூலம் அனுப்பிவைத்தபின் இப்னு ஜியாத், அஹ்லுல் பைத்துகளையும் ஷிம்ருப்னு தில்ஜவ்ஷான், மஹ்லர் இப்னு தஃலபா தலைமையில் திமிஷ்குக்கு அனுப்பி வைத்தான். ஜைனுலாபிதீன் வழி நெடுகிலும் வாய்திறந்து பேசவில்லை; தலை தோய்ந்து மௌன மாகவே வந்து கொண்டிருந்தார்.

யஜீதின் தலைவாயிலை அடைந்ததும் இப்னு தஃலபா உரத்தக் குரலில், 'யா அமீருல் மூமினீன், மஹ்லர் பின் தஃலபா துஷ்டர்களுடையவும் பாவிகளுடையவும் சிரங்களைக் கொண்டு வந்திருக்கிறேன்.' என்றான். இந்த சப்தத்தைக் கேட்டதும் யஜீத், 'மஹ்லருடைய தாயைவிட எந்தப் பெண்ணும் ஈனத்தனமான, துஷ்டத்தனமான ஒரு பிள்ளையைப் பெற்றிருக்கவில்லை' என்று கடிந்து கூறினார்.

பின்னர், கர்பலாவில் கொலைலப்பட்டவர்களின் சிரங்களெல்லாம் எஜீத் முன் கொண்டு வந்து வைக்கப் பட்டன. ஹலரத் இமாம் ஹுஸைன் (ரலி) அவர் களின் சிரத்தின்மீது எஜீதின் பார்வை பட்டதும், மன மிளகும் தன்மையில் ஒரு கவியைப் பாடியவராக, 'ஏ, ஹுஸைனே! நான் உமதருகே இருந்திருப்பேனாயின், உம்மை நான் கொன்றேயிருக்கமாட்டேன்' என்று கூறினார். அது சமயம், யஹியா பின் ஹகம் என்பவன், இப்னு ஜியாதைப் போற்றியும் பரிசுத்த குடும்பத்தார் களைத் தூஷணித்தும் ஒரு கவியைப் பாடினான். இதைக் கேட்டதும் யஜீத், யஹ்யாவின் மார்பில் ஓங்கி அறைந்து அவன் பாடுவதை நிறுத்தினார்.

பின்னர், பரிசுத்த குடும்பத்தார்களின் பெண்களை யும் பிள்ளைகளையும் தன்னெதிரே அழைத்து வரச் சொல்லி அவர்களை அமரச் செய்தார். அவர்களெல் லாம் கிழிந்த அழுக்கடைந்த ஆடைகளுடன் பரிதாப கரமான நிலையில் காணப்பட்டனர். இக்கோலத்தைக் கண்டு யஜீத் சகிக்கப் பொறுதவராய், 'ஆண்டவன் இப்னு சுமய்யாவை 'லஃனத்' செய்வானாக! உங்களுக்

கும் அவனுக்குமிடையே சொந்தமும் பந்தத்துவமும் இருந்திருக்குமாயின் இம்மாதிரிக் கேவலமான முறையில் அவன் உங்களை என்னிடம் அனுப்பியிருக்க மாட்டான்' என்று மிகுந்த கழிவிரக்கத்துடன் கூறினர்.

பீபீ பாத்திமா பின்த் அலீ கூறுகிருர்: 'நாங்கள் யஜீதின் முன்னிலையில் உட்கார்த்தப்பட்டபோது, எங்களின் நிலையைக் கண்டு அவர் மிகவும் சஞ்சலமடைந்தார். எங்களுக்கு எல்லாவித உபசரணைகளும் செய்வதற்கு ஏற்பாடு செய்தார். எங்களுடன் யஜீது மிக்க அன்புடன் நடந்துகொண்டார். என் தந்தைக்கும் எங்களுக்கும் விரோதியாயிருப்பவர் எப்படியிருப்பாரோ வென்று நாங்கள் பெரிதும் அஞ்சினேம்: ஆனல், நாங்கள் எஜீதின் முன் கொண்டுவரப்பட்ட பின் நடந்த விஷயங்களும் உபசாரங்களும் எங்கள் எண்ணங்களையெல்லாம் தலைகீழாக்கிவிட்டன', என்று;

## எஜீதும்-ஜைனுலாபிதீனும்

பிறகு யஜீது ஷாம் தேசத் தலைவர்களைத் தமது அவைக்கு அழைத்திருந்தார். அங்கு உட்கார்ந்திருந்த ஜைனுலாபிதீன் அவர்களை நோக்கி, 'ஏ, அலீ! உம் தந்தைதான் எங்களது உறவை முறித்துக் கொண்டார், எனக்குச் செலுத்தவேண்டிய கடமையில் தவறிழைத்தார்; எனது ஆட்சியைக் கைப்பற்ற விரும்பினர்; இதனல் அவர் என்ன தண்டனை அனுபவிக்க வேண்டுமோ அந்தத் தண்டனையை இறைவன் அனுபவிக்கச் செய்தான்,' என்ருர். இதனைக் கேட்ட ஜெய்னுலாபிதீன் அவர்கள்,

'பூமியிலுஞ்சரி, உங்களுக்கு மத்தியிலுஞ்சரி, ஏற்படக்கூடிய எந்த ஒரு துன்பமும், அது ஏற்படுவதற்கு முன்னதாகவே 'லவ்ஹுல் மஹ்பூல்' என்னும் பதிவுப் புத்தகத்தில் பதியப்படாமலில்லை. நிச்சயமாக அது அல்லாஹ்வுக்கு மிக்க எளிதானதே!'

'உங்களை விட்டும் தப்பிப் போனதைப்பற்றி நீர் கவலை கொள்ளாதிருக்கவும், (அல்லாஹ்) உங்களுக்கு

கொடுத்ததைப் பற்றி நீங்கள் கர்வங்கொள்ளாதிருக்கவும் (இதனை உங்களுக்கு அறிவிக்கிறான்); அல்லாஹ் கர்வங் கொள்வோரையும் பெருமை அடிப்போரையும் நேசிப்பதில்லை' என்ற திருவசனங்களை ஓதிக் காண்பித்தார்;

இந்த பதில் யஜீதின் உள்ளத்தில் முள் போன்று தைத்தது; உடனே தம் மகன் காலிதை நோக்கி 'அவருக்கு நீ பதில் சொல்' என்றார்; காலிதுக்கு ஒன்றுங் கூறமுடியாது பேந்தப் பேந்த விழித்தான்; இதனைப் புரிந்து கொண்ட யஜீது,

'உங்களைத் தீண்டும் எந்தத் துன்பமும், உங்களின் கரங்கள் சம்பாதித்துக் கொண்டவேயாகும்; அவன் (அல்லாஹ்) பெரும்பாலானவற்றை மன்னித்து விடுகிறான்' என்ற திருவசனத்தை ஓதிக் காண்பிக்குமாறு தம் மகனிடம் கூறினார்.

## யஜீது - ஜைனப் விவாதம்

பீபீ பாத்திமா பின்த் அலீ மேலும் கூறுகிறார்: 'நாங்கள் எஜீதின் அவையில் வீற்றிருக்கும்பொழுது, செந்நிறத் தோற்றமுடைய ஷாம்வாசி ஒருவன் எழுந்து என்னைச் சுட்டிக்காட்டி, 'அமீருல் மூமினீன்! இந்தப் பெண்ணை எனக்கு அன்பளிப்புச் செய்யுங்கள்' என்றான், நான் அப்பொழுது இளம் வயதுச் சிறுமியாகவும், அழகு சௌந்தர்ய முள்ளவளாகவும் இருந்தேன்; எனக்கோ ஒரே பயம்; அச்சத்தால் நடுங்கலானேன்; என் சகோதரி ஜைனபின் மேலாடையைப் பற்றிப் பிடித்துக் கொண்டேன்; அவர் என்னைவிட மூத்தவர்; நல்ல புத்திக் கூர்மையுடையவர். அவர் அவனை நோக்கி, 'நீ ஒரு அற்பன்; இதற்கு உனக்கோ, யஜீதுக்கோ எந்தவித அதிகாரமும் கிடையாது' என்றார்;

துணிச்சலான இந்தப் பேச்சைக் கேட்டு யஜீது சினங்கொண்டவராய்,

''நீ பொய் புகலுகிறாய்; அல்லாஹ்வின்மீது ஆணை! எனக்கு இந்த உரிமை இருக்கிறது; நான் விரும்பினால் இப்போதே என்னால் இதனைச் செய்ய முடியும்' என்றார்.

ஜைனப்: 'முடியாது. இது ஒரு போதும் சாத்தியமில்லை; இறைவன் இந்த அதிகாரத்தை உமக்குக் கொடுக்கவில்லை. ஆனால் நீர் எங்கள் மார்க்கத்தைக் கைவிட்டுவிட்டு வேறு மதத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டால் அது வேறு விஷயம்.'

எஜீது கோபத்தால் கொதித்தெழுந்தவராய் பீபீ ஜைனபை நோக்கி,

'சன்மார்க்கத்திலிருந்து உம் தந்தையும், உம் சகோதரருந்தான் வெளியேறியவர்கள்.''

ஜைனப்: 'அல்லாஹ்வின் மார்க்கத்திலிருந்து, என் தந்தையின் மார்க்கத்திலிருந்து, என் சகோதரரின் மார்க்கத்திலிருந்து, என் பாட்டனாரின் மார்க்கத்திலிருந்துந்தான் நீரும் உம் தந்தையும் நேர்வழி பெற்றீர்கள்.'

யஜீது: 'அல்லாஹ்வின் விரோதியே! நீ சொல்லுவது பொய்,' என்று கூக்குரலிட்டார்.

ஜைனப்: 'இல்லை, நீர்தான் அக்கிரமமாக ஆட்சிக்கு வந்திருக்கிறீர்; எவ்வித நியாயமுமின்றி ஏசிப் பேசுகிறீர்; உமது பலங்கொண்டு மக்களை அடக்கி ஆளுகிறீர்,' என்று இடித்துரைத்தார்.

இந்தத் திரமிக்க உரையாடலைக் கேட்டு யஜீது வெட்கித் தலைகுனிந்தார்; அடுத்து அவர் ஏதும் பேசவில்லை.

மீண்டும் அந்த ஷாம் தேசவாசி எழுந்து, முன் போலவே பீபீ பாத்திமா பின்து அலீயை அன்பளிப்பாகக் கோரினான். யஜீது கடுங் கோபமுற்றவராக, ''அடா, அற்பனே! விலகி நில்; இறைவன் உனக்குச்

சாவின் சன்மானத்தைக் கொடுப்பானாக!'' என்று கடிந்துரைத்தார்.

நெடு நேரம் நிசப்தம் நிலவியது. அதன்பின் யஜீது, ஷாம் தேசத் தலைவர்களையும், அமீர்களையும் நோக்கி, 'அஹ்லபைத்துகள் விஷயத்தில் நாம் எவ்வாறு நடந்து கொள்ளலாம்' என்று வினவினார். சிலர் வெறித்தனத்தைத் தூண்டியவர்களாய், 'இவர்களைக் கடுமையான முறையில் நடத்தவேண்டும்,' எனக் கூறினர். ஆனால் நுஃமான் இப்னு பஷீர் என்பவர், ரசூலுல்லாஹ் (ஸல்) அவர்கள் இந்தக் கோலத்தில் இவர்களைக் கண்டால் எப்படி நடந்து கொள்வார்களோ அவ்வாறு நடந்து கொள்ளுமாறு ஆலோசனை கூறினார்.

இடையில் பீபீ பாத்திமா பின்த் ஹுஸைன், 'இவர்கள் ரசூலுல்லாஹ் வீட்டுப் பெண்மணிகள்,' என்று நினைவு படுத்தும் முறையில் கூறினார்.

இத்தருணத்தில், அஹ்லுலபைத்துகளும் இமாம் ஹுஸைன் அவர்களின் சிரசும் யஜீதின் சபைக்கு வந்துள்ள விஷயம் அந்தப்புரத்திலிருந்த அவரின் குடும்பப் பெண்மணிகளுக்கு எட்டியது. அவரின் மனைவி ஹிந்த் பின்து அப்துல்லாஹ் புர்காவுடன் வெளியேறி வந்து, 'அமீருல் மூமினீன்! பாத்திமா நாயகியின் புதல்வர் இமாம் ஹுஸைனின் சிரசு இங்கு வந்திருக்கிறதா?' என்று துக்கம் பீறிடக் கேட்டார்.

'ஆமாம், அழுங்கள்; நன்றாக அழுங்கள். ரசூல்லாஹ்வின் பேரர், குறைஷிகுல மூலவர்மீது ஒப்பாரி வைத்து அழுங்கள். கொடியோன் சுமய்யாவின் மகன் (இப்னுஜியாத்) மிகவும் அவசரப்பட்டு விட்டான்; கொலைபாதகம் புரிந்துவிட்டான். இறைவன் அவனையும் கொன்றொழிப்பானாக!' என்று யஜீது தம் மனைவியிடம் கூறலானார்.

## யஜீதின் சமாதானம்

பின்னர் யஜீது அவையிலிருந்தோரை நோக்கி, 'இவ்வாறெல்லாம் ஏன் நேர்ந்தது என்று உங்களுக்குத் தெரியுமா? இவர்கள் இந்நிலையை அடைந்த காரணம் யாது என்பதை நீங்கள் அறிவீர்களா? இது ஹுஸைனு

டைய தவறான முடிவின் விளைவாகும். அவருடைய கருத்து, தம் தந்தை அலீ (ரலி) என் தந்தையை விட உயர்வானவர் என்பதும், தம் அன்னை (பாத்திமா நாச்சியார்) என் தாயைக் காட்டினும் மேலானவர் என்பதும், தம் பாட்டனார் (ரசூலுல்லாஹி (ஸல்) அவர்கள்) என் பாட்டனாரை விடச் சிறந்தவர்கள் என்பதும், தாமும் என்னைவிடக் கிலாபத்துக்கு அதிகம் அருகதையுள்ளவர், உரிமையுடையவர் என்பது மாகும்.

'இதன் உண்மையை நீங்கள் கவனிக்க வேண்டும். அவருடைய தந்தையும் என்னுடைய தந்தையும் ஸிஃப்பீன் யுத்தத்தின்போது அல்லாஹ்விடம் நியாயம் கோரி நின்றனர். அது சமயம் அல்லாஹ் யாருக்கு எத்தகைய தீர்ப்பை அருளினான் என்பதை நீங்களும் உலகமும் கண்டு கொண்டது.

'என் ஆன்மாவின் மீது பிரமாணமாகக் கூறுகிறேன், என் அன்னையைக் காட்டிலும் பீபீ பாத்திமா நாச்சியார் அவர்களே உயர்வானவர் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன்.

'என் ஆன்மாவின்மீது பிரமாணமாக, அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் ஈமான் (நன்னம்பிக்கை) கொண்ட எந்த முஸ்லிமும் ரசூலுல்லாஹி (ஸல்) அவர்களுடன் எவரையும் ஒப்பிடுவது எவ்வாற்றானும் சாலாது.

'ஹுஸைன் தமது முடிவில் தவறிழைத்து விட்டார்; 'அல்லாஹ், தான் நாடியவர்களுக்கு ஆட்சியை அளிக்கிறான்; தான் நாடியவர்களை ஆட்சியிலிருந்து நீக்கிவிடுகிறான்......' என்னும் திருவசனத்தை அவர் எண்ணிப் பார்க்கவில்லை!' என்றார்.

## ஆறுதலும் தேறுதலும்

பின்னர், பரிசுத்தக் குடும்பத்தார்களைத் தமது மாளிகையிலேயே தங்கியிருக்குமாறு கூறி அந்தப்புரத்துக்கு அனுப்பிவைத்தார் யஜீது. இவர் இமாமவர்களுக்கும் அஹ்லெபைத்துகளுக்கும் உறவினரல்லவா? இவரின் அத்தை உம்முஹபீபா அவர்களைத்தானே பெருமானார் (ஸல்) அவர்கள் அபிசீனிய மன்னர் நஜ்ஜாஷியைக் கொண்டும் திருமணம் புரிந்திருந்தார்கள்!

எனவே, பரிசுத்த குடும்பத்தார் எஜீதின் அந்தப்புரத்துள் நுழைந்ததும் ஆங்கிருந்த பெண்களெல்லாம் ஓடிவந்து இவர்களைக் கட்டிப்பிடித்துக்கொண்டு கூக்குரலிட்டு அழுது பிரலாபித்தனர். இந்தச் சோக நிலை மாளிகையில் மூன்று தினங்கள் வரை நீடித்தது.

எஜீது அந்தப்புரத்தைப் பார்வையிட வந்தபொழுது இமாம் அவர்களின் திருப்புதல்வியான ஃபாத்திமா அவரை நோக்கி, 'என்ன! ரசூலுல்லாஹ் அவர்களின் புத்திரிகள் அடிமைகளாகி விட்டனரா?' என்றார். 'என் சகோதரரின் மகளே! ஏன் அப்படிக் கேட்கிறீர்?' என்று வினவினார் யஜீது. 'எங்கள் காதணிகளைக்கூட உங்கள் வீரர்கள் விட்டுவைக்கவில்லையே! அனைத்து ஆபரணங்களையும் அதட்டிக்கேட்டுக் கழற்றி வாங்கிக்கொண்டார்களே!' என்றார் ஃபாத்திமா பின்து ஹுஸைன் (ரலி). உடனே யஜீது, 'அப்படியா? அதைப்பற்றிக் கவலைப்படவேண்டாம். யார், யார் எதை இழந்தீர்களோ அதைப்போல் இரட்டிப்பாகவும் மும்மடங்காகவும் பெற்றுக்கொள்ளுங்கள்' எனக் கூறி, அவற்றை அவர்கள் கேட்குமளவு செய்து கொடுக்குமாறு உத்தரவிட்டார்.

இதைக்கண்ட இமாமவர்களின் திருப்புதல்வி சக்கீனா, பெரிதும் ஆச்சரிய முற்றவராய், 'அல்லாஹ்வின் ஆணைகளை மறுப்பவர்களுள் எஜீதைவிட நல்லவர் எவரையும் நான் கண்டதேயில்லை' என அர்த்தபுஷ்டியுடன் புகழ்ந்து கூறினார்.

யஜீது அனுதினமும் காலை, மாலை உணவு அருந்தும்போது ஜைனுலாபிதீன் அவர்களையும் அருகில் வைத்தே உணவு கொள்வார்; அவருடன் நித்திரை கொள்ளச் செய்வார்.

ஒரு நாள், இமாம் ஹஸன் (ரலி) அவர்களின் சிறுவயதுப் பையன் உமரை அருகில் அழைத்து, தம் மகன் காலிதைச் சுட்டிக்காட்டி, 'இவனுடன் நீ சண்டை போடுகிறாயா?' எனக் கேட்டார் யஜீது. உடனே சின்னஞ் சிறுவரான உமர், துடுக்காக, 'என் கையில் ஒரு கத்தியையும், அவன் கையில் ஒரு கத்தியையும் கொடுத்துச் சண்டை போடச் சொல்லுங்கள்; பிறகு பாருங்கள்' என்றார். இந்தத் துணிச்சலான பதிலைக்

கேட்டு எஜீது உரக்கச் சிரித்துவிட்டு, உமரை வாரி அணைத்துத் தம் மடிமீது அமரவைத்துக் கொண்டு, 'பாம்பின் குட்டி பாம்புதான்' என்றார்.

அஹ்லபைத்துகள் சில நாள் எஜீதின் மாளிகையில் தங்கியிருந்ததில் அங்கு நடந்த விருந்தோம்பல், கூறப்பட்டு வந்த ஆறுதல் மொழிகளால் அவர்களின் மனதுகள் கொஞ்சம் நிம்மதியடைந்தன. இப்போது அவர்களை மிக்க கௌரவத்தோடு மதீனா நகருக்கு அனுப்பி வைக்க எண்ணங்கொண்டார் எஜீது. அவர்கள் திமிஷ்கில் தங்கியிருந்த நாட்களில் யஜீது தமது அவையில் அவர்களைப்பற்றி அடிக்கடி பிரஸ்தாபிப்பதும், 'நான் சற்று பொறுமையைக் கையாண்டிருக்க வேண்டும். ஹுஸைனை எனது இல்லத்தில் தங்கவைத்து அவருடைய கோரிக்கையைப் பரிசீலித்திருக்கவேண்டும். அதனால் எனது வலிமை சற்று குன்றியபோதிலும் நான் கவலைப்பட்டிருக்க மாட்டேன். அதன்மூலம் ரசூலுல்லாஹ் அவர்களுடைய உறவுமுறை பாதுகாக்கப்பட்டிருக்கும். இப்னு சுமய்யாமீது அல்லாஹ் 'லஃனத்'தை (கோபப் பார்வையை) இறக்கட்டும்! அவன்தான் ஹுஸைனைச் சண்டைக்கு நிர்ப்பந்தித்தவன். ஹுஸைன் எனது கையில் ஒப்பந்தம் செய்து கொடுத்து விட்டு முஸ்லிம்களின் எல்லைப் பிரதேசங்களில் போரிடச் செல்வதாகக் கூறினார். அவ்விதமிருந்தும் அவன் அவருடைய பேச்சை ஏற்கவில்லை; அவரைக் கொன்றுவிட்டான். அவரை அவன் கொலை புரிந்ததால் அனைத்து முஸ்லிம்களும் என்மீது வெறுப்படைகின்றனர். இப்னு ஜியாதின்மீது அல்லாஹ்வின் சாபம் இறங்கட்டும்!' என்று கூறுவதுமாக இருந்தார்.

## பரிசுத்த குடும்பத்தார் மதீனாப் பயணம்

பின்னர் நுஃமான் பின் பஷீர் என்பவரை அழைத்து, பரிசுத்த குடும்பத்தாரின் பயணத்திற்கு வேண்டிய சாமான்களெல்லாம் சேகரம் செய்யச் சொல்லியும் நம்பிக்கையுள்ள பெருந்தன்மை வாய்ந்த ஒருவரின் பொறுப்பில் மதப்பற்றுள்ள பணிப் பெண்கள் சிலரையும், மதீனா நகர் வரை பாதுகாப்புக்காகச்

சில குதிரை வீரர்களையும் உடனனுப்ப வேண்டுமென வும் எஜீது உத்தரவு செய்தார். அதன்படி எல்லாம் பூர்த்தியாயின.

பயண நாளன்று எஜீது, ஜைனுலாபிதீன் அவர்களை அழைத்து அருகிருத்தி,

''இப்னு ஜியாதின் மீது ஆண்டவனின் கோபப் பார்வை விழட்டும்! நான் யுத்த களத்தில் இருந் திருப்பேனாயின் உமது தந்தை கூறியதை ஏற்றுக் கொண் டிருப்பேன். அவரைப் பாதுகாக்க எல்லா ஏற்பாடுகளும் செய்திருப்பேன்; இவ்விஷயத்தில் என் மகனோ அல்லது பந்துக்களோ பலியானாலும் பொருட்படுத்தமாட் டேன். என் செய்யலாம்? இறைவனின் நாட்டம் எதுவோ அது நடந்தேறியுள்ளது. இனி நீர் என்னுடன் அடிக்கடி கடிதத் தொடர்பு கொண்டிருக்கவும். உங்க ளுடைய தேவை எதுவாயிருந்தபோதினும் உடனுக் குடன் எனக்குத் தெரியப்படுத்தவும்; நான் அவற்றைக் குறைவின்றி நிறைவேற்றித் தருவேன்,'' என்று ஆறுதல் மொழி பகர்ந்தார்.

பரிசுத்த குடும்பத்தார்களையெல்லாம் இன்முகத் துடன் நின்று எஜீது பயணமனுப்பி வைத்தார். நற் குணம் வாய்ந்த நுஃமான்பின் பஷீரின் பாதுகாப்பில் அஹ்லெபைத்துகளின் காபிலா மதீனாவை நோக்கித் தன் பிரயாணத்தைத் துவங்கியது.

பயணத்தில் பாதுகாப்பு வீரர்களாகச் சென்றவர் கள் வழி நெடுகிலும் தங்கள் கடமைகளைக் குறையே துமின்றி பரிவோடும் உள்ளன்போடும் ஆற்றி வந்தனர். மன்ஜில்களில் தாமதிக்க நேரும்பொழுது பரிசுத்த குடும்பத்துப் பெண்மணிகள் பர்தா அனுஷ்டிப்பவர்கள் என்பதற்காக அவர்கள் எட்டத்தில் சென்று தங்கள் கூடாரங்களை அடித்துக்கொள்வர். இவ்வாறு அவ்வீரர் கள் நடந்து கொள்வதைக்கண்ட அஹ்லெபைத்துகள் அவர்களைப் பாராட்டிப் புகழ்ந்தனர்.

காபிலா மதீனாவை அடைந்ததும் வீரர்கள் தங்க ளுக்கு ஆற்றிய தொண்டு, உதவிக்காக எவ்விதப் பிரதி உபகாரம் செய்வதென-சன்மானம் வழங்குவதெனச்- சிந்தித்தவர்களாய் பீபீ பாத்திமாவும் அதிதை பீபீ

ஜைனபும் தங்கள் கைகளில் அணிந்திருந்த வளையல்களையும், வங்கிகளையும் (ஒருவிதத் தோளணி) கழற்றிக் கொடுக்க முன் வந்தனர். ஆனால், நுஃமான்பின் பஷீர் அவற்றை ஏற்க மறுத்தவராய், 'நாங்கள் இவ்வுலக நன்மைக்காகவும் பிரதிபிரயோஜனத்துக்காகவும் சேவையாற்றி இருப்போமாயின் நீங்கள் அளித்தவற்றை மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொள்வோம். ஆனால் இறைவன் மீது பிரமாணமாகக் கூறுகிறேன், நாங்கள் செய்த இப்பணிகளெல்லாம் அல்லாஹ்வுக்காகவும் அவனது ரசூலுக்காகவும் ஆற்றிய சேவைகளேயாகும்,' எனக் கூறினார்.

அஹ்லெபைத்துகள் வந்து கொண்டிருக்கிறார்கள் என்று செய்தி பல நாட்களுக்கு முன்பே மதீனாவிலுள்ளவர்களுக்குக் கிடைத்துவிட்டது. எனவே, அவர்கள் வந்து சேர்ந்ததும் மதீனாவிலிருந்த ஹாஷிம் குலத்துப் பெண்மணிகள் அழுது புலம்பியவர்களாக இல்லங்களை விட்டும் வெளியேறி வந்தனர். முன்னால் வந்த இமாமவர்களின் சிறிய தந்தை உகைல் பின் அபூதாலிப் அவர்களின் புதல்வி,

"திரு நபியவர்கள் உங்களிடம் 'நீங்கள் என் கடைசி உம்மத்துகளாயிற்றே, என் மக்கள், என் குடும்பத்தாரிடம் எப்படி நடந்துகொண்டீர்கள்?' என்று கேட்டால் நீங்கள் யாது பதில் சொல்வீர்கள்? அவர்களில் சிலர் கைதிகளாகவும், சிலர் இரத்தத்தில் தோய்ந்தவர்களுமாக அல்லவோ இருக்கின்றனர்!" என்னும் பாடலைப் பாடி அழுதுகொண்டே முன்னேகி வந்து கொண்டிருந்தார்.

கர்பலாவின் கோரக் கொலைச் சம்பவம் எஜீதுக்கு முஸ்லிம் உலகின் வெறுப்பையும் சாபத்தையும் என்றென்றும் நிலைபெறச் செய்துவிட்டது. அமீர் முஆவியா (ரலி) தம் மகன் எஜீதுக்காக அரும்பாடுபட்டுக் கட்டிய அந்த சாம்ராஜ்யம் நீண்டகாலம் அவர் வழித்தோன்றல்களின் கையில் நிலைத்திருக்கவில்லை. இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின் முன்னறிவிப்புப்படி, அவர்கள் வமிசத்தாரான ஹாஷிம்குல அப்பாஸியாக்களிடக்கு ஹிஜ்ரி 160-ல் அந்த சாம்ராஜ்ஜிய ஆட்சி

பீடம் மாறி விட்டது; உமய்யாக்கள் வஞ்சந் தீர்க்கப் பட்டு சிதைந்து சின்னபின்னமாகி உருக்குலைந்து போயினர்.

எஜீது இறந்தபின் கூஃபா, முக்தாரின் கைக்கு வந்தது; அவரது இரும்புக்கரம் கூஃபா துரோகிகளை மிகக் கொடூரமாகப் பிடித்தது. இமாம் அவர்களின் கொலைக்குக் காரணமாயிருந்த கொடியவர்கள் வேட்டையாடப் பட்டனர்; தேடிக் கண்டுபிடித்துக் கொல்லப்பட்டனர்; அந்தக் கேடன் ஷிம்ருப்னு தில்ஜவ்ஷான் தப்பியோட எத்தனிக்கையில் கண்டு பிடிக்கப்பட்டு சித்திரவதை செய்யப்பட்டு, கண்டந் துண்டமாக வெட்டப்பட்டு பசி நாய்களுக்கு இரையாக்கப் பட்டான். மகாதளபதி அம்ருப்னு ஸஃதும், அவர் மகனும், சிரச்சேதம் செய்யப்பட்டனர். அவர்களின் தலைகள் ஜெய்னுலாபிதீனுக்கு அனுப்பப்பட்டன.

எல்லாரினும் கொடியவனான இப்னுஜியாத் சண்டையில் கொல்லப்பட்டு அவனது தலை, இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின் சிரம் எவ்வாறு அவனிருந்த 'கஸ்ரெ அம்மாரா' மாளிகைக்குக் கொண்டு வரப்பட்டு அவன் முன் வைக்கப்பட்டதோ, அதே போன்று, அதே மாளிகையில், முக்தாரின் முன் கொண்டு வந்து வைக்கப்பட்டது. பின், இவனது தலை ஜெய்னுலாபிதீன் அவர்களுக்கு அனுப்பப்பட்டது.

## இமாமின் குடும்பம்

இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் பல பெண்களை மணந்துள்ளனர். அவர்களில் (1) லைலா, (2) ஹுபாப், (3) ஹர்ரார், (4) சக்கீனா, (5) கஜ்ஜாலா என்பவர்கள் குறிப்பிடத் தக்கவர்கள்.

அவர்களுக்குப் பல குழந்தைகள் பிறந்தன; அவர்களில் அலீ அக்பர், அப்துல்லாஹ், மற்றொரு சிசு ஆகியோர் கர்பலாவில் ஷஹீதாயினர். ஜைனுலாபிதீன் மட்டுமே உயிர் தப்பினார்-எஞ்சினார்; இவரின் மூலம் தான் ரசூலுல்லாஹ்வின் வமிசம் பரவலாயிற்று.

இமாம் அவர்களுக்கு சக்கீனா, பாத்திமா, ஜைனப் என்ற மூன்று பெண் மக்கள் இருந்தனர்.

இமாம் ஹஸன் அவர்கள் அமீர் முஆவியா அவர்களுடன் கண்ட உடன்படிக்கையில் ஆண்டுதோறும் இமாம் ஹுஸைன் அவர்களுக்கு இரண்டு லட்சம் திர்ஹம் (ரூ. 50,000) உபகாரச் சம்பளம் கொடுத்து வரவேண்டுமெனக் கூறப்பட்டிருந்தது. அதன்படி அவர்கள் பெற்று தாராளத் தன்மையுடன் வாழ்ந்தார்கள்.

## சில சிறப்புக்கள்

### மார்க்க ஞானம்

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் காலமானபோது இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் விளையாட்டுப் பராக்குள்ள ஐந்து வயதுச் சிறுவராயிருந்ததால் ரசூலுல்லாஹ் அவர்களைக் கொண்டும் அதிகமாக நேரடி அறிவு, அனுபவம் பெற வாய்ப்பில்லாது போய் விட்டது. ஆனாலும், தங்களின் அன்புத்தந்தை, அறிவின் தலைவாயில், ஹலரத் அலி (ரலி) அவர்களைக் கொண்டும் சிறந்த அறிவையும், கலாஞானத்தையும், அனுபவங்களையும் கிடைக்கப் பெற்றார்கள்.

அப்துல்லாஹ் பின் ஜுபைர் (ரலி) அவர்கள் இமாமவர்களைவிட வயதால் அதிக முதுமை பெற்றிருந்தாலும் சில சமயங்களில் தம் சந்தேகங்களை இமாமவர்களைக் கொண்டும் நிவர்த்தித்து கொள்வார்கள்.

ஒரு சமயம் கைதி ஒருவனை விடுதலை செய்வது குறித்து இப்னு ஜுபைருக்கு சந்தேகம் எழுந்தது. உடனே அவர்கள் இமாம் ஹுஸைன் அவர்களிடம் வினவினார்கள். அதற்கு இமாம் அவர்கள், எவர் பொருட்டு அந்தக் கைதி யுத்தம் செய்தாரோ அவரே கைதியை மீட்கவேண்டும் என பதிலிறுத்தார்கள்.

மற்றொரு சமயம், பால் குடிக்கும் குழந்தைக்கு 'நபகா' (பால் குடிப் பணம்) அளித்து வருவது பற்றிய பிரச்சினை எழுந்தது. அதற்கு இமாமவர்கள், குழந்தை பிறந்து சப்தம் கொடுக்கத் துவங்கியது முதல் அதற்கு 'நபகா' கொடுத்து வரவேண்டுமென விடை பகர்ந்தார்கள்.

இங்ஙனமே, நின்றுகொண்டு நீர் அருந்தலாமா என்று கேட்கப்பட்ட பொழுது இமாமவர்கள் தங்கள்

அருகில் நின்ற ஒட்டகத்தின் மடுவிலிருந்து பால் கறந்து நின்று கொண்டே அருந்தினார்கள்.

அது போல் நின்று கொண்டு உணவருந்துவதிலும் பாதகமில்லை என்றே கூறினார்கள். உதாரணத்துக்காக, பொரித்த ஆட்டிறைச்சியை எடுத்துக் கொண்டு அதைத் தின்று கொண்டே பாதையில் நடந்து செல்வார்கள்.

## பேச்சு வன்மை

இமாமவர்கள் மார்க்கக் கலா ஞானத்தில் சிறந்து விளங்கியதைப் போல் பேச்சு வன்மையிலும் நல்ல வாய்ப்பினைப் பெற்றிருந்தார்கள். அவர்கள் காலத்தில் வாக்கு வன்மையில் சிறப்புப் பெற்ற பல பெரியார்களிருந்தனர். அதற்கொப்ப இமாமவர்களும் வாக்கு சாதுரியம் அடைந்திருந்தார்கள். ஹலரத் அலீ (ரலி) அவர்கள் மாபெரும் பேச்சாளர் என்பது அவர்களின் 'நஹ்ஜுல் பலாகா' என்னும் பிரசங்கத் தொகுப்பின் மூலம் நிரூபணமாகியுள்ளது. பெருமானாரின் பேரரான இமாம் ஹுஸைன் அவர்கள் பெற்றிருந்த பேச்சுத்திறன் அவர்களின் பாரம்பரியத்தைச் சார்ந்த ஒன்றாகும்.

இமாம் அவர்களின் பேச்சு அர்த்தபுஷ்டியுள்ள சிறு சிறு சொற்றொடர்களால் அலங்காரம் பெற்று விளங்கும். எடுத்துக்காட்டாக, 'உண்மையே சிறப்புக்குரியதாம்; பொய் இயலாமையின் அடையாளம்; இரகசியம் பாதுகாப்புப் பொருளாம்; அக்கம் பக்கத்தாரின் உரிமை நெருக்கமானதாம்; உதவி சினேகிதமாம்; கிரியை அனுபவமாம்; சற்குணம் வணக்கமாம்; மௌனம் அழகானதாம்; ஈயாமை மிடிமையாம்; தானம் செல்வமாம்; மிருதுவாயிருப்பது புத்திசாலித்தன்மாம்' என்பன போன்ற சொற்றொடர்கள் அவர்களின் பேச்சுக்களில் விரவிக் காணப்படும்.

## தொழுகை

இமாம் ஹுஸைன் அவர்களின் தனிச் சிறப்பு அவர்களின் மார்க்கப் பேணுதல் ஆகும். அல்லாஹ்வை அதிகம் வணங்குவதில் அவர்கள் பெரிதும் உவப்புடையவர்களாக இருந்து வந்தார்கள். சில வேளைகளில்

அவர்கள் இரவிலும் பகலிலுமாக 1000 ரகஅத்துகள் நபில் தொழுகை தொழுதுவிடுவார்கள்.

அராபியர்களுள் பிள்ளைகுட்டிகள் அதிகமுள்ளவர்கள் பெரிதும் போற்றப்படுவர். குறைவாயுள்ளவர்களை இழிவாகப் பேசுவர். ஒரு சமயம் ஒருவர் இமாம் ஜைனுலாபிதீன் அவர்களைப் பார்த்து, 'தங்கள் தந்தையாருக்கு சந்ததியார் மிக மிகக் குறைவாயிருக்கின்றனரே! யாது காரணம்?' என்று சிறிது குத்தலாகக் கூறினர். அதற்கு ஜைனுலாபிதீன் அவர்கள், 'என் தந்தையாரவர்கள் இரவு காலங்களில் ஆயிரம் ரகஅத்துக்கள் வரை நபில் தொழுபவர்களாயிற்றே! பெண்களை (மனைவியரை)ச் சந்திக்க அவர்களுக்கு நேரம் எப்படிக் கிடைக்கும்?' என எடுத்துக் காட்டினார்கள். இதுபோலவே அவர்கள் நோன்பும் அதிகமாக நோற்பவர்களாயிருந்தார்கள்.

## ஹஜ்

இமாம் அவர்கள் தமது வாழ்நாளில் செய்த ஹஜ்ஜுகளில் பெரும்பாலானவை—ஏன்? எல்லாம் என்றுகூட ஒரு வகையில் சொல்லலாம்—கால்நடையாகவே நிறைவேற்றப்பட்டவையாகும். ஜுபைர் பின் பக்கர் முஸ்அப் கூறுகிறார், 'ஹலரத் ஹுஸைன் (ரலி) அவர்கள் 25 ஹஜ்ஜைக் கால்நடையாகவே சென்று நிறைவேற்றியிருக்கிறார்கள்.' என்று. மதீனாவிலிருந்து மக்கா 270 மைல் தூரம். ஒரு ஹஜ்ஜை நிறைவேற்ற 540 மைல்கள் நடக்க வேண்டும்.

## ஈகை

இமாம் ஹுஸைன் அவர்களுக்கு ஆண்டவன் செல்வத்தைத் தாராளமாக வழங்கியிருந்ததுபோல் தான தர்மம் வழங்குவதில் தாராளத் தன்மையையும் விசாலமாக அளித்திருந்தான். தர்மம் புரிவதும் உபகாரஞ் செய்வதும் அவர்களுக்கு அதிகம் மகிழ்ச்சியளிப்பதாயிருந்தது. உதவி கோரி வருபவர் எவரும் வெறுங்கையுடன் திரும்பியதில்லை.

## எளிமை

இமாம் ஹுஸைன் அவர்கள் அமைதியும் எளிமையும் உடையவர்கள். பெரும்பாலும் பள்ளிவாசலில் தான் வணக்கத்தில் ஈடுபட்டவராகக் காணப்படுவர்.

ஒரு சமயம் இமாமவர்கள் குதிரைமீது வீதிவழியே சென்றபோது பாதை ஓரத்தில் சில பக்கீர்கள் அமர்ந்து உணவு புசித்துக் கொண்டிருந்தனர். இமாமவர் களைக் கண்டதும் உணவுண்ண அழைத்தனர். உடனே அவர்கள் குதிரையைவிட்டும் இறங்கி அப்பக்கீர் களுடன் அமர்ந்து உணவு கொண்டார்கள். மேலும், "பெருமை கொள்ளுபவர்களை அல்லாஹ் நேசிக்க மாட்டான்" எனவும் கூறிப் போந்தனர்.

## சத்தியங்காத்தல்

இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் நியாயத்தை யும், உரிமையையும், சத்தியத்தையும் விட்டுக்கொடுக்க மனங்கொள்ளவில்லை; இமாம் ஹஸன் (ரலி) அவர் களின் முடிவை எதிர்த்தார்கள்; வாதாடினார்கள்; அல்லாஹ்வினால் நிர்மாணிக்கப் பெற்ற சத்திய சன் மார்க்கக் கடமைகள் சரிவரக் கடைப்பிடிக்கப்பட வேண்டும், இயங்க வேண்டும் என்பதில் ஆர்வத் துடிப்பு கொண்டார்கள்; எனவே தான் எஜீது கலீபாவாவதை எதிர்த்தார்கள்; ஹாஷிம் - உமய்யா விரோத உணர்ச்சி காரணமாக அல்ல!

## சுயநலமின்மை

அமீர் முஆவியா ஆட்சிக்கு வருவது இமாம் ஹுஸைன் அவர்களுக்குப் பிடித்தமில்லாதிருந்த போதிலும் அண்ணன் ஹஸன் (ரலி) அவர்கள் உடன் படிக்கை கண்டதன்பின் குழப்பத்திற்கு இடம் தரும், அல்லது ஒப்பந்தத்தை மீறும், எந்தச் செயலையும் எச் சந்தர்ப்பத்திலும் அவர்கள் புரியவில்லை.

யஜீதுக்குப் பிரமாணம் செய்து கொடுத்திருந்தால் கர்பலாவின் கோர நிகழ்ச்சி சரித்திரத்தில் இடம்பெற் றிராதெனை எண்ணுவாருமுளர். இமாம் ஹஸன் (ரலி) அவர்கள் முஆவியாவுடன் சமாதானங் கண்டு ஒப்பந் தம் செய்துகொடுத்திருந்துங்கூட அவர்களை உயிருடன் வாழ விடுவது அபாயமெனக் கருதி வஞ்சகமாக நஞ்சி டப் பட்டார்களென்றால், இமாம் ஹுசைன் (ரலி) அவர்களின் பிரமாணத்தால் அன்னாருக்கு நன்மை கிடைக்கலாமென்று எவ்வாறு எதிர்பார்க்கலாம்?

மிகவும் நெருக்கடியான கட்டத்தில்தான் இமா மவர்கள் தமது எதிர்ப்பை வெளிப்படுத்தினார்கள்;

[illegible] இனி யஜீதுக்கு பணிவது மார்க்கத்தின் கோரிக்கைக்கு ஏற்றதாயில்லை என்பதை மனதில் கொண்டே, யஜீதின் அதிகாரப் பிரச்சினை எழுந்தபோது இமாமவர்கள் எதிர்ப்புத் தெரிவிக்க முன் வந்தார்கள். இது உணர்ச்சி வசப்பட்டு, அவசரப் பட்டு செய்த காரியமல்ல: ஆழ்ந்து சிந்தித்த பிறகே இமாமவர்கள் இந்த முடிவுக்கு வந்தார்கள்: 'கொடுமைக்கார அரசனுக்குமுன் சத்தியத்தை எடுத்துக் கூறுவதே தலைசிறந்த ஜிஹாதாகும்,' என்ற நபிமொழிக் கொள்கையை இமாம் ஹுஸைன் (ரலி) பின்பற்றினார்கள்.

## வீரத்தின் விடிவெள்ளி

'புலிக்குப் பிறந்தது பூனையாகி விடுமா?'' என்பது போல் அல்லாஹ்வின் புலி ஹலரத் அலீ-பாத்திமா புதல்வர் இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் எந்நிலையிலும் கோழையாகி விடுவார்களா? கடுமையான துன்பத்தினிடையேயும், பசி, தாகத்தைச் சகித்தவாறு சுற்றத்தார், குடும்பத்தாரைப் பறிகொடுத்த சோக நிலையிலும், போர்க்களமே தூள்பறக்கும் விதத்தில் இமாமவர்கள் போரிட்டார்கள். அவர்களின் சிம்மப் பார்வை எத்திசையில் திரும்புகிறதோ அப்பக்கம் நிற்கும் எதிரிப்படையினர் கால் கிளப்பி விரண்டோடிக் கொண்டிருந்தனர். நெருங்குவதற்கு எவரும் துணியவில்லை.

சரித்திராசிரியர்கள் கூறுகின்றனர்: 'அம்புப் படுகாயங்களினால் அவர்களின் புனித சரீரமே பொத்தலாடி சிதள் கிளம்பி நின்றது. ஆயினும் மன உறுதியில் அவர்கள் கிஞ்சிற்றும் தளர்ச்சி அடைந்தார்களில்லை: கால்கள் நடுங்கவில்லை: ஒரு கவிஞர் பாடுவதுபோல், ''இராணுவமில்லை; வீரருமில்லை; ஆதரவாளருமில்லை; ஆயினும்; எத்திசையில் திரும்பினாலும், எதிரிகள் அத்திசையில் வெருண்டோடுபவர்களாகவே இருந்தனர்: இறுதி மூச்சுவரை போரிட்டுக் கீழே சாய்ந்ததின் பின்னரே இமாமவர்கள் இன்ப ஷஹாதத்தைப் பருகினார்கள்'', என்று:

ரலியல்லாஹு அன்ஹும் வரலூ அன்ஹு!

பொருளடக்கம்

# தியாகச் செம்மல்

# இமாம் ஹுசைன் (ரலி)

ஜமால்

எழுதியது

பதிப்பாசிரியர் :

மௌலவி M. அப்துல் வஹ்ஹாப், M. A. B. Th.,

வெளியீடு :

சுலைமானியா பப்ளிஷர்ஸ்

28, நாராயண சாரங் கார்டன் தெரு, சென்னை - 600 001.

தொலைபேசி எண் : 517396    அஞ்சல் பெட்டி எண் : 1886

# பொருளடக்கம்

முதற் பதிப்பு : ஜூலை, 1980
இரண்டாம் பதிப்பு : செப்டம்பர், 1984
மூன்றும் பதிப்பு : பிப்ரவரி, 1990



பக்கங்கள் : 216

விலை : ரூ. 16-50

அச்சிட்டோர் :




தொலைபேசி : 510 152.

# பொருளடக்கம்

## முன்னுரை

இஸ்லாமிய வரலாற்றில் ஒட்டிக்கொண்டு பிறந்த இரு இரட்டைக் குழந்தைகள் பின்னர் முட்டிக் கொண்டு வாழ்ந்ததையும், அவர்களில் ஓர் இரட்டையரின் வழித் தோன்றல்கள் வெட்டிக்கொண்டு வீழ்ந்ததையும் காண்கிறோம். முதலாமவர் ஈசுவும் அவரின் இளவல் யஃகூபு (அலை) அவர்களுமாவர். தமக்கு முன் பிறந்த ஈசுவுடன் குதிங் காலில் கொழுவிய வண்ணம் யஃகூபு (அலை) அவர்கள் பிறந்த தனால் குதிங் காலோடு கொழுவி வந்தவர் என்று பொருள் படும் யஃகூப் எனப் பெயரிடப்பட்டார்கள்.

இரண்டாமவர் குறைஷி குலத்தில் தோன்றிய அப்துமனாஃபின் மக்களான அப்துஷ் ஷம்ஸூம் ஹாஷிமும் ஆவர். அவர்கள் இருவரும் ஒருவரின் நெற்றியோடு மற் றொருவர் ஒட்டியவர்களாகப் பிறந்தனர். பின்னர் கத்தி யால் அறுவை சிகிச்சை செய்வதே அவர்களிருவரையும் பிரிக்க வேண்டியதாயிற்று. இதைப் பார்த்துக்கொண்டி ருந்த அறிவாளர் ஒருவர் அவ்விரு சகோதரர்களும் அவர் களின் வழித்தோன்றல்களும் தங்களிடையே பிணங்கிக் கொள்வரென்றும், அப்பிணக்கு கத்தியால்தான் தீர்க்கப் படும் என்றும் கூறியதற்கேற்பவே பின்னர் நிகழ்ந்தது. அதன் உச்ச கட்டமே கர்பலா களத்தில் நடந்த நெஞ்சைப் பிளக்கும் கோர நிகழ்ச்சியாகும். அதில் அப்துஷ் ஷம்ஸின் மகன் உமையாவின் வழித்தோன்றலான யஜீதின் படை யினர் ஹாஷிம் குலவிளக்காம் எம்பெருமானார் (ஸல்) அவர் களின் அருமைத் திருமகள் பாத்திமா நாச்சியார் ஈன்ற அரு மந்த மாமகன் ஹுஸைன் (ரலி) அவர்களை எதிர்த்துப் போர் செய்தார்கள். முடிவு: முடியாட்சியை எதிர்த்துக் குடியாட்சிக்காக ஒரே குரல் எழுப்பிய, ஒரே சங்கநாதப் பேரொலி முழங்கிய அந்த வீர சிங்கம் உயிர் பொன்றியது. அவர்களின் குடும்பத்தினர்—ஜைனுலாபிதீன் என்ற காளை யைத் தவிர-அனைவரும் ஈவிரக்கமின்றிக் கொன்றொழிக் கப்பட்டார்கள். இத்துயரக் கதையையே கண்ணீரு

மையாகக் கொண்டு நெஞ்சை நெகிழ்விக்கும் வண்ணம் தீட்டியுள்ளார்கள் அண்ணன் ஜமால் அவர்கள் இந்நூலில்.

பனூ ஹாஷிம்களுக்கும், பனூ உமையாக்களுக்கும் இடையே நிகழ்ந்த பிணக்குகளிலிருந்து துவங்கி, பின்னர் உதுமான் (ரலி) அவர்களின் படுகொலையைப்பற்றி எடுத்துரைத்து, அதன்பின் அலீ (ரலி) அவர்களை எதிர்த்து முஆவியா (ரலி) போர் செய்த விவரங்களையும் கூறிப் பின்னர் கர்பலாக் களம் கண்ட கொடூரக் காட்சியை அவர்கள், இந்நூலில் விவரிக்கும்பொழுது நம் கண்கள் குளமாகின்றன, நெஞ்சம் பதை பதைக்கின்றது.

ஆனால் நாம் எவரைப் பற்றியும் யாதொன்றும் கூறுவதற்கில்லை. வரலாறு என்ற முறையில் படித்து விட்டு நாம் வாய்பொத்தி இருக்கவேண்டிய நிலையில்தான் இருக்கிறோம். ஏனெனில், இதில் வரலாற்று நாயகர்களாக வரக்கூடியவர்களெல்லாம் அண்ணல்நபி (ஸல்) அவர்களின் அருமைத் தோழர்களான ஸஹாபாப் பெருமக்களும் அவர்களின் அடுத்த தலைமுறையினரான தாபியீன்களுமாவர். அவர்களைப்பற்றி நம்முடைய சின்னஞ்சிறு நாவு கொண்டு யாதொன்றும் கூறுவதற்கில்லை. நாமென்ன? மாபெரும் இமாம்களெல்லாம் இவ்விஷயத்தில் மிகவும் பேணுதலாக இருந்திருக்கிறார்கள்.

இமாமுல் அஃலம், அபூஹனீபா (ரஹ்) அவர்களிடம் ஒருவர் சென்று, ''அலீ (ரலி) அவர்களுக்கும் முஆவியா (ரலி) அவர்களுக்கும் இடையே நிகழ்ந்த போர் பற்றித் தங்களின் கருத்து யாது?' என்று வினவியகாலை, ''நியாயத் தீர்ப்பு நாளின்போது நான் இறைவனின் முன்னிலையில் நிற்குங்கால் அவன் என்னிடம் எதைப்பற்றி விசாரிப்பானோ என்ற விசாரத்திலும் அச்சத்திலும் என் மனம் குழம்பிக்கொண்டிருக்கிறது. அவன் என்னிடம் தாங்கள் வினவும் விஷயம்

பற்றிக் கேட்கமாட்டாருதலின் நான் அதைப் பற்றி அதிக மாகச் சிந்திக்கவில்லை,'' என்று கூறிவிட்டார்கள்.

ஒரு தடவை மாபெரும் இறைநேசச் செல்வர் அப்துல்லாஹ் இப்னு முபாரக் (ரஹ்) அவர்களிடம், முஆவியா (ரலி) அவர்கள் மீது வெறுப்புக் கொண்ட ஒருவர் சென்று, ''முஆவியா சிறந்தவரா? உமர் இப்னு அப்துல் அஸீஸ் சிறந்தவரா?'' என்று வினவியபொழுது ''முஆவியா'' என்று மறுமொழி பகர்ந்தனர் அவர்கள். அதற்குக் காரணம் வினவப்பட்டபொழுது, அண்ணல் நபி (ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவர் முஆவியா (ரலி). மேலும், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தொழுகையில் ருகூவிலிருந்து நிமிரும் பொழுது 'ஸமி அல்லாஹு லிமன் ஹமிதா' என்று சொன்னதைக் கேட்டதும் 'ரப்பனு லகல் ஹம்து' என்று மறுமொழி பகர்ந்தவர்கள் அவர்கள். இத்தகைய பேறு உமர் இப்னு அப்துல் அஸீஸுக்குக் கிடையாது,'' என்று மறுமொழி பகர்ந்தார்கள் அம்மேதை.

அடுத்து யஸீதைச் சபிக்கக் கூடாதென்பது ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) அவர்கள் வழங்கிய தீர்ப்பாகும். 'யஸீத் ஓர் இறை நம்பிக்கையாளர். ஓர் இறை நம்பிக்கையாளரை மற்றோர் நம்பிக்கையாளர் சபிப்பது, மார்க்கத்தில் விலக்கப்பட்டுள்ளது. மேலும் யஸீது தாம் ஹுஸைன் (ரலி) அவர்களைக் கொன்றொழிக்குமாறு கட்டளையிட்டார் என்பதற்கு வரலாற்றில் ஆதாரமுமில்லை,'' என்று அவர்கள் ஆணித்தரமாக எடுத்துரைக்கிறார்கள்.

ஓரிரவு பக்தாதைச் சேர்ந்த பெரியார் ஒருவர் படுத்துறங்கும்பொழுது அலீ (ரலி) அவர்களைக் கனவில் கண்டனர். அப்பொழுது அவர் அலீ (ரலி) அவர்களை நோக்கி, ''அண்ணல் நபி (ஸல்) அவர்களும் தாங்களும் மக்காவை வெற்றி கொண்டபொழுது அபூசுப்யானின் இல்லத்தில்

நுழைந்தவர்களுக்கும் அபயம் அளிக்கப்படும் என்று கூறினீர்களே. ஆனால், கர்பலாவில் தங்கள் மகன் ஹுஸைனுக்கு என்ன நேர்ந்தது என்பதை பார்த்தீர்களா?'' என்று வினவினார்.

அதற்கு அவர்கள், ''நீர் இப்னு அஸ் ஸைஃபீ எழுதிய கவிதையைக் கேட்கவில்லையா? போய், அதனை அவர் வாயிலாகவே படிக்கக் கோரும்,'' என்று பதிலிறுத்தார்கள்.

விடிந்தெழுந்ததும் அப்பெரியார், கவிஞர் இப்னு ஸைஃபீயின் இல்லம் சென்று தாம் கண்ட கனவை விண்டபொழுது, அவரின் கண்கள் பனித்தன. ''இறைவன்மீது ஆணையாக, நான் இதனை எழுதியது எவருக்கும் தெரியாதே! சென்ற இரவுதானே நான் இதனை எழுதினேன்,'' என்று கூறி அதனைப் படித்துக் காண்பித்தார் அவர். அது வருமாறு:—

''நாங்கள் ஆட்சி செய்தபொழுது இரக்கம் எங்களின் இயல்பாக இருந்தது. ஆனால், நீங்கள் ஆட்சிக்கு வந்தபொழுது இரத்த ஆற்றை ஓடச் செய்தீர்கள். நீங்களோ சிறைப்பட்டோரைச் சிரச்சேதம்செய்வதே சரி என்று கொண்டீர்கள். ஆனால், நாங்களோ அவர்களை மனிதத் தன்மையுடன் மன்னிப்பதே மாண்பு என்று கண்டோம். நம்மிருவருக்கும் இடையேயுள்ள வேற்றுமை இதுதான். பாத்திரத்திலுள்ளதானே அகப்பையில் வரும்.''

ஆம்; பாத்திரத்திலுள்ளதுதான் அகப்பையில் வந்தது. உமையாக்களின் மறவாழ்வு ஹாஷிம்களின் அறவாழ்வை எதிர்த்து நின்றது. கர்பலா களத்தில் மறம் வென்றது போன்று தோன்றிய போதினும் உண்மையில் அறமே வென்றது. இன்று உலக முழுவதும் முடியாட்சி ஒழிக்கப்பட்டு குடியாட்சி நிறுவப்பட்டிருப்பதும், நிறுவப்பட்டுக் கொண்டிருப்பதும், இன்று யஸீதின் குலமே உலகில்

பூண்டோடு அற்றுப் போய்விட்டபொழுது ஹுஸைன் (ரலி) அவர்களின் ஒரே ஒரு மகன் ஒரே திருமகன் ஜைனுலாபிதீன் (ரஹ்) அவர்களின் வழித்தோன்றல்கள் உலகின் பல்வேறு நாடுகளிலும் பல்லாயிரக் கணக்காகப் பல்கிப்பெருகி வாழ்ந்து தீன் பயிர் வளர்த்து வருவதும் இதற்கான சிறந்த சான்று களாகும்.

அறம் வெல்லும்; மறம் வீழும் என்னும் மாபெரும் தத்துவம் இந்நூலின் இடையிடையே இழையோடி வரு வதை நாம் இந்நூல் முழுதும் காண்கிறோம். இந்நூலில் அண்ணன் ஜமால் அவர்கள் ஏராளமான செய்திகளை இனிமையாகக் கோவை செய்து படிப்போர்க்கு அலுப்பு ஏற்படாமல் ஆக்கித் தந்திருப்பது பாராட்டுக்குரியதாகும். மாபெரும் உயிர்த் தியாகியாகிய ஹுஸைன் (ரலி) அவர்களைப் பற்றிய இந்நூல் அவர்களைப் பற்றித் தமிழில் வெளிவந்துள்ள மாபெரும் நூல் என்பதில் ஐயமில்லை. வாழ்க ஜமால் அண்ணன்! வளர்க அவர்களின் இஸ்லாமியத் தொண்டு!!

சென்னை
29-7-1980

மு. ரு. மு. அப்துற்-றஹீம்

# பொருளடக்கம்

## நன்றியுரை

தியாகச் செம்மல் இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் இஸ்லாத்தின் - ஏன் உலகின் - ஜனநாயக முறையைக் காப்பதற்கு எஜீதின் முடியாட்சியை - எதேச்சாதிகார ஆட்சியை - எதிர்த்துப் போரிட்டுத் தம் பரிசுத்தக் குடும்பத்தாருடன் வீர மரணத்தைத் தழுவிய சோக வரலாற்றினை இந்நூல் வாயிலாக வாசகப் பெருமக்களுக்கு அளித்து ஆறுதல் பெறுகிறோம்.

எமது நூல்களான 'மனோகரமான மணவாழ்க்கை', 'ஏர்வாடி செய்யது இப்ராஹீம் வலியுல்லாஹ்', 'மறுவிலா முழுமதி' [நபிகள் நாயகம் (ஸல்)], 'அண்ணல் நபியின் அழகிய முன்மாதிரி', 'இறைவனும் மனிதனும்', 'யூசுப்-சுலைகா', 'பெருமானார் கண்ட போர் முனைகள்', 'சிந்தியுங்கள் செயல்படுங்கள்', 'மௌலானா முஹம்மது அலீ ஜௌஹர்', 'இஸ்லாமியப் புதுமலர்ச்சி' முதலிய நூல்களை படித்துப் பயனடைந்த வாசக அன்பர்கள் இந்நூலையும் வாங்கிப் படித்துப் பேராதரவு நல்க வேணுமாய் விழைகிறோம்.

இந்நூலினை வெளிக் கொணர்வதில் எமக்கு மிகுந்த ஊக்கமும் ஆக்கமும் அளித்துதவிய பெருந்தகை சங்கு ஹாஜி செய்யது அப்துல் காதர் அவர்களுக்கும், கவிஞர் மு. முஹம்மது மூஸா அவர்களுக்கும், சிறப்பான முன்னுரை வழங்கிய பன்னூலாசிரியர் அல்ஹாஜ் அப்துற்-றஹீம் அவர்களுக்கும், பதிப்பாசிரியர் மௌலவி எம். அப்துல் வஹ்ஹாப், எம். ஏ., பி. டிஎச் அவர்களுக்கும், எமது உளங் கனிந்த நன்றியினை உரித்தாக்குகிறோம்.

நூலுக்குச் சுவை கூட்டுவதற்காக, கவிஞர் சாந்தி தாசன் அவர்களின் 'தியாகச் செம்மலார்' கவிதை நூலிலிருந்தும் சில பாடல்களை எடுத்தாண்டுள்ளோம். அன்னார்க்கும் எமது நன்றி உரித்தாகும்.

சென்னை.

**ஜமால்**
'ஆசிரியர்'

# பொருளடக்கம்

பக்கம்



இ—1A

# பொருளடக்கம்

# பொருளடக்கம்

# பொருளடக்கம்